"வெண்மையான, சுத்தமான
# லக்ஸ் டாய்லட் சோப்பின்
## நுரை மிகவும் மிருதுவானது, நறுமணம் கமழ்வது."

என்கிறார் எம்.வி.ராஜம்மா




இந்தியாவில் தயாரித்தது.



இந்த வெண்மையான, சுத்தமான சோப்பின் பாதுகாப்பை உங்கள் சருமத்திற்கு அளித்து யௌவன காந்தியைப் பெறுங்கள். எம். வி. ராஜம்மா கூறுவதாவது: "சருமத்தை பட்டுப்போல் மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்ள லக்ஸ் டாய்லட் சோப்பின் மிக மிருதுவான, நறுமணம் கமழும் நுரையைப் போல் வேறெதுவுமில்லை. அது உங்கள் இயற்கை எழிலை மலரச் செய்கிறது. அன்றியும் அதன் நீடித்திருக்கும் நறுமணத்தையும் நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்."

"... அதனுல்தான் என் வதனத்தை அழகாக வைத்துக்கொள்ள லக்ஸ் டாய்லட் சோப்பையே நம்பியிருக்கிறேன்."

**முக்கிய செய்தி!**

தலைமுதல் கால்வரை கவர்ச்சி அளிக்க

## புதிய பெரிய சைஸிலும்

இப்பொழுது கிடைக்கிறது. இன்றே வாங்குங்கள்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகுதரும் சோப் ★**

LTS. 420-50 TM






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# அணு தெய்வம்!




பாங்காக்கில், இரண்டாவது தடவையாக ஸியாட்டோ மகாநாடு கூடியது.

மலர் 14

இதழ் 32




தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# மதுரை மன்னனை இழந்தோம்!

தமிழகம் தன் அருமைப் புதல்வர்களில் மிக அருமையானவர் ஒருவரை இழந்து விட்டது. மதுரை வைத்தியநாதய்யர் மறைந்து விட்டார். நாட்டிலுள்ள ஏழைகள் ஓர் ஏழை பங்காளரை இழந்து விட்டார்கள். ஹரிஜனங்கள் தங்களுக்குத் தாயினும் சாலப் பரிந்து தொண்டு புரிந்த ஒரு நல்ல ஆத்மாவை இழந்து விட்டார்கள். காங்கிரஸ் ஸ்தாபனமும், உண்மை எது நேர்மை எது என்று சமயம் வாய்த்தபோதெல்லாம் இடித் துரைத்த காங்கிரஸ் தலைவரை இழந்து விட்டது. சத்தியத்திற்காக நின்று வாதாடும் அறிவிற் சிறந்த வழக்கறிஞரை வக்கீல் கூட்டம் இழந்து விட்டது. ஹிந்து சமயம் சம்பிர தாயங்களின் காரணமாக ஒளி மங்கவிருந்த தர்மத்தை ஒளி வீசச் செய்யும் உண்மை ஆஸ்திகரை இழந்து விட்டது. தமிழ்ப் பொது மக்கள், சத்தியத்தின் மேன்மையையும், தியா கத்தின் சிறப்பையும் எடுத்து உணர்த்தி வழி காட்டிவந்த உத்தமரை இழந்து விட்டார்கள்.

நெற்றியில் நீறணிந்த திருமேனியைப் பார்த்தவர்களுக்கு, குறுகிய மனப்பான்மை யுள்ள வைதிகரோ என்ற எண்ணம் எழும். ஆனால் வைத்தியநாதய்யர்தான் முதன்முதலில் ஹரிஜனங்களை ஆலயங்களுக்கு அழைத்துச் சென்று சட்டத்தை மாற்றியமைக்கச் செய்தவர்.

மதுரையில் ஹிந்து முஸ்லிம் கலகம் ஏற்பட்டபோது தமது உயிரைத் திரணமாக மதித்துக் கலகத்திடை புகுந்து அடக்கியவர்.

சென்ற மாதம் 13-ந் தேதி சர்தார் வேதரத்தினம் அவர்களது கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலத்தில் நடந்த அன்னபூரணாலயத் திறப்பு விழாவுக்கு ராஜாஜி சென்றிருந்த போது அதற்குத் தலைமை வகிக்க மதுரை வைத்தியநாதய்யர் வந்திருந்தார். அதுதான் அவர் கடைசியாகக் கலந்து கொண்ட பொது நிகழ்ச்சி.

அன்று காலையே வந்த வைத்தியநாதய்யர் ராஜாஜியுடன் உப்பு சத்தியாக்கிரக நினைவுக் கம்பத்தைப் பார்க்கச் சென்றது முதல் எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டார். அப்பொழுதே அவர் உடல் நிலை மிக மோசமாக இருந்தது. அன்று மாலை சர்தார் வேதரத்தினம் அவர்கள் மதுரையில் வைத்தியநாதய்யர் சாதித்த தீரச் செயல்களை வர்ணித்தபோது அதைக் கேட்டவர்களுக்கு எப்படிப்பட்ட மகானை இன்று நாம் காணக் கொடுத்து வைத்திருக்கிறோம் என்று தோன்றி மெய் சிலிர்த்தது. ஆனால் விதியின் கொடுமை என்னவென்பது! அந்த வியப்பு உள்ளத்தை விட்டு நீங்குமுன்பே, நமன் அவரை நம்மிடமிருந்து பிரித்து விட்டான்.

அன்று வைத்தியநாதய்யர் "சர்தார் வேதரத்தினம் இங்கு புரிந்து வரும் பணியை, மகாத்மா காந்திக்கு உகந்த இந்த அரும் பணியைப் பார்க்க வேண்டும் என்று வெகு நாட்களாக எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் பல்வேறு காரணங்களால் இங்கு வர முடியாமலே போய்க் கொண்டிருந்தது. இப்பொழுதுகூட என் உடல் இருக்கும் நிலையில் டாக்டர்கள் இவ்வளவு தூரப் பிரயாணம் செய்ய வேண்டாம் என்றே தடுத்தார்கள். ஆயினும், பழைய நண்பர் வேதரத்தினம் புரியும் இந்த நற்பணியைக் காணப் பிறகு சந்தர்ப்பமும் சமயமும் வாய்க்குமோ வாய்க்காதோ என்று பயந்து இங்கு வந்து விட்டேன்! வேதரத்தினம் குருகுலத்தைக் கண்டு, பெருமகிழ்ச்சி எய்தினேன்" என்று கூறினார். ஆனால் காலன் அவர் 'சந்தர்ப்பம் வாய்க்குமோ' என்று கூறியதை அப்படியே எடுத்துக் கொண்டு தன் காரியத்தைச் செய்து விட்டான்!

# மலை அருவியும் துயர் அருவியும்

பொதிகை மலையிலிருந்து கும்மாளி போட்டுக்கொண்டு உல்லாசமாகப் பாய்ந்து வருகிற அந்த அருவியில், தினமும் அதிகாலையிலே சென்று ஆனந்தமாகக் குளிப்பார். பட்டை பட்டையாகத் திருநீறு அணிந்து ஒரே சிவக் கோலமாகக் குற்றால நாதனின் சந்நிதியிலே போய் நிற்பார் அந்த பக்தர். நின்று, காடும் மலையுமே உருகும்படியாகத் தமது கஷ்டங்களை யெல்லாம் உரக்கச் சொல்லி முறையிடுவார்! தினமும் இப்படி நடந்தது, அநேக நாட்களாக!

ஆண்டுகள் ஓடி மறைந்து விட்டன! இறைவனுடைய, குற்றால நாதனுடைய, அருள் இன்னும் கிடைத்த பாடாக இல்லை, பக்தருக்கு! என்ன செய்வார் அப்பாவி!

திருக் குற்றாலத்தின் அழகோ சொல்லி முடியாது! அந்த மலையைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம், கண் இமைக்காமல் — மணிக் கணக்காக நாள் கணக்காக! அத்தனை எழில்! அந்த மலையிலே மேகங்கள் வந்து அங்கங்கே உறங்குகின்றன, தூங்குகின்றன. அத்தனை நிம்மதி மனசில்!

கண் இமைக் காது
காண் தகு வெற்பில்
கார்பல உறங்கு
குற்றாலத்து—

[வெற்பு - மலை; கார் - மேகம்; உறங்கு - தூங்கு.]

"இந்தப் பரம நிம்மதியான குற்றாலத்தின் அண்ணலாகிய திருக் குற்றால நாதனே!", பக்தர் சொல்கிறார், "உன்னிடம் என் குறைகளை யெல்லாம் கூப்பாடு போட்டே முறையிட்டு விட்டேன் இத்தனை நாட்களாக! உன்னுடைய அருள் வந்தபாடாக இல்லையே!"

கண் இமைக் காது
காண் தகு வெற்பில்
கார்பல உறங்கு
குற்றாலத்து
அண்ணலே! என்றன்
குறையெலாம் கூவி
அரற்றியும் நினதருள்
காணேன்!

[கூவி அரற்றியும் - கூப்பாடு போட்டே புலம்பியும் கூட]

பக்தர் யோசித்துப் பார்க்கிறார். கருணைக் கடல் என்றும் அன்பு மயமானவன் என்றும் அழைக்கப்படுகிற இறைவன் இப்படியா சும்மா இருந்து விடுவான்? அவன் செவியில் என்னுடைய குறைகள் எல்லாம் சென்று விழுந்திருந்தால், இப்படி அசையாமல் அமர்ந்திருக்கவே மாட்டானே. எவ்வளவோ கருணையோடு அல்லவா எழுந்து வந்து எனக்கு அருள் புரிந்திருப்பான்! நிச்சயம், அவனுடைய செவியில் நம்முடைய வார்த்தைகள் விழவில்லை!

விண்ணிடை நின்று
விரைவொடு வந்து
வெண்ணகை யொடுவிளை
யாடி
திண்ணெனக் குதிக்கும்
அருவியின் ஒலிதான்
திருச்செவி அடைத்தது
கொல்லோ!

[விண்ணிடை நின்று - வான லோகத்திலேயே இருந்து புறப்பட்டு வந்ததாகத் தோன்றும்; வெண்ணகையொடு விளையாடி - வெண்மையான நுரைச் சிரிப்போடு விளையாடிக் கொண்டே; திண்ணென - திண் திண் என்ற ஓசையோடு தானே; திருச் செவி அடைத்தது கொல்லோ - அருமையோடு கூடிய உன்னுடைய செவிகளை, அடடா, அடைத்துவிட்டதோ - அந்த அருவியின் ஓசை!]

அருவியினுடைய ஓசைதான் குற்றால நாதன் செவிகளை அடைத்து விட்டது!— பக்தர் இப்பொழுது காரணத்தை யூகித்து விட்டார்!—பாடலை முழுதும் பார்க்கலாம்.

கண் இமைக் காது
காண் தகு வெற்பில்
கார்பல உறங்கு
குற்றாலத்து
அண்ணலே என்றன்
குறையெலாம் கூவி
அரற்றியும் நினதருள்
காணேன்!
விண்ணிடை நின்று
விரைவொடு வந்து
வெண்ணகை யொடுவிளை
யாடி
திண்ணெனக் குதிக்கும்
அருவியின் ஒலிதான்
திருச்செவி அடைத்தது
கொல்லோ!

சுத்தமான பழைய தமிழ்க் கவிதையின் பண்பெல்லாம் நிரம்பி, உணர்ச்சியும் கவியுருவமும் இணைந்து ஒலிக்கும் இந்த அற்புதமான பாடலைப் பாடிய கவிஞர் யாரென்று நினைக்கிறீர்கள்? வெளி யுலகுக்கு ரசிகராகவே தோன்றி, உள்ளத்தில் அருங் கவிஞராக விளங்கிய டி. கே. சி. அவர்கள்தான்! ஆம்; அவர்களே பாடிய சொந்தக் கவி இது.

டி. கே. சி. அவர்கள் பாடிய பாடல்கள் இதுபோன்று பல. இவற்றை யெல்லாம் ஏதோ பயிற்சி என்ற முறையில் பாடியதாகவும், கம்பர் பாட்டுக்கு அருகில் வந்ததும் மலைத்துப் போய் நின்று விட்டதாகவும் டி. கே. சி. அடிக்கடி கூறுவார்கள். அந்த ரசிக மணியின் ஆண்டுத் திதியை ஒட்டி வெளி வருகிற இந்தக் கல்கி இதழ், அவர்களுடைய பாட்டுக்கு விளக்கமாக மூவர்ண ஓவியத்தை அட்டையில் தாங்கி, அவர்களின் நினைவுக்கு அன்பின் காணிக்கையாக மலர்கிறது.

மதுரையின் திலகம்



திரு ஏ. வைத்தியநாதய்யர்

தோற்றம்: 1890 மறைவு: 23-2-1955

# தனிச் சுதந்திரங்களின் வரம்புகள்

ஒரு சுதந்திர நாட்டின் வீதி வழியாக இரண்டு பேர் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். பின்னால் வந்தவர் குடையை மடக்கிக் கையில் வைத்துக்கொண்டு சுழற்றிக் கொண்டே நடந்தார். நடையின் வேகம் அதிகரிக்க அதிகரிக்கக் குடையின் சுழற்சியும் அதிகரித்தது. முன்னால் போய்க் கொண்டிருந்தவரின் தலையிலே போய் ஒரு "ஷொட்டு"க் கொடுத்தது குடைக்காம்பு!

"என்னையா உமக்குக் கண் இல்லையா! இப்படியா குடையைச் சுழற்றுவது?"

"ஓகோ! அதெல்லாம் அந்தக் காலம் சுவாமி! இப்பொழுது சுதந்திர நாட்டிலே இருக்கிறோம்; குடையைச் சுழற்றி வீச எனக்குப் பூரண சுதந்திரம் உண்டு!"

"அது சரி! ஆனால் உம்முடைய குடையின் நீளம் எந்த மூலையில் முடிகிறதோ, அங்கே உம்முடைய சுதந்திரமும் முடிகிறது! அதற்கு மேல் அடியேனுடைய சுதந்திரம் ஆரம்பமாகிறது!" என்றார் முன்னவர், தலையைத் தடவிக் கொண்டே!

சுதந்திரம் என்ற வார்த்தைக்கு இப்படி ஒரு விளக்கம் சொல்கிறது ஒரு பழைய கதை. ஒருவருடைய சுதந்திரம் மற்றொருவருடைய சுதந்திரத்தைப் பாதிக்கக் கூடாது. சுதந்திரம் என்ற பெயரில் பிறருக்குத் தீங்கும் கேடும் விளைக்கக் கூடிய காரியத்தை ஒருவர் செய்து விடலாமா? கூடாது. அப்படிச் செய்ய முனைந்தால் அதைத் தடுக்க வேண்டியது மக்கள் அரசாங்கத்தின் முக்கிய கடமையாகும். அதிலும் வாக்கு சுதந்திரம் என்று சொல்லிக்கொண்டு கலைகளின் மூலம் மக்களுடைய உள்ளத்துக்குத் தீங்கு பயக்கும் விஷயங்களைப் பரப்புவதை அரசாங்கம் நிச்சயம் தடுத்தே ஆகவேண்டும். இந்த விஷயத்தைக் குறித்து நமது பிரதம மந்திரி பண்டித நேரு அவர்கள் சமீபத்தில் டில்லியில் நடந்த திரைப்படக் கலை அரங்கின் தொடக்க விழாவில் குறிப்பிட்டார்.

"தனிப்பட்ட மனிதரின் சுதந்திரத்தில் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. அதிலும் ஆக்க கலைகள் சுதந்திரத்தோடு வளர வேண்டும் என்பதில் எனக்குச் சந்தேகமே கிடையாது. ஆனால் அவை சமூகத்துக்குத் தீமையை உண்டாக்கும் நிலையை அடைந்து விட்டால், அரசாங்கம் நிச்சயம் கண்டிப்பான நடவடிக்கை எடுக்க முன்வந்தே ஆக வேண்டும்" என்று குறிப்பிட்டார் நேரு அவர்கள்.

நமது இந்தியத் திரைப்படத் தொழிலானது வெளி உதவி ஏதும் இன்றி, இவ்வளவு தூரம் முன்னேறியிருப்பதையும், சில நல்ல படங்கள் அவ்வப்போது வெளியாகியிருப்பதையும் பாராட்டிப் பேசிவிட்டு, திரைப்படத் தணிக்கை சம்பந்தமாகவும் அரசாங்கம் இந்த விஷயத்தில் தலையிடுவது சம்பந்தமாகவும் நேரு தமது சொற்பொழிவில் குறிப்பிட்டார். புத்தகங்களையும் பத்திரிகைகளையும் விட மக்கள் உள்ளத்தில் அதிக ஆதிக்கம் செலுத்தும் திரைப்பட சாதனத்தைச் சரியான வழியில் பயன் படுத்தா விட்டால், மக்களின் ஒழுக்கம் சீர்கேடடையும் என்பதை நேரு அவர்கள் மிகத் தெளிவாகக் கூறினார். வாக்கு சுதந்திரம் என்பதைச் சொல்லித் திரைப்படத் தயாரிப்பில் தங்களுக்குப் பூரண சுதந்திரம் வேண்டும் என்று படாதிபதிகள் கோருகிறார்கள் அல்லவா? இதைப்பற்றி நேரு சொன்னார்: "அணுகுண்டு மலிவாகக் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அதை ஒவ்வொருவரும் தங்கள் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு சுதந்திரத்தின் பெயரால் தெரு வீதியில் நடந்து செல்வதை அநுமதிக்க முடியுமா? அதுபோல மக்களுக்குக் கேடு பயக்கும் முறையில், ஆற்றல் மிக்க ஒரு சாதனத்தைக் கையாளுவதைத் தடுத்தே ஆகவேண்டும்!" என்று குறிப்பிட்டார் நேரு.

மக்களின் உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் செயல்களையுமே உருவாக்கக் கூடிய திரைப்படங்களைத் தயாரிக்க வேண்டும் என்றும், குழந்தைகளுக்கான நல்ல படங்களை யெடுப்பதில் கவனம் செலுத்த வேண்டும் என்றும், நேருஜி கேட்டுக் கொண்டார். இத்தகைய படங்களை அரசாங்கமும் தயாரித்து வெளியிடும் என்று அவர் கூறினர்.

'சுதந்திரம்' என்ற சொல்லுக்கு உரிமை என்று மட்டும் அர்த்தம் செய்து கொள்வது தவறு. சுதந்திரம் என்பது உரிமையைப் போலவே கடமையும் ஆகும். உரிமைகளைக் கோருகிற படாதிபதிகள் தங்கள் கடமைகளையும் உணர்ந்து, மக்களுக்கு முன்னேற்றப் பாதையிலே தொண்டு புரிவார்களானால் பாரத நாட்டுத் திரைப் படங்கள் உலக அரங்கிலே பெருமதிப்பு அடையும் என்பதில் சந்தேகமில்லை. டில்லியின் திரைப்பட அரங்கிலே நடந்த சர்ச்சையின் பயனாக இத்தகைய பொற்காலம் நமது திரைப்படங்களுக்கு ஏற்படும் என்று எதிர்பார்ப்போமாக!

## டி. கே. சி.யின் கடிதங்கள்

டி. கே. சி.யின் கடிதங்களைப் பற்றி இந்த மலரில் திரு மகாராஜனுடைய கட்டுரையைக் காணலாம். அடுத்த இதழிலிருந்து 'டி. கே. சி. யின் கடிதங்கள்' என்ற தொடர் ஆரம்பமாகும். அதில் டி. கே. சி. நண்பர்களுக்கு எழுதிய அருமையான சில கடிதங்கள் பிரசுரமாகும்.

# விஷத்தைக் கக்க விடலாமா?

"மக்களுக்குத் தீங்கு விளைவிக்கும் விஷ(ய)ங்களைப் படங்களிலிருந்து நீக்க அரசாங்கம் முன் வந்தே ஆகவேண்டும்!" —நேருஜி

# விசை குண்டு!

அமெரிக்கா விசை குண்டுகளைத் தயாரிக்கத் தொடங்கியிருக்கிறது. ரஷ்யாவும் அதைப் பின்பற்றலா மல்லவா?

# என்ன சேதி?

## வரிப் பளு

செய்திகளுக்குள் முக்கியமான செய்தி, எங்கே பார்த்தாலும் வரிப்பளு அதிகமாகிக் கொண்டு வருகிறது என்பதே. எல்லாக் காரியங்களையும் அரசாங்கம் தன் தலை மேலேயே போட்டுக் கொண்டு இருக்கிறபடியால், முன் காலத்தைக் காட்டிலும் இக் காலத்தில் சர்க்கார் செலவு அதிகமாய்த்தான் ஆக வேண்டும். வேறு வழியில்லை. செலவு உயர உயர வரி போட்டே தீரவேண்டும். வரியின் பளு அதிகமாவதில் சில தீமைகளும் உண்டு. ஆனால் நல்ல காரியங்களைச் சர்க்கார் எடுத்துச் செய்வதில் நன்மையும் உண்டு. நில வரியை உயர்த்துகிறார்களே என்று வருந்துகிறோம். பள்ளிக்கூடத்துக்குச் சம்பளம் இல்லை என்றால், மகிழ்ச்சி அடைகிறோம். தீமை அதிகமா நன்மை அதிகமா என்பது பின்னால்தான் தெரியும்.

எல்லா ராஜ்யங்களிலும் மத்திய சர்க்காரிலும் பட்ஜெட் விவாதங்கள் நடைபெற்று வருகின்றன. ஜனப் பிரதிநிதிகள் நுட்பமாக ஆராய்ந்து விஷயங்களை அலசிக் கொட்டும் யுகம் இது. முன் காலத்தைப் போல் அல்ல!

## இலங்கையிலிருந்து நல்ல செய்தி

சமீப காலமாக இலங்கையிலிருந்து வரும் செய்திகள் இந்தியப் பொது மக்களைக் கலங்க வைப்பதாகவே இருந்து வந்திருக்கின்றன. ஆனால், இதற்கு விதி விலக்காக நாலு ஐந்து தினங்களுக்கு முன் இலங்கையிலிருந்து வந்த செய்திகள் இந்தியா — இலங்கை நல்லுறவுக்கு ஆக்கமளிப்பதாக இருப்பதைக் குறித்துச் சகலரும் மகிழ்ச்சி அடைவர். இலங்கை முன்னாள் பிரதம மந்திரி ஸ்ரீ டட்லி சேனநாயகா பத்திரிகைக்கு அளித்த பேட்டி ஒன்றில், உலகத்தில் எல்லா கௌரவத்துக்கும் தலைசிறந்த மகான் பகவான் புத்தர்தான் என்றார். இன்று உலகிலேயே பெரிய மனிதர் பண்டித ஜவாஹர்லால் நேருதான் என்று குறிப்பிட்டார். நேருஜியிடம் இவ்வளவு பெரும் மதிப்பு வைத்துள்ள ஸ்ரீ சேனநாயகா, உலகப் பெரியாரான நேருஜியுடன் இலங்கை சர்க்கார் செய்து கொண்டுள்ள ஒப்பந்தம் நிறைவேறுவதற்குற்ற முறைகளைக் கைக் கொள்வார் என்று எதிர்பார்க்கிறோம்.



டட்லி சேனநாயகா

ஸ்ரீ சேனநாயகா மற்றொரு விதத்திலும் இந்தியப் பொது மக்கள் பாராட்டும்படியான காரியத்தைச் செய்துள்ளார். இன்று இலங்கையில் ஐக்கிய தேசியக் கட்சியினர்தான் அதிகாரத்தில் உள்ளனர். சென்ற வாரம் நடந்த அக் கட்சிக் கூட்டமொன்றில், இலங்கையில் மதுபானங்களுக்கும் சூதாட்டங்களுக்கும் அடியோடு தடை விதிக்க வேண்டுமென்று அக் கட்சி முடிவு செய்துள்ளது. அந்தத் தீர்மானத்தைப் பிரேரேபித்த ஸ்ரீ சேனநாயகா அப்போது பேசிய விவரங்கள் சகலருக்கும் ஆச்சரியத்தைக் கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

"மதுவிலக்கு காரணமாக பம்பாயில் மக்களின் பொருளாதார நிலையும் ஆரோக்கியமும் மிகவும் அபிவிருத்தியடைந்திருக்கின்றன. அங்கு குற்றங்களும் குறைந்திருக்கின்றன. மதுபானமும் சூதாட்டங்களும்தான் இலங்கையில் குற்றங்கள் பெருகியிருப்பதற்கு மூலகாரணங்களாகும்" என்று ஸ்ரீ சேனநாயகா குறிப்பிட்டார்.

இவ்விதம் இந்தியாவின் அடிச்சுவடுகளைப் பின்பற்ற முயற்சிக்கும் இலங்கைக்கு நம்முடைய வாழ்த்துக்கள்!

## வீரனுக்குச் சிலை

சுதந்திர பர்மாவின் சிற்பியான அவுங்சானின் வெண்கலச் சிலையை ரங்கூன் நகரில் 13-2-55ந் தேதி பர்மா ஜனாதிபதி திறந்து வைத்தார். அவ்வைபவ சம்பந்தமான உருக்கமான விவரங்களை ரங்கூனிலிருந்து ஒரு நிருபர் நமக்கு அனுப்பியுள்ளார். பர்மாவின் சுதந்திரத்துக்காக அரும்பாடுபட்ட தனிப்பெரும் தலைவரும் பிரதம மந்திரியுமான

## பட்னாவில் தியாகப் பிரும்மம்

சங்கீத மும்மணிகளில் ஒருவர் எனப் போற்றப்படும் தியாகப்பிரும்மத்தின் ஆராதனை விழா பட்னாவில் சென்ற மாதம் 22ம் தேதி பட்னா தென்னிந்தியர் சங்கத்தின் ஆதரவில் சின்ஹா ஹாலில் வெகு விமரிசையாக நடைபெற்றது. கர்நாடக சங்கீதத்தில் புகழ் வாய்ந்த வாய்ப்பாட்டு வித்வான்களும், வாத்ய சங்கீத வித்வான்களும் தென்னிந்தியாவிலிருந்து வந்து இசை விருந்தளித்தார்கள்.

அவுங்சானேயும் மற்ற மந்திரி களையும் பாதகர்கள் சுட்டுக் கொன்றதை யாரும் மறந் திருக்க முடியாது. எனவே, அத்தகைய அருமைத் தலை வரின் சிலையை ஜனாதிபதி பிரதிஷ்டை செய்த போது பதினாயிரக்கணக்கான ஜனங் கள் கூடி, சிரம் தாழ்த்தி அஞ் சலி செய்ததைக் குறித்து ஆச்சரியப் படுவதற்கில்லை. அவுங்சான் உயிருடன் இருந் தால் சுதந்திர பர்மா உள் நாட்டுப் போர் போன்ற பல இன்னல்களிலிருந்து விடுதலை பெற்றிருக்கலாம்.



அமைச்சர் நடேச பிள்ளை கலைப்புலவருக்குப் பொன் னாடை போர்த்துகிருர்.

"பர்மாவிலே 1876-ம் ஆண்டில் திபோ அரசர் இழந்த சுதந்திரத்தை மீண்டும் ஈட் டித் தந்த பெருமை அவுங்சானுக்கே உரி யது. தற்கால, வருங்கால சந்ததிகள் யாவ ரும் இந்தச் சிலைக்கு மரியாதை செலுத் தும் போது, அன்னாரின் சரித்திரப் புகழ் வாய்ந்த சாதனைகள் மட்டுமின்றி, தியாகம், வீரம், தேச பக்தி முதலிய அவரது குணாதி சயங்கள், மனக் கண்முன் காட்சியளிக்கும்" என்று அந்த நிருபர் மெய் மறந்து எழுதி யுள்ளார். பர்மியர்கள் கண்ணினுமினிய தங்கள் சுதந்திரத்தை என்றென்றும் பாது காப்பதற்குரிய அஞ்சா நெஞ்சத்தையும், ஆண்மையையும், உறுதியையும் பர்மாவின் சுதந்திர சிற்பியான அவுங் சானின் சிலை நல்குமாக!

## நூல் அரங்கேற்றம்

ஒரு நாட்டின் பண்பாடு அந்நாட்டின் கலை வளர்ச்சியி லிருந்து புலனாகும். இலங்கை யில் கலைகள் வளர்ந்த விதத் தைப் பல ஆண்டுகள் ஆராய்ந்து, அறிஞர் நவரத் தினம் அவர்கள் ஆராய்ச்சி மிக்க நூலொன்று வெளியிட் டிருக்கிருர். 'இலங்கையில் கலை வளர்ச்சி' என்னும் அவ்வரிய நூலின் அரங்கேற்று விழா யாழ்ப்பாணம் வைத்தீசுவர வித்தியாலயத் தில் பிப்ரவரி 22-ந் தேதி யன்று வெகு சிறப்பாக நடந்தேறியது.

இவ்விழாவுக்கு இலங்கை மந்திரி சு. நடேச பிள்ளை அவர்கள் தலைமை வகித்து, அறிஞர் நவரத்தினத்துக்குக் கலைப் புலவர் என்னும் பட்டத்தை வழங்கினர். அவரது கலைத் திறமையை வியந்து பாராட்டிப் பொன் னாடை போர்த்திக் கௌரவித்தார்.

தமிழ்க் கலைகளின் சிறப்பையும், தமிழ் பண்பாட்டின் மேன்மையையும் விளக்கும் இக்கலை நூலைக் கலைஞர்களும், அறிஞர்களும், ஆசிரியர்களும் வியந்து போற்றினர்.

# பனித் துளி!

"பம்பாயில் எழுத்தறிவின்மையை ஒழிக்க முயற்சி. கிராமங்களில் நடமாடும் ஆசிரி யர்கள் நியமனம்." —பம்பாய்ச் செய்தி

அப்படியென்ருல் நாட்டிய ஆசிரியர்கள் பாடு கொண்டாட்டந்தான்!

●

"யு. எஸ்.ஸில் உள்ள 'யுக்கா' பகுதியில் செவ்வாயன்று புதிய அணுகுண்டு சோத னைகள் ஆரம்பமாகும்!" —செய்தி

உலகுக்கே சோதனைக் காலம் ஆரம்பமாகும் என்று சொல்லுங்கள்!

●

"கோவைக்கு வட மேற்கேயுள்ள குருடி மலை என்னும் குன்றின் மீது விறகு பொறுக் கச் சென்ற கிராமவாசி கரடியின் கோபத் துக்கு ஆளாகித் தாக்கப்பட்டார்." —பத்திரிகைச் செய்தி

குருடி மலையில் அவர் கண்ணை மூடிக் கொண்டு சென்றதனால் ஏற்பட்ட விளைவு போலும்!

●

"அணு பரீட்சைக்கு இலங்கை குரங்குகள்" —அமெரிக்காவின் வேண்டுகோள்

குரங்கு கைப் பூமாலை போல அணுகுண்டு அமெரிக்காவின் கையில் அல்லல்படுகிறது!

"சென்னை ராஜ்யத்தில் பல்வேறு ஜில்லாக் களில் உள்ள ஆஸ்பத்திரிகளில் நோயாளி களுக்குப் படுக்கை வசதிகள் அதிகரிக்கப் பட்டிருக்கின்றன." —சர்க்கார் செய்தி

படுக்கை வசதியோடு சிகிச்சை வசதிகளையும் சர்க்கார் மறந்து விடக் கூடாது என்கிருர் ஒரு நீண்ட நாள் ஆஸ்பத்திரி நோயாளி.

●

"நல்ல காப்பி கிடைக்க வேண்டுமானல், காப்பியில் சிக்கரி பவுடர் முதலிய கலப் படங்கள் சேர்க்கப் படுவதைத் தடுக்க வேண்டும்." —காப்பி சாப்பிடுவோர் மகாஜர்

அது மட்டும் போதாது. நல்ல காப்பி வேண்டு மானல், அவசியம் காப்பியில் காப்பிப் பொடி சேர்த்தாக வேண்டும் என்கிருர் ஒரு ரஸிகர்.

●

"அவதியுறும் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த வர்த்தகக் குமாஸ்தாக்களுக்கு ஐந்து ஏக்கர் நன்செய் நிலம் நன்கொடை யாக அளிக்கும்படி மத்திய, ராஜ்ய சர்க்கார் களைக் கேட்டுக் கொண்டு ஒரு தீர்மானம் நிறைவேறியது." —மதுரைச் செய்தி

ஏன், அவர்கள் ஏற்கெனவே அவதிப்படுவது போதாது என்று எண்ணமா!

# கண்ணியமாகக் கட்டுப்படுவார்களா?

கொழும்பு, பெப். பீ 26—

இந்தியர்களின் பிரஜாவுரிமை சம்பந்தமாக இலங்கை அரசாங்கத்தின் போக்கை வன்மையாகக் கண்டித்து இரண்டு நீதிபதிகளடங்கிய சுப்ரீம் கோர்ட் இவ்வாரம் ஒரு அதிமுக்கியமான தீர்ப்பை வெளியிட்டிருக்கிறது. இந்தத் தீர்ப்பு ஓராயிரம், ஈராயிரமல்ல, சுமார் ஏழு லட்சம் இலங்கை இந்தியர்களைப் பற்றியதென்றால் இது எவ்வளவு முக்கியமானதென்பதைச் சொல்லத் தேவையில்லை.

இலங்கையிலுள்ள இந்தியர்களில் பெரும்பாலோர் இந்தியாவில் அக்கறையுடையவர்களல்லவென்றாலும் ஏதாவது ஒரு காரணத்துக்காக ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் வயோதிகப் பெற்றோர்களுக்கோ, அல்லது கோவில் காணிக்கையாகவோ, புத்தகங்கள் தருவிக்கவோ பணமனுப்ப நேரிட்டிருக்கிறது. பணமனுப்பச் செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரியிடமிருந்து பர்மிட் பெறுவதாயின் மனுதார் தம்மை இலங்கையின் தற்கால வாசியென்று எழுதிக் கொடுக்க வேண்டும். இவ்விதம் செலாவணிக் கட்டுப்பாடு நமூனவில் எழுதிக் கொடுப்பது அரசியல் காரணங்களுக்குப் பயன்படுத்தப் படமாட்டாதென்று செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரி முன்னர் தெரிவித்திருந்தார். அதை நம்பிப் பெரும்பாலான இலங்கை இந்தியர்கள் தங்களைத் தற்கால வாசியென்று எழுதிக் கொடுத்துப் பணமனுப்ப பர்மிட் பெற்றிருக்கின்றனர்.

சென்ற சில மாதங்களாகப் பிரஜா பதிவுக் கமிஷனர் இந்த நிலைமையைப் பயன்படுத்தி, செலாவணிக் கட்டுப்பாடு நமூனவில் தாற்காலிக வாசிகளென்று எழுதிக் கொடுத்தவர்களெல்லாம் இலங்கையின் தாற்காலிகவாசிகள் தானென்றும் அவர்களுக்கு இந்நாட்டில் உரிமை கேட்க யோக்கியதை இல்லையென்றும் சொல்லி அவர்களது பிரஜாவுரிமை மனுக்களை யெல்லாம் நிராகரித்து வருகிறார். இவ்விதம் உரிமை மறுக்கப்பட்ட ஸ்ரீ கே. துரைஸ்வாமி யென்பவர் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் கொடுத்தார்.

இந்த அப்பீலில் நீதிபதி ஸ்ரீ கிரேஸியனும் நீதிபதி ஸ்ரீ ஸன்ஸோனியும் இவ்வாரம் அளித்த தீர்ப்பில் பணமனுப்புவதற்காக மட்டும் ஒருவரது பிரஜா உரிமை மனுவை நிராகரிக்க நியாயமில்லையென்றும் பிரஜா பதிவுக் கமிஷனர் பிரஜாவுரிமை மனுக்களின் யோக்கியதாம்சங்களைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவு செய்வதற்குப் பதிலாக முன் கூட்டியே தீர்மானித்து வைத்துக் கொண்ட சில உத்தரவுகளின் அடிப்படையில் முடிவு செய்வதாகத் தோன்றுகிறதென்றும் இவ்விதம் செய்யச் சட்டத்தில் இடமில்லையென்றும் தெரிவித்திருக்கிறார்கள். இலங்கை அரசாங்கம் இந்தியர்களுடைய பிரஜாவுரிமை மனுக்களைப் பைசல் செய்யும் முறையை இதைவிடக் காரசாரமாகக் கண்டிக்க முடியாது. அரசாங்கம் தன்னுடைய ஆக உயர்ந்த நீதி மன்றத்தின் தீர்ப்புக்குக் கட்டுப்படுவதுதான் அதற்கும் நாட்டுக்கும் கௌரவம். இதை விட்டுத் தனது சுப்ரீம் கோர்ட் தீர்ப்பையே ஆட்சேபித்து பிரிவி கவுன்ஸிலுக்கு அப்பீல் செய்ய உத்தேசித்திருக்கிறதாம்.

அற்பக் காரணங்களுக்காக இந்தியர்களுக்கு உரிமை மறுப்பதில்லையென்று தில்லி ஒப்பந்தத்தின்போது இலங்கைப் பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலை உறுதிமொழி யளித்தார். அந்த உறுதிமொழியை மீறிக் காரியங்கள் செய்வது ஒரு புறமிருக்க, நாட்டின் ஆக உயர்ந்த நீதிமன்றத்தின் தீர்ப்புக்குக் கண்ணியமாகக் கட்டுப்படுவதை விட்டு சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் எடுத்துக் கொண்டு போவதாயின் இலங்கையின் நல்லெண்ணமும் நியாய சிந்தையும் எந்தமட்டில் உள்ளதென்பதற்கு வேறு உதாரணம் என்ன வேண்டும்!

* * *

யாழ்ப்பாணத்தில் செல்வாக்குள்ள அரசியல் கட்சியான அகில இலங்கை தமிழ் அரசுக் கட்சிக்கு கோப்பாய் தொகுதி பார்லிமெண்ட் அங்கத்தினரும் பிரபல தமிழ் ராஜீய வாதியுமான ஸ்ரீ வி. வன்னிய சிங்கம் அடுத்த வருடத் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டிருக்கிறார். அவருடைய தேர்தலை அடுத்த ஏப்ரல் மாதம் நடக்கும் கட்சியின் வருடாந்திர மகாநாடு ஊர்ஜிதம் செய்யும். இந்தக் கட்சி தமிழ் காங்கிரஸிலிருந்து பிரிந்து 1949-ம் வருடம் அங்குரார்ப்பணம் செய்யப்பட்டது முதல் அதற்கு ஸ்ரீ எஸ். ஜே. வி. செல்வநாயகம் தலைமை தாங்கி வந்திருக்கிறார். தலைமைப் பதவி ஒரு மனிதரின் ஏகபோக உரிமையா யிருக்கக் கூடாதென்றும் சிறப்பாகக் கடமையாற்றக் கூடியவர்களுக்கும் சம சந்தர்ப்பம் அளிக்கப்பட வேண்டுமென்றும் சொல்லி ஸ்ரீ செல்வநாயகமே அடுத்த வருடத் தலைவர் பதவிக்கு ஸ்ரீ வன்னிய சிங்கத்தின் பெயரைக் காரியக் கமிட்டியின் கூட்டத்தில் பிரேரேபித்துக் கமிட்டியை ஆமோதிக்கச் செய்தார். — ரஜனி.

## ஒரு பாராட்டு விருந்து!

சென்னையில் நடந்த அச்சுத் தொழில் அதிபர்கள் மகாநாட்டுக்கு உலகத்தின் பல பகுதிகளிலிருந்தும் அச்சுத் தொழிலில் ஈடுபட்டவர்கள் வந்து பங்கு எடுத்துக் கொண்டார்கள். அவர்களுக்குச் சென்ற மாதம் 26-ம் தேதி மாலை கல்கி காரியாலய நந்தவனத்தில் தேநீர் விருந்து அளிக்கப்பட்டது. 'கல்கி' மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம் அவர்களின் அழைப்புக் கிணங்கி அச்சுத் தொழிலில் ஈடுபட்ட பிரமுகர்களும், தொழில் நிபுணர்களும் வந்திருந்தனர். அகில இந்திய அச்சுத் தொழில் சங்கத்தின் தலைவர் திரு விசுவநாதன், சென்னை பிரிண்டர்ஸ் அண்டு லித்தோகிராபர்ஸ் அஸோஸியேஷன் தலைவர் திரு பிலிப், மேற்கு ஜெர்மனி ஹைடல் பர்க் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள், கிழக்கு ஜெர்மனி பாலிகிராப் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள், மற்றும் சென்னையிலுள்ள பல விளம்பர ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்கள் வந்திருந்தார்கள். அவர்களில் பலர் 'கல்கி' அச்சகத்தைச் சுற்றிப் பார்த்துத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர். விருந்தினர்களுக்குத் தேநீர் விருந்தளித்து உபசரித்த காட்சிகளை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.

# பால்காரப் பாவை

லவ.சுப்ரமண்யன்



“தவலைப் பாலும் உன்னாலே கொட்டிப் போயிடிச்சே, ஐயா! உனக்குக் கண்ணு கின்னு இருக்கா, இல்லையா!”

“இருக்கு; இல்லே!”

“என்ன இருக்கு! என்ன இல்லே!”

“கண்ணு இருக்கு; கின்னு இல்லே!”

“அட நீயும் உன் கிண்டலும்! எனக்குக் கோபம் என்னமா வருது, தெரியுமா! அப்புறம் நான் எதனா வது சொல்லிப்பிடப் போறேன் வெசையா, வாயை மூடிக்க!”

அவன் வாயைக் கையைக் கொண்டு பொத்தி மூடி, பயந்து நிற்பவன் போல் பாசாங்கு செய்தான். கண்ணம்மாவுக்குக் கடுமையான கோபத்தின் நடுவே, மின்னல் போல் ஒரு சிரிப்பு வந்தது. அடக்கிப் பார்த்து அடக்க முடியாமல் வந்த சிரிப்பானதால் அது அருமையாக அமைந்து விட்டது. வாய்மூடி, பயப்படுபவன் போல் பாசாங்கு செய்து நின்ற மூத்தையனுக்கும் அதே மாதிரியான ஒரு சிரிப்பு பீறிக் கொண்டு வந்தது. 'கட கட' வென்று சிரித்து விட்டான் அவன்.

“இந்த உலகத்திலேயே எதுவும் சதம் இல்லே; நாம செஞ்ச பாவமும் புண்ணியமும்தான் மிச்சம்னு ஒரு பண்டாரம் பாடினானே அது எவ்வளவு உண்மை பாரு! உன் கோபமும் என் பயமும் கூட அவன் சொன்னதிலே சேர்ந்துதான் இருக்கு போலிருக்கு!” என்றான் மூத்தையன்.

“சரிதான் சும்மா இரு! இப்போ இந்தத் தவலைப் பாலுக்கும் ஒரு வகை செய்துப்பிட்டுத் தான் நீ அப்பாலே போகணும்!” என்று ஒரே தீர்மானமாகக் கூறினாள் கண்ணம்மா.

சற்று முன்னால்தான் கண்ணம்மாவும் மூத்தையனும் அந்த ஸ்டேஷனில் மின்சார ரயிலிருந்து இறங்கினார்கள். இன்னும் கூடத்தான் எத்தனையோ பேர் அங்கே இறங்கினார்கள். ஆனால் அவரவர்களும் காலை வேளையில் தத்தம் அலுவல்கள், உத்தியோகம் இப்படிப் பலவற்றையும் முன்னிட்டுக் கொண்டு பறந்து சென்றனர். பிளாட்பாரம் அநேகமாகக் காலியாகி விட்டது. மூத்தையனும் கண்ணம்மாவும்கூட அவர்களைப் போலவே பறந்திருப்பார்கள். ஆனால் அவர்கள் சம்பந்தப்பட்டவரைதான் எதிர்பாராத விதமாக ஒரு சிறிய காரியம் நடந்து விட்டதே! வண்டிக்குள்ளிருந்து கண்ணம்மா இறக்கிப் பிளாட்பாரத்தில் வைத்த பால் தவலையை வண்டி நகர்ந்த போது அவசரமாகக் கீழே குதித்த மூத்தையனின் கால்கள் இடறி விட்டன. தவலை சாய்ந்து விட்டது. பால் பூராவும் தரையில் கொட்டி, பாலாறு எப்படி இருக்கும் என்பதைக் காட்டிக் கொண்டிருந்தது. வண்டியிலிருந்து இறங்கின போது ஏற்பட்ட வேகம் குறைந்து போய் விட்டது. மெள்ளக் கண்ணம்மா நின்றிருந்த இடத்துக்கு வந்தான் மூத்தையன்.

“தெரியாம கொட்டிப்புட்டேன், அம்மா” என்று மரியாதையாக ஒரு வார்த்தை சொல்வான் என்றுதான் எதிர்பார்த்தாள் கண்ணம்மா. ஆனால் அவன் சொன்னது என்ன தெரியுமா!

“அட! பாலிலே இனிமேதான் தண்ணி கொட்டியாகணும் போலிருக்கு! கொட்டைக் கூமட்டம் இருக்குதே, பாலு!”

அவன் இப்படிச் சொன்னதற்குத்தான் ஆரம்பத்தில் குறிப்பிட்டபடி 'உனக்குக் கண் இருக்கிறதா!' என்ற ஆத்திரமாகக் கேட்டு வைத்தாள் கண்ணம்மா. தவலை பாலுக்கும் வகை செய்து விட்டுத்தான் அப்பால் நகர வேண்டும் என்று சொன்னதைக் கேட்டவுடன் சிறிது நேரம் யோசனை செய்து விட்டுச்சொன்னான் மூத்தையன்.

“சரி; வகை செய்யாத போனா அப்படியே நகராமல் இங்கேயே நிற்கிறேன். நீயும் இங்கேயே நின்னுக்கிட்டிருப்பே, இல்லையா!”

“நின்னுக்கிட்டிருந்தா கொட்டின பால் பூராவும் தவலைக்குள்ளே வந்து பாஞ்சுடுமா!”

“இல்லே; உன்னை ரொம்ப நாழி பார்த்துக் கிட்டிருக்கலாமில்லே! அதுக்காகச் சொன்னேன்!”

“அட, அநியாயமே! இந்த அநியாயத்தை யார் கிட்டே சொல்றதுன்னு தெரியலையே! எல்லாரும் போயிட்டாங்களே!”

“ஏன் உள்ளே டிக்கட் கலெக்டர் இருக்காரு, ஸ்டேஷன் மாஸ்டர் இருக்காரு. அவுங்ககிட்ட சொல்லலாமே!” என்று மூத்தையன் சொன்னான்.

கண்ணம்மாவுக்கு இப்போது நிஜமாகவே கோபம் அதிகரித்து விட்டது.

“என்னய்யா நீ! 'எருது நோவு காக்கைக்குத் தெரியாது'ன்ற மாதிரி ஏடாகூடம் பண்ணறே!

நான் டீக் கடைக்காரருக்கு என்னய்யா ஜவாப் சொல்வேன் !" என்று கேட்டான்.

"டீக் கடைக்காரருக்கு நீ ஜவாப் சொல்வானேன் ! அவருதான் டீ குடிக்க வருகிறவங்களுக்கு 'ஜவாப்' சொல்லணும். அதுசொல்ல அவருக்குத் தெரியும். அரை கிளாஸ் டீயும் அரை கிளாஸ் தண்ணியும் கலந்து முன்பு கொடுத்தா, இன்றைக்கு முக்கால் கிளாஸ் தண்ணி கலந்து கொடுப்பாரு. அந்தக் கவலையை நீ படாதே !"

அந்தச் சமயம் திடீரென்று அங்கே ஒரு போர்ட்டர் வந்தான். மேம் பாலத்திலிருந்து இறங்கி வந்தான் அவன்.

"இந்தாப்பா ! இங்கே என்ன கலாட்டா ! வண்டி போய்ப் பத்து நிமிஷமாவுது. அடுத்து வண்டி கூட வரப் போவுது. இப்படி டிக்கட்டைக் கொடுத்துவிட்டு வெளியே போய் உங்க விவகாரத்தைத் தீர்த்துக்குங்க. புருஷன் பெண்சாதி சண்டை யெல்லாம் பிளாட்பாரத்துக்கு வந்துடுது இப்பல்லாம் !"

ஏதோ ரொம்பத் தெரிந்த மாதிரி 'புருஷன் பெண்சாதிச் சண்டை' என்று அவன் சொன்னதில் முத்தையனுக்கு உள்ளூற மகிழ்ச்சி ஏற்பட்டது. கண்ணம்மாவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

'நாங்க புருஷன்-பெண்சாதின்னு நீ ரொம்பக் கண்டியோடா!' என்று அவன் கேட்க வாயெடுத்தாள். அதற்குள் முத்தையன், "இந்தாம்மா ; அவன் சொன்னபடியே 'கௌரவமான' தகராறிருந்துட்டும். நாம் வெளியிலே போய் நம்ம சண்டையைத் தீர்த்துக்கிடலாம் !" என்றான்.

அவன் பதில் ஒன்றும் பேசாமல் தவலையை எடுத்து 'நக்'கென்று இடுப்பில் வைத்துக் கொண்டு கிளம்பினான். முத்தையனும் அவளைப் பின் தொடர்ந்தான்.

ஸ்டேஷனுக்கு வெளியில் சென்றதும், கூப்பிடு தூரத்திலிருந்த டீக்கடையைச் சுட்டிக் காட்டி, "அந்தக் கடைக்குத்தானய்யா நான் பால் விற்கிற வழக்கம். இன்னைக்கி நான் என்ன சொல்வேன் அவுங்களுக்கு !" என்று கேட்டாள்.

"பால் கொட்டிப் போயிடுச்சின்னு அவர்களுக்குச் சொல்லிப் பிடு !"

"சொல்லிடறது சரி ; நஷ்டம் ! அவுங்களுக்கும் நஷ்டம், எனக்கும் நஷ்டம். இரண்டு பேர் நஷ்டத்துக்கும் நீதான் ஈட்டு கொடுக்கணும் !" என்றாள் கண்ணம்மா.

"சரி, தரேன். ஆனா உன் நஷ்டத்துக்குத்தான் பணம் தர முடியும். அதுவும் இந்தப் பணத்தைப் போல நாலு பங்கு தரேன். ஆனால் டீக்கடைக்காரரு நஷ்டத்துக்கு நான் ஏன் தரணும் ! அது முடியாது !" என்று அலட்சியமாகப் பதில் சொன்னான் முத்தையன்.

"சரி ; இருபது படி பாலுக்கும் முப்பது ரூபாய் ஆவுது!" என்றாள் கண்ணம்மா.

"சரி ; நூத்தி இருபது ரூபா வாங்கிக்க."

"சரி, குடு. நூறு ரூபாயானா குடு, போதும். ஒரு குட்டைப் பசு பார்த்து வச்சிருக்காங்க, எங்க பாட்டா. அதை சந்தோசமா வாங்கிக்கிடுவாரு அவரு......"

"பணம் இப்போ இல்லே. அடுத்த வெள்ளிக் கிழமை வா. இப்பவே வேணும்னா 'செக்கு' தான் தருவேன்."

"அதென்னாது, செக்கு !"

முத்தையன் தனது உள் சட்டைப் பையிலிருந்து ஒரு செக் புஸ்தகத்தை எடுத்துப் பிரித்துக் காண்பித்து, "இதிலே நான் எழுதிக் கொடுத்தேன்னா, பாங்கியிலே கொண்டு போய்க் கொடுத்தாயானா பணம் கொடுப்பாங்க !" என்றான்.

"அதெல்லாம் வாண்டாம், ஐயா. நீ பணமாகவே கொடுத்திடு. சரி ; அடுத்த வெள்ளிக் கிழமை !...உன்னே எப்போ பார்க்கிறது இனி மேல் ! ஆனா இப்ப சிட்டாப் பறந்துடுவே !"

"...ந்தா ! சும்மா பேசாதே ! அதான் தினம் நாம் பார்த்துக்கிடறமே ! தாம்பரத்திலே வண்டி ஏறினமானா சேத்துப் பட்டு வர்றதுக்குள்ளே முப்பது வாட்டி பார்த்துக்கிடறமே......நான் எங்கே கொண்டாந்து ரூபாய் கொடுப்பேன்கிறது எனக்குத் தெரியும், போ !" என்று சொல்லிவிட்டு அவன் வேகமாகப் போய் விட்டான்.

இடுப்பில் காலித் தவலையுடன் நின்று கொண்டிருந்த கண்ணம்மா அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

•• •• ••

சின்னம்மாவின் மனக் கண் எதிரே முத்தையனின் வடிவம் நின்றபடி இருந்தது. ஆஜானுபாகுவான அவன் தோற்றமும், அலட்சியமான பார்வையும் ஏற்கெனவே அவள் உள்ளத்தைக் கவர்ந்துதான் இருந்தன. ஆனால், கவர்ச்சிகரமாகவும் எடுத்தெறிந்த நிலையிலும் அமைந்த அவனது அழகான பேச்சைக் கேட்க இன்று வாய்ப்பு கிடைக்கும் என்று அவள் எதிர்பார்க்கவே யில்லை. அந்தப் பேச்சுக்குக் காரணமாக அமைந்த ஒரு தவலைப் பாலைப் பற்றி அவளுக்கு உள்ளூற அப்படி யொன்றும் பொருட்டாக இல்லை. இன்னும் இரண்டு தவலைப் பாலைக்கூடக்

## ஜாம்ஷெட்பூரில் சங்கீத மழை !

ஜாம்ஷெட்பூரில் ஸ்ரீ தியாகப் பிரும்ம மஹோத்ஸவம் 12—2—55 முதல் 21—2—55 வரை மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பட்னா 'சர்ச்லைட்' ஆசிரியர் பண்டிட் ஸ்ரீ சர்மா அவர்கள் துவக்கி வைத்தார்கள். கும்பகோணம் சங்கீத வித்வான் டி. பி. கைலாசம் அவர்களின் கச்சேரியுடன் விழா ஆரம்பமாயிற்று. அநேக பிரமுகர்களும் வித்வான்களும் ரஸிகர்களும் கூடி வித்வானின் திறமையைப் பாராட்டிப் புகழ்ந்தார்கள். மறுநாள் முதல் ஸ்ரீ பாலமுரளிகிருஷ்ணா, ஜானகிராமன், ராமச்சந்திரய்யர், பூவனூர் சுந்தரேச முதலியார் புல்லாங்குழல்; மதுரை வெங்கடேசன், விஜயநல்லூர் ராமநாதன், களக்காடு ராமநாராயண அய்யர், தேவகோட்டை நாராயணய்யங்கார், களக்காடு மகாதேவ அய்யர் இன்னும் பல வித்வான்கள் பாடினார்கள். 20—2—55 காலை 9-மணி முதல் 10-மணி வரை டி. பி. கைலாசம் மற்றும் எல்லா வித்வான்களும் சேர்ந்து பஞ்சரத்தினக் கீர்த்தனங்களையும் பாடினார்கள். அதன் பிறகு ஆயிரம் ஏழைகளுக்கு அன்னம் அளிக்கப்பட்டது. இவ்வாறு உத்ஸவம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

கொட்டி விட்டு அவன் பேசிக் கொண்டிருக்கட்டும் என்ற நிலையில்தான் அவள் எண்ணினாள்.

தாம்பரத்தில்தான் இருவரும் தினசரி காஞ்சிவரம் வண்டியில் ஏறுவார்கள். 'பால் வண்டி' என்னும் புனைபெயர் பெற்றிருந்த அந்த வண்டி அந்தப் பெயரை நிலைநாட்டிக் கொண்டேயிருக்கும். புதுப் பாலின் வாசனை 'கம கம' வென்று வீசாத போனாலும், மாதக் கணக்காய் வண்டி நெடுகிலும் சிந்தின பால் வறண்டு போனதால் ஏற்பட்ட 'பழம் வாசனை'தான் 'கம்' மென்று வீசும். கண்ணம்மா பால் குடங்கள் நிறைய ஏறியிருக்கும் கம்பார்ட்மெண்டில் ஏறுகிற வழக்கமில்லை. உத்தியோகஸ்தர்கள் அதிகம் பேர் ஏறுகிற வண்டியாகப் பார்த்துத்தான் ஏறுவாள். 'பளிச்' சென்று பசும் பொன் நிறத்தில், மான் குட்டி போல் சுபாவம் கொண்ட அவளுக்கு நாசூக்கான இடம், காரியம் இப்படித்தான் பிடிக்கும். ஜாக்கிரதையாகப் பால் தவலையை 'ஸீட்' அடியில் வைத்து விட்டு ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து விடுவாள். வண்டி நகர்ந்த சில நிமிஷ நேரங்களில் பார்த்தால் மூத்தையன் அவள் பார்வையில் பட்டு விடுவான். அவன் எப்படித்தான் அவள் ஏறுகிற இடமாகப் பார்த்து ஏறுகிறானோ! மாய வித்தைக்காரன் மனிதர்களை இங்கும் அங்கும் வரவழைக்கிறமாதிரி வந்து தரிசனம் கொடுப்பான். தப்பித் தவறி, கூட்டம் காரணமாக ஒவ்வொரு சமயம் வேறு வண்டியில் ஏறிவிடுவான் மூத்தையன்; அவனைப் பார்க்காத கண்ணம்மாவின் கண்கள் பூத்துத்தான் போய் விடும். 'அவன் எங்கே போகிறான்! என்ன வேலை பார்க்கிறான்!' என்றெல்லாம் கூடத் தெரிந்து கொள்ள எத்தனையோ தடவை ஆசைப்பட்டிருக்கிறாள் கண்ணம்மா. அவனுடனே கூட நேரில் பேசச் சந்தர்ப்பம் ஏற்படாத வரை இந்தத் தகவல்களுக்கெல்லாம் யார் பதில் சொல்லப் போகிறார்கள் என்று நினைத்துக் கொள்வாள்.

'அவனுடன் பேச முடியுமா?'

இந்தக் கேள்வி அவள் மனத்தில் ஒரு நாள் முளை விட்டு, தினந்தோறும் வளர்ந்து கொண்டேயிருந்தது.

கடைசியில் அந்த ஆசையும் பலித்து விட்டது! இப்போது—!

மூத்தையனை மறக்கவே முடியவில்லை அவளால். அவன் எதிரிலேயே தானும், தன் எதிரிலேயே அவனும் வாழ்க்கை பூராவும் இருந்துவிட வேண்டுமென்ற பெரிய ஆசை ஏற்பட்டு விட்டது அவளுக்கு.

மூத்தையனுக்கும் அப்படியே! அந்தக் கண்ணம்மாவை நினைத்துக் கொண்டால் ஏதோ பட்டாம் பூச்சிதான் அவன் மனக்கண் முன் தெரிந்தது. அப்படி வர்ண மயமாயிருந்தாள் அவள்; அப்படிச் சுறு சுறுப்பாயிருந்தாள் அவள்: அப்படி, கிட்டே வருவதுபோல் வந்து எட்ட எட்டப் போய்க் கொண்டிருந்தாள். ஆனால், இன்று 'பட்டாம் பூச்சி'யைக் கூடப் பிடித்துவிட்டான் மூத்தையன்; பிடித்து விட்டுவிட்டான்! அவள் உருவமே அவன் மன வெளியில் ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. மயங்க வைக்கும் இளமை; பூரிக்கச் செய்யும் இரண்டு அங்கங்கள்; கண்ணைப் பறிக்கும் வகையில் தினம் ஒரு சிற்றாடை; வண்டுகள் வட்டமடித்துப் பார்க்கும் கண்கள் இவை யெல்லாம் ஒருங்கே கூடின அவளை ஒரு நாள் 'கைப் பிடித்துவிட வேண்டும்' என்று சங்கல்பமே செய்துகொண்டிருந்தான் மூத்தையன்.

அவன் குறிப்பிட்ட வெள்ளிக்கிழமை வந்து சேர்ந்தது. கண்ணம்மா பால் தவலையுடன் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தாள். ஆனால், மூத்தையனைக் காணவில்லை!

'அட, பாவி! பணத்துக்காக ஆளே மறைஞ்சுட்டானே! பணம் நெசம்மாதான் கேட்கிறேன்னு நினைச்சுட்டான் போலிருக்கு. நூறு ரூபாய்க்கு எங்கே போவான் இந்த ஆளு! ஒரு வேளை பசை உள்ளவனோ என்னமோ! எது எப்படியிருந்தாலும் இன்றைக்கு மட்டம் போட்டுட்டானே!' என்று நினைத்துக் கொண்டிருந்தாள்.

சேத்துப்பட்டில் அவள் இறங்கிய போதும் அவனைக் காணவில்லை. நேரே வழக்கமாகத்தான் போகும் டீக்கடைக்குப் போனாள் அவள். அங்கே அவள் கண்ட காட்சி!

கடை வாசலில் போட்டிருந்த பெஞ்சியின் மேல் இரண்டு மூன்று பேருக்கு நடுவில், கையில் டீ கிளாசுடன் உட்கார்ந்திருந்தான் மூத்தையன். அவளைப் பார்த்ததும் புன்னகை புரிந்தான். ஆனால் கண்ணம்மா ஒன்றும் பேசவில்லை. அவனைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. தலை மேல் இருந்த பால் தவலையைக் கீழே இறக்கி வைத்தாள்.

"கணக்கு எடுத்துக்குங்க. அரைப்படி பால் 'எக்ஸ்ட்ரா' இருக்குது!"

"அரைப்படி தண்ணி ஊத்திட்டயாக்கும்!" என்றார் கடைக்குள்ளிருந்தவர்.

"அதான் அண்ணே டீ கூடத் தண்ணியாயிருக்குது!" என்றான் மூத்தையன்.

"இந்தாய்யா. நான் இப்ப கொண்டார்ற பால் தண்ணின்னே வச்சுக்குவம். நீ முந்தியே புடிச்சு குடிக்கிற டீ தண்ணியாயிருக்கிறதுக்கு என்ன காரணம்னு உன் மண்டையிலே இருக்கிறதைக் கேட்டுப் பாத்துக்க!" என்று எரிச்சலுடன் சொன்னாள் கண்ணம்மா.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் வெறும் தவலையுடன் கிளம்பினாள். மூத்தையன் பார்த்துக் கொண்டேயிருந்தான். அவள் நடையழகில் அவன் கவனம் பதிந்திருந்தது.

மறு நாள் கண்ணம்மா கடைக்கு வந்தபோது அவள் முகம் வாடியிருந்தது. ஒரு வாரமாக அவளுடைய தாத்தாவுக்கு உடம்பு குணமில்லாமலிருந்தது. முதல் நாள் இரவு திடீரென்று அதிகமாகிப் போய்விட்டது. இரவுக்கு இரவே டாக்டரைக் கூப்பிட்டுக் காண்பித்ததில் அவர் உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்ல வேண்டுமென்றார். அதைவிட தனிப்பட்ட முறையில் எங்காவது 'நர்ஸிங்ஹோம்'மில் சேர்த்து வைத்தியம் செய்ய ஏற்பாடு செய்தால் நல்லது என்றும் தமது அபிப்பிராயத்தைச் சொன்னார். திடீரென்று வைத்தியச் செலவுக்குப் பணத்துக்கு எங்கே போவது!

அவள் முக வாட்டத்தைக் கடைக்காரர் கவனிக்கவில்லை. யந்திரமாய்த் தன் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தார் அவர்.

"ஒரு நூறு ரூபாய் பணம் வேணும், முதலாளி."

"பணம் பாங்கியிலே யிருக்கும்மா!"

"விளையாட்டில்லை. நிசம்தான். தாத்தாவுக்கு உடம்பு சரியில்லை. திடீரென்று இருதயக் கோளாறு ஏற்பட்டிருக்கிறதாம்......"

"ஜெனரல் ஆஸ்பத்திரியிலே கொண்டு போய்ச் சேர்க்கிறதுதானே!"

"பணத்தைச் செலவு பண்ணித் தனியாகவே வைத்தியம் பண்ணணும்கிறாரு டாக்டர்......"

"இப்போ பணம் இல்லே. உன் 'அட்வான்ஸ்' பணத்தை வேணுமானல் வாங்கிக்க. அதுவும் காலேக்குத்தான்!"

"இப்போ வேணும்ங்க!"

"இப்போ கிடையாது......"

கண்ணம்மாவுக்கு அழுகையே வந்து விட்டது. 'சடக்'கென்று அந்த இடத்தை விட்டு அகன்ருன். ஸ்டேஷனுக்குச் சென்று வண்டிக்காகக் காத்திருந்தாள். வண்டி வர இன்னும் ஒரு நிமிஷம் இருந்தது. குறுக்குப் பாதையில் யாரோ ஓடி வருவது அகஸ்மாத்தாகத் தெரிந்தது கண்ணம்மாவுக்கு. அது யார்! அவன்தான்! அவன்பேர் அவளுக்குத் தெரியாது; மூத்தையன்தான்!

வண்டி வந்து விட்டது. கண்ணம்மா ஏறிக் கொண்டு விட்டாள். மூத்தையனும் பாய்ந்து ஏறிக் கொண்டான். அவள் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டும் விட்டான்!

"ஏன் இப்படி ஓடற வண்டியிலே ஏறுகிறீங்க!"

"எல்லாம் உன்னேப் பிடிக்கத்தான்!"

"என்னேப் பிடிக்கவா! வண்டியைப் பிடிக்கவா!"

"உன்னேயும்தான்: வண்டியையும்தான்! நீ கடைக்கு வர்ற நேரமும், திரும்பிப் போற வண்டி நேரமும் எனக்குத் தெரியும். அதுக்குள்ளே வீவு போட்டுட்டு ஓடியாந்துடணும்னு போனேன்."

"எங்கே போனீங்க!"

"இந்தியன் மெடிக்கல் ஆஸ்பத்திரிக்கு!"

"அங்கே என்ன வீவு உங்களுக்கு! அங்கே வேலேயா!"

"ஆமாம்; மேல் நர்ஸு!"

"நான் கடைக்கு வர்ற நேரமும் திரும்பிப் போற வண்டியும் எப்படித்தெரியும் உங்களுக்கு!"

"அந்த மக் கடைக்கு மூதலாளியா இருந்து தொலேகிறேனே நான் அதனுலேதான்!"

"ஆ! அப்படியா!" என்று வியந்தாள்.

"ஆமாம்; வீவுக்கு விட்டிருக்கிறேன் கடையை. அதாவது குத்தகைக்கு..."

"அட! அந்தக் குத்தகைக்காரப் படுபாவிக்குத்தான் இத்தினி திமிரா!......"

"என்னு விஷயம் விவரமாகச் சொல்லு..." என்ருன் மூத்தையன்.

கண்ணம்மா எல்லாவற்றையும் சொல்லி விட்டு, "பணம் எங்கே! நேத்தே தரேன்னிங்களே!" என்ருள்.

"நேத்து நாள் நல்லா இல்லே. வெள்ளிக் கிழமை யானுலும், யோகம் மரண யோகம்......"

"ரூபா கொடுக்க நாள், நட்சத்திர யோகம் என்னு வந்திருக்கு!"

மூத்தையன் ரகசியமாகச் சொன்னுன்:

"இந்தா, கண்ணம்மா! இப்படி ஏன் பூச்சி பிடிக்கறே! உன் மனசிலே இருக்கிறது எனக்குத் தெரியும். நான் உன்னேக் கண்ணுலம் கட்டிக்கிடறதுன்னு தீர்மானம் பண்ணிப்பிட்டேன் என் கிறதையும் சொல்லிப் பிடறேன். உனக்குக் கொடுக்க வேண்டிய நூறு ரூபா யோடே பரிசப் பணம் ஆயிர ரூபாயும் ஆக ஆயிரத்து நூறு ரூபா இருக்கு. நேரே போயி, ஒரு டாக்ஸி எடுத்து உன் தாத்தாவை ஆஸ்பத்திரியிலே கொண்டு போய்ச் சேர்த்து விட்டு, அவருக்கு உடம்பு சுகமான பின்னே, வீட்டுக்கு இட்டுக் கினு வந்து விஷயத்தைச் சொல்லி, ஏற்பாட்டை முடிச்சுட வேண்டியதுதான்!" என்ருன்.

கண்ணம்மா உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்ப அவனே ஏறிட்டுப் பார்த்தாள். அவர்களேச் சீக்கிரம் தாம்பரத்துக்குக் கொண்டு சேர்க்கிற பொறுப்பறிந்து போகிற மாதிரி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது வண்டி!

# பரிசுத்த ஆத்மா

தமிழ் நாட்டுக்குச் சேவை செய்தவர்களில் இரு மன்னர்கள் மாண்டார்கள். அன்று திருச்சி டாக்டர் ராஜனும் நேற்று மதுரை வைத்தியநாதய்யரும்.

ஜடாயுவின் இரு சிறகுகளையும் ராவணன் வெட்டி வீழ்த்தியது போல் என் இரு சிறகுகளாயிருந்த இவ்விரு நண்பர்களையும் யமன் வெட்டி விட்டான். எந்த உயரத்துக்குப் பறக்க வேண்டியதா யிருந்தாலும் எந்த தியாகம் செய்ய வேண்டியதாக இருந்தாலும் எந்த வேலை செய்து சாதிக்க வேண்டியதாக இருந்தாலும் இந்த இரு வீரர்கள் எனக்கு இரு சிறகுகள் போல் இருந்து வந்தார்கள். எந்த நேரத்திலும் தயாராக இருந்தவர்கள். மறு பேச்சு பேசாமல் வேலை செய்து முடிப்பவர்கள். இது தமிழ் மக்கள் அனைவருக்கும் தெரியும். டாக்டர் ராஜன் ஓராண்டு படுக்கையில் நினைவற்ற தேகமாகக் கிடந்து ஆண்டவனடி சேர்ந்தார். வைத்தியநாதய்யர் நேற்று படுக்கையில் பரமசிவனைப் போல் முகத்தில் ஒளிவீசிப் படுத்துப் பேசிக் கொண்டிருந்தார். மாலை ஐந்தரை மணி வரையில் கூட இருந்தேன். அவ்வளவே என் அதிருஷ்டம். இரவு உயிர் பறந்து போயிற்று. உடலும் மதுரைக்கு மோட்டாரில் சென்று விட்டது. இன்றிரவு அதுவும் சாம்பலாகிப் போகும்.

தமிழ் மக்களுக்குள் ஒருவன் நம்மைப் போன்ற ஒரு சாதாரண மனிதன் நம்முடைய நாளில் ஒரு வீரனாக வாழ்ந்தான். பொய் அநீதி இவைகளைக் கண்டால் துடிதுடித்து வேதனைப்படும் ஒரு ஆள். தைரியத்துக்கு எல்லையில்லை. இன்று ஆயிரக் கணக்கில் கண்ணீர் விட்டு அழுவார்கள், வைத்தியநாதய்யரிடம் உதவி பெற்றவர்கள்.

பரிசுத்தமான ஆத்மா என்றால் அதற்கு ஒரு உதாரணமாக விளங்கி வாழ்க்கை முடித்தார். சுதந்திரம், சீர்திருத்தம், ஆஸ்திகம், இவற்றுக்குத் தமிழ் நாட்டில் வேறு யார் வைத்தியநாதய்யருக்குச் சமானமாக உழைத்தவர்கள்? யாருமில்லை. அவருடைய புகழும் நினைவும் என்றும் மறையாது. உடல்தான் சாம்பலாயிற்று. இந்த மண்ணோடு மண்ணாகப் போயிற்று. உயிர் மீனாட்சிநாதனுடன் சேர்ந்து போயிற்று. நாம் ஏன் துக்கப்பட வேண்டும்?

சென்னை
24—2—55

இராஜகோபாலாச்சாரி



★★★ டி. கே. சி. அவர்களின் 'கம்பர் தரும் ராமாயணம்' மூன்றுவது பாகம்—சுந்தர காண்டமும் யுத்த காண்டமும் அடங்கிய கடைசிப் பகுதி—டி. கே. சி. அவர்கள் மறைந்த முதலாவது ஆண்டுத் திதியாகிய இன்று வெளியாகிறது. இந்தத் தங்கமான நூலுக்கு ராஜாஜி அழகான முன்னுரை எழுதியிருக்கிறார்கள். ராஜாஜியின் இந்த முன்னுரையே டி. கே. சி. அவர்களின் நூலுக்கு மதிப்புரையாக விளங்குகிறது. அதை அப்படியே இங்கு மகிழ்ச்சியோடு தருகிறோம். — ஆசிரியர்

# தங்கச் சுரங்கம்

### சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

இத்தகைய ஒரு நூலுக்கு முன்னுரை எழுதும் பாக்கியம் நான் பெற்றேன் என்பதை நினைக்கும்போது நான் டி. கே. சி. அவர்களுக்கு எவ்வளவு கடன் பட்டிருக்கிறேன் என்பது மற்றும் ஒரு வகையில் ஊர்ஜிதமாகிறது.

ராமாயணக் கதை நம்முடைய நாட்டின் தங்கச் சுரங்கம். அதிலும் கம்பன் பாடிய ராம கதை இருபத்தி நான்கு மாற்று அபரஞ்சி. இந்தத் தங்கத்தை எடுத்துக் காட்டிய தங்க நிபுணர்களுக்குள் நம்முடைய டி.கே.சி. அவர்கள் முதல் இடம் பெற்று விட்டார். இதை யாரும் எந்தப் புலவரும் மறுக்க முடியாது. ஸ்ரீ ராமபிரான் எப்படிக் கம்பன் உள்ளத்தில் மற்றும் ஒரு முறை அவதரித்தானே, அவ்வாறே கம்பனும் டி. கே. சி. யின் உள்ளத்தில் மறுபடி அவதரித்தான், தற்காலத்துத் தமிழருக்காக, என்று நான் சொல்லுவேன்.

டி. கே. சி. அவர்கள் கம்பனுடைய உள்ளத்தில் புகுந்து அதன் அந்தரங்கத்தை அறிந்து, கம்பன் பாடல்களைப் பாடி, கவி—வானம் உண்டாக்கி அமுத மழை பொழியச் செய்வார். அதை நேரில் அனுபவித்தவர்கள், நூற்றுக் கணக்கான தமிழர்கள், இருக்கிறார்கள். அவர்கள் அறிவார்கள் அதன் மகிழ்ச்சியை; எழுத்தில் ஓரளவுதான் தொனிக்கும்.

ஆனால் இப்போது டி. கே. சி. ஊனுடலை விட்டுப் போய் விட்டார். நிற்பது என்னைப் போன்ற பித்தரின் உள்ளத்தில் இருக்கும் நினைவுகளும் இந்த நூலும்.

நூலின் கடைசிப் பகுதி, அதாவது சுந்தர காண்டம், யுத்த காண்டம் அடங்கிய மூன்றும் பாகம், இப்போது வெளியாகி யிருக்கிறது. அதற்கு என்னை முகவுரை எழுதச் சொன்னார், அன்புக்குரிய டி. கே. சி. அவர்களின் பேரன் நடராஜன். முகவுரையாக எனக்கு என்ன எழுதத் தெரியும்? நான் தமிழைப் படியாமல் காலம் கழித்தவன். தமிழை நன்ருகப் படித்தவர்கள், நூல்களை ஆராய்ந்தவர்கள், பெரும் புலவர்கள் பலர் இருக்கின்றார்கள். அவர்களுக்கு மனத்தில் வணக்கம் செலுத்தி விட்டு, மறைந்து போன டி.கே.சி. அவர்களின் சார்பில் இந்த நூலைத் தமிழ் மக்களுக்குச் சமர்ப்பிக்கிறேன். முன்னுரை எழுதும் பதவியை அன்பினால் அடைந்தேன். புலமையாலோ, திறமையாலோ அடைந்த தல்ல இந்தச் சிவிகை. என்னையும் ஓர் பொருளாக்கி இந்தச்சிவிகையில் ஏற்றியதுடி.கே.சி. அவர்களின் அன்பே. அதன் சக்தியைக் கண்டு வியந்து பணிந்து வணங்குகிறேன்.

டி. கே. சி. ரசிகர் மட்டும் அல்ல; கவிஞரே ஆவார். கவிஞரா யிருந்தாலேதான் பாடல்களில் அவர் கண்ட மாதிரிப் பொருளைக் காண முடியும்; அழகைக் காண முடியும்; இடையில் புகுந்த பிழைகளைத் திருத்த முடியும்; செருகிய பாட்டுக்களைக் கழித்து விடும் தைரியமும் உண்டாகும். டி. கே. சி. யை ஒரு கவிஞர் மட்டுமல்ல ஒரு வீரர் என்றே நான் சொல்லுவேன். பல புலவர்களை எதிர்த்துக் கடைசி வரையில் தலை குனியாது போர்க்களத்தில் நின்றவர். 'நாம் படித்து வந்த பாடல்கள், மற்றப் பாடல்களுக்கும் இந்தப் பாடல்களுக்கும் ஒரு வித்தியாசமும் காணுத நம்மைக் கேட்காமல், இந்தப் பாடல்களை நீங்கள் எப்படி 'செருகு' என்று சொல்லி விடலாம்? திருத்துவதும் தள்ளி விடுவதும் அபாயமான காரியம்' என்று வாதாடி டி. கே. சி. அவர்கள் செயலை ஒப்புக் கொள்ளாதவர்கள் பலர். ஆனால் டி. கே. சி. அவர்களின் கவி உள்ளத்துக்கு மாற்று குறைபட்ட தங்கத்தை ஒப்புக் கொள்ள முடியவில்லை. இந்த மட்டமான பாடல்களைக் கம்பன் பாடியிருக்க முடியாது, ஆனபடியால் அவற்றைத் தள்ளி விடுவதே சரி என்றார். சில இடங்களில் பாடல்களில் சில திருத்தங்களும் அமைத்திருக்கிறார்கள். இவற்றையெல்லாம் ஒருமிக்க அனுபந்தத்தில் காணலாம். அந்த அனுபந்தம் சாதாரணமாக நாம் பார்க்கும் அச்சுப் பிழைத் திருத்தங்களின் அட்டவணையல்ல. வழக்கத்தில் இருந்து வரும் பாடத்தில் டி. கே. சி.அவர்கள் செய்திருக்கும் திருத்தங்களின் பட்டியல்.

இன்னொரு அனுபந்தம் இருக்கிறது. பாடல்களின் முதற் குறிப்பு அட்டவணை. அதிலும் ஒரு விசேஷம் உண்டு. முதல் எழுத்தை வைத்து வரிசையாகத் தயாரிப்பது வழக்கம். இந்த நூலில் காண்பது எதுகை யகராதி; அதாவது எதுகையில் தொடர்ந்து வரும் மெய் எழுத்தை அல்லது உயிர் மெய் எழுத்தைக் கொண்ட வரிசைக் கிரமம். உதாரணம்: லை என்பதன் கீழ் மூன்று பாடல்கள் காட்டப்பட்டிருக்கின்றன. அந்த மூன்று பாடல்களிலும் எதுகை லை என்ற எழுத்தின் மேல் நிற்கும். ஒரு பாடலில் எந்த வரி நினைவுக்கு வந்தாலும் அதை வைத்து இந்த அட்டவணையிலிருந்து பார்த்து எடுத்து விடலாம். முதல் வரியிலுள்ள முதல் மொழியை மட்டும்

காட்டாமல் நான்கு வரிகளுக்கும் பொதுவாக உள்ள எழுத்தைக் கொண்டு இந்த அட்டவணை தயாரிக்கப்பட்டிருப்பதால் இதில் அதிக சவுகரியம் உண்டு. 'மலைக்குவட்டு' அல்லது 'குலைக்குவட்டு' அல்லது 'தலைக்குவட்டு' அல்லது உலைக்குவட்டு'—எது நினைவிலிருந்தாலும் பாட்டைத் தேடி எடுத்து விடலாம்.

*　　　*　　　*

நூலைப் படிப்பதினால் என்ன பயன்?

உள்ளம் தூய்மை அடையும். இதைவிட என்ன பயன் வேண்டும்?

தமிழ் மக்கள் முன்னேற்றம் அடைய வேண்டுமானால் உள்ளம் தூய்மை அடைய வேண்டும். உள்ளம் தூய்மை அடைவதற்கு என்ன செய்ய வேண்டும்? தமிழ் படிக்கத் தெரிந்தவர்கள் கம்பனைப் படிக்க வேண்டும். அதுவே வழி. படிக்கத் தெரியாதவர்களுக்கு வேறு சாதனங்கள் வேண்டும். படிக்கத் தெரிந்தவர்களுக்கு இது ஒன்றே போதும்.

ஒவ்வொரு ஊரிலும் ஒரு 'கம்பன் பள்ளி' அமைக்க வேண்டும். நண்பர்கள் சேர்ந்து உட்கார்ந்து, ஒரு மணி காலம் கம்பராமாயணம் படிக்க வேண்டும். நன்ருகப் பாடத் தெரிந்தவர் ஒருவர் இருந்தால் ரொம்ப விசேஷம். டி. கே. சி. அவர்களின் உரையை வைத்துக் கொண்டு படித்தால், கம்பனுடைய உள்ளத்தில் பிரவேசித்து விடலாம். ஏன்? ராமன் உள்ளத்தில் பிரவேசித்து விடலாம். குகன் உள்ளத்தில் பிரவேசித்து விடலாம். அனுமன் உள்ளத்தில் பிரவேசித்து விடலாம். இதற்கு மேல் என்ன வேண்டும்? எல்லாம் தாமாகப் பின்னால் வந்து சேரும். கவலைப்பட்டு அலைய வேண்டியதில்லை.

கம்பனுடைய ராமாயணம் எப்படி இருபத்து நான்கு மாற்றுத் தங்கம் என்று சிலர் கேட்கலாம். டி. கே. சி. என்ன செய்தார்? பதவுரையும் பொழிப்புரையும் ஒரு பெரிய வேலையா என்று கேட்கலாம். படித்துப் பாருங்கள் தெரிய வரும். உதாரணம் ஒன்று எடுத்துச் சொல்லுகிறேன்:

'லக்ஷ்மி தேவியை ஒத்த சீதா பிராட்டியைத் தேடுவதற்காக வாயு புத்திரனை அனுமனையும் தன் மற்றப் படைகளையும் நாலு திசையிலும் அனுப்பியிருந்தான் சுக்ரீவன். அப்படி அனுப்பியிருந்த நிலையில் ஒரு நாள் ராமன் பக்கத்தில் உட்கார்ந்தான்.

ராமன் மிக்க துயரத்தில் ஆழ்ந்திருக்கிறான். "நாம் செய்திருக்கும் ஏற்பாடு ஒன்றும் போதாது. பெரிய அவமானத்துக்கு உள்ளாகப் போகிறோம் போலிருக்கிறது" என்று சுக்ரீவனிடம் சொல்லுகிறான்.

"தேடிப் போனவர்கள் வரவேண்டிய நாட்கள் கடந்து விட்டன. தென்திசை நோக்கிப் போனவர்கள் இன்னும் வரவில்லை. சீதை ஒருவேளை இறந்து போயிருக்கலாம். அப்படியானல் 'அந்தச் செய்தியை ராமன் முதலியோரிடம் சொல்லி என்ன செய்ய? உயிர் துறப்பதே நல்லது' என்று எண்ணி அவர்களாக இறந்து போனர்களோ?"

இப்படி ராமன் சுக்ரீவனிடத்தில் சொல்லிக் கொண்டிருக்கும்போது தெற்கு திக்கில் ஒரு பிரகாசம் தோன்றுகிறது.

அடுத்த க்ஷணமே ராமன் முன்னிலையில் அனுமன் வந்து விட்டான். ஆனல் அவன் ராமனை வணங்கவில்லை!

'எய்தினன் அனுமனும்;
　　எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுதிலன்;
　　முளரி நீங்கிய
தையலை நோக்கிய
　　தலையன், கைகொடு
வையகந் தழீஇநெடி
　　திறைஞ்சி வாழ்த்தினன்!'

இலங்கையிலிருந்து வந்த அனுமன் தன்னை வணங்கவில்லை. சீதாபிராட்டி இருந்த திசையை நோக்கி அல்லவா சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறான். அதைப் பார்த்து விஷயத்தை அறிந்து கொண்டு விட்டான் ராமன்.

சீதை யிருந்த தெற்கு திசையை நோக்கி சாஷ்டாங்கமாக விழுந்து கிடந்த அனுமன் சிறிது நேரங்கழித்துத் தன் வசத்துக்கு வந்து எழுந்து நின்று ராமனைப் பார்த்துப் பேசுகிறான். 'கண்டேன்! கற்புக்குஅரசியான சீதா தேவியை நேரிலேயே இந்தக் கண்களாலேயே பார்த்தேன்' என்று சொல்லுகிறான்.

'கண்டனென் கற்பினுக்கு
　　அணியைக் கண்களால்,
தெண்டிரை அலைகடல்
　　இலங்கைத் தென்நகர்
அண்டர்நா யக! இனித்
　　துறத்தி ஐயமும்
பண்டுள துயரும்' என்று
　　அனுமன் பன்னுவான்.

'இலங்கைக்குப் போனேன். சீதா பிராட்டியையா கண்டேன்? அல்ல!'

'விற்பெருந் தடந்தோள்வீ ர!
　　வீங்குநீர் இலங்கைவெற் பில்
நற்பெருந் தவத்தளா ய
　　நங்கையைக் கண்டேன்அல் லேன்:—
இற்பிறப்பு என்பதொன் றும்
　　இரும்பொறை என்பதொன் றும்
கற்பெனும் பெயரதொன் றும்
　　களிநடம் புரியக்கண் டேன்!'

"சீதையையா கண்டேன்?

"உயர்ந்த குடிப்பிறப்பு என்னும் தத்துவமும், லக்ஷியப் பொருளை அடைவதற்காகக் காத்திருக்கும் பொறுமை என்னும் அரிய தத்துவமும், கற்பு என்று ஒரு வார்த்தை உண்டல்லவா? — அந்த மொழியினுள் பொதிந்து கிடக்கும் பொருள் அனைத்தும்—ஆக 'மூன்று தத்துவங்களும் எக்களிப்போடு கூத்தாடின காட்சியைக் கண்டு விட்டு வந்திருக்கிறேன்" என்கிறான் அனுமன்.

புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் இத்தகைய ரத்தினங்கள் பதிந்திருக்கின்றன. டி. கே. சி. யின் குரலே கேட்பது போலிருக்கும். *இந்த நூலைத் தமிழ் மக்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

---

*"கம்பர் தரும் ராமாயணம்" மூன்றும் பாகம். பிரசுரம்: பொதிகைமலைப் பதிப்பு, திருக்குற்றாலம், தென்காசி. விலை ரூ. 6/-

"இந்த அம்மா எங்க அம்மா இல்லே. இது உங்கம்மா. எங்கம்மா வள்ளி! அவங்க என்னை அடிக்கமாட்டாங்க, திட்டமாட்டாங்க, பால் கொடுக்கமாட்டேன்னு சொல்லமாட்டாங்க.

உங்கம்மா உன்மேலே பிரியமா இருக்கிற மாதிரி எங்கம்மாவும் என் மேலே பிரியமா இருப்பாங்க... நான் அங்கே போறேன்"



யுனைடெட் பில்ம் ஆர்ட்ஸ்

# வள்ளியின் செல்வன்

ஜெமினி ரிலீஸ்

இப்பொழுது

**சென்னை வெலிங்டன், பிரபாத், சரஸ்வதி**

*மூன்று தியேட்டர்களிலும், மற்றும் தமிழ்நாடெங்கும் . . . . . .*

சென்னையில் தினசரி 3 காட்சிகள் : 2-30, 6, 9-30

# ஒரு சிறு நாடகம்



ஒரு பெண் கண்ணனிடத்தில் ஓரே காதலாய் அவனோடு சதா உறவாடிக் கொண்டிருக்கிறாள்.

அவன் பக்கத்தில் இல்லாத போது பகற் கனவு எத்தனையோ காண்பாள். சில வேளைகளில் பகற் கனவை கனவு என்று எண்ணுவதுண்டு. வேறு சில வேளைகளில் நனவையும் கனவுதானோ என்று எண்ணுவதும் உண்டு.

இந்த நிலையில் ஒரு நாள் இரவு கொஞ்சம் நேரம் ஆய் விட்டது. கண்ணன் வெளியே போனவன் வீட்டுக்குத் திரும்பி வரவில்லை. கட்டிலில் படுத்தாள். விழித்துக் கொண்டே இருக்க முயற்சித்தாள், இயலவில்லை. தூங்கி விட்டாள்.

சிறிது நேரம் கழித்துத் திடுக்கிட்டு விழித்தாள். அவள் பக்கத்தில் கண்ணன் உட்கார்ந்திருந்தான்.

* * *

பெண் பேசுவதைப் பார்க்கலாம்:

திக்குத்தெ ரியாத காட்டில் — உனைத்
தேடித்தே டிஇளைத் தேனே.

ஒரு மலைப் பிரதேசம். ஏகாந்தமான இடம். காதலர்கள் தனித்து உறவாடுவதற்கு வாய்ப்பான இடம்.



மிக்கந லம்உடைய மரங்கள் — பல
விந்தைச்சு வையுடைய கனிகள் — நாலா
பக்கத் தையும்மறைக்கும் வரைகள் — கீதம்
பாடி நகர்ந்துவரும் நதிகள்

கண்ணனைத் தேடித் தேடிச் சோர்வு அடைகிறாள்.

கால்கைகள் சோர்ந்துவிழல் ஆனேன்—இரு
கண்ணும் துயில்படரல் ஆனேன்—ஒரு
வேல்கைக் கொண்டுகொலை வேடன்—உள்ளம்
வெட்கம் கெட்டொழிய விழித்தான்—

வேடன் அநாகரிகமாகப் பேசுகிறான்.

''பெண்ணே உனதழகைக் கண்டு—மனம்
பித்தம் கொள்ளு ''தென்று சொன்னான்—'' அடி
கண்ணே எனதிருகண் மணியே—உனைக்
கட்டித் தழுவமனம் கொண்டேன்''

என்ன செய்வாள் அப்பாவி.

என்றே கொடியவிழி வேடன்—உயிர்
இற்றுப் போகவிழித்(து) உரைத்தான்—தனி
நின்றே இருகாமும் குவித்து—அந்த
நீசன் முன்னர்இவை சொன்னேன்.

வேடனிடம் பயந்து பேசுகிறாள் பெண்.

அண்ணா உனதடியில் வீழ்வேன்—எனை
அஞ்சக் கொடுமைசொல்ல வேண்டாம்—பிறன்
கண்ணாலம் செய்துவிட்ட பெண்ணை—உன்தன்
கண்ணாலும் பார்த்திடத்த குமோ.

வேடன் பிடிவாதமான வார்த்தை சொல்லுகிறான்.

ஏடி சாத்திரங்கள் வேண்டேன்—நின(து)
இன்பம் வேண்டும்அடி கிளியே—நின்தன்
மோடி கிறுக்குதடி தலையை—அந்த
மோந்தைப் பழையகள்ளைப் போலே.

மூர்ச்சை அடைந்து விடுகிறாள் பெண்.

காதால் இந்தஉரை கேட்டேன் — அட
கண்ணா என்றலறி வீழ்ந்தேன்—மிகப்
போதாக இல்லைஅதற் குள்ளே—என்தன்
போதம் தெளியநினைக் கண்டேன்.
கண்ணா வேடன்எங்குப் போனான்—உனைக்
கண்டேஅ லறிஓடி னானோ—மணி
வண்ணா எனதபயக் குரலில்—எனை
வாழ்விக்க வந்தஅருள் வாழி!

கனவை உணர்ச்சியோடு கட்டிலின்மேல் இருந்த கண்ணனிடம் சொல்லி வந்தாள். அப்படிச் சொல்லி வந்த காரணத்தாலே நனவாகவே மாறி விடுகிறது, பெண்ணின் உள்ளத்தில். ஒரு உண்மையான மயக்கம் நாடக இயல் அழகாய் அமைந்திருக்கிறது பாடலில்.

---

டி. கே. சி. அவர்கள் வைத்துப் போயுள்ள 'தமிழ்க் களஞ்சியம்' கவிதை விளக்கங்களுள் ஒன்று. இதுவரை வெளிவராதது.

# முத்தமிழ் வளர்த்த முனிவர்



இன்று எங்கு பார்த்தாலும் ஒரே தமிழ் முழக்கமாக இருக்கிறது. தமிழுக்காக ஒரு "வீரச் சேனை"யே அணிவகுத்து நிற்கிறது! நல்ல காலத்துக்கு அறிகுறி இது. ஆனால் டி. கே. சி. தமிழ் உலகில் பாதம் பதித்த காலமோ முற்றிலும் வேறு விதமாக இருந்தது. தமிழ் நாட்டில் அந்தக் காலத்தில் தமிழ் மக்களிடத்தில் தமிழைப் பற்றி ஒரு அலட்சியம் நிரம்பிப் போயிருந்தது. ராமாயணம் படிக்கிற வக்கீல் என்றால், கட்சிக்காரன் கூட ஒதுங்கிப் போன நாள் அது!

இதற்குக் காரணம் என்ன!

தமிழ் நாட்டில் ஆங்கிலக் கல்வி பரவியதனால் நன்மை ஏற்பட்டதோடு, தீமையும் ஏற்பட்டது. ஆங்கிலம் பயின்ற மக்களிடத்திலே தமிழ் அறிவு மருந்துக்குக்கூட இல்லாமல் போய் விட்டது! தமிழைப் படிக்க வேண்டிய அவசியம் இல்லாமலேயே மக்கள் முன்னேறினார்கள். ஆங்கில மொழி பயின்று, அதன் மூலம் பெறுகிற பட்டங்களினால், உத்தியோகமும், வாழ்க்கையில் நல்ல அந்தஸ்தும், பணமும் மக்களுக்குக் கிடைத்தன. தமிழ்ப் படிப்பு எதற்கு! ஆங்கிலப் படிப்பு மட்டும் இருந்தாலே போதும், அதுவே கௌரவத்தை சம்பாதித்துக் கொள்ள சாதனம் என்ற நிலை இருந்ததால், படித்துப் பட்டம் பெற்றுப் பதவிகளை அடைந்த அறிஞர் கூட்டத்தில் தமிழ் அறிவு சூன்யமாகி விட்டது! அன்னிய ஆட்சி முறையில் இப்படி நேர்ந்தது அதிசயம் இல்லைதான்.

இன்னொரு காரியமும் இந்தத் தமிழ் அறியாமைக்குத் துணை செய்தது. பள்ளிக்கூடங்களில் இரண்டாவது பிரிவான பாஷைக் கல்வியில், தமிழ் வேண்டுமா அல்லது ஸம்ஸ்க்ருதம் வேண்டுமா என்று முடிவு செய்து, இரண்டில் ஒன்றை மட்டுமே மாணவர்கள் படிக்க முடிந்தது. தமிழ் நாட்டில் நீண்ட காலமாக இணைந்து வளர்ந்து வந்த இந்த இரண்டு மொழிகளில், ஏதாவது ஒன்றை மட்டுமே மாணவர்கள் கற்றார்கள். இது காரணமாகத் தமிழ் மாணவர்களுக்கு ஸம்ஸ்க்ருதமும், ஸம்ஸ்க்ருத மாணவர்களுக்குத் தமிழும் அன்னியமாகி விட்டன. அன்னிய மொழியான ஆங்கிலமோ இருவருக்குமே சொந்தம் ஆகிவிட்டது! இதனால் நேர்ந்தது என்ன? தமிழ் மாணவர் என்றும், ஸம்ஸ்க்ருத மாணவர் என்றும் சிறு வயதிலிருந்தே இரு வேறு இனங்கள் ஏற்பட்டன. எது மேல், எது தாழ்வு என்றெல்லாங்கூட வேண்டாத சர்ச்சை எழுந்தது. ஆகக்கூடி முடிவு என்ன ஆயிற்று என்றால், நாட்டு நிர்வாகத்திலும், முக்கிய அறிவுப் பணிகளிலும் உள்ளவர்களிடையே தமிழ் அறிவு குறைந்தது. வீட்டிலே பேசுகிற தமிழ் ஞானத்தை மட்டுமே வைத்துக் கொண்டு, ஆங்கிலம் பயின்ற பலத்தின் ஆதாரத்தினால் தமிழ் மொழி சம்பந்தமாகவும் தமிழ் இலக்கியம் சம்பந்தமாகவுமே முடிவு செய்வதும், தாராளமாக அபிப்பிராயங்கள் வழங்குவதும் படித்தவர்களிடையே சகஜமாகி விட்டது! இது தமிழுக்கு நேர்ந்த ஒரு பெரிய துரதிருஷ்டம். இந்த துரதிருஷ்டம் பிடித்த தமிழ் உலகில் டி. கே. சி. அடியெடுத்து வைத்தார்கள், சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன். ஸம்ஸ்க்ருதத்திலோ அல்லது வேறு எந்த மொழியிலோ எவ்வித துவேஷமும் இல்லாதவர், ஆங்கிலத்தை மிக நன்றாகக் கற்றுத் தேர்ந்தவர், விஞ்ஞான நூல்களையெல்லாம் நுணுகிப் பார்த்தவர்—அப்படிப்பட்ட டி. கே. சி. தமிழ் உலகிலே புகுந்து, "தமிழ் பாஷையானது உலகிலேயே சிறந்த பாஷை. கம்பரைப்போல் ஒரு கவி எங்கும் இல்லை. தமிழ் நாட்டின் கலைகளைப்போல உலகெங்கிலுமே கிடையாது!" என்று சொல்ல ஆரம்பித்துப் படித்த மக்களிடையே ஒரு பரபரப்பை உண்டாக்கினார். ஸம்ஸ்க்ருதம் படித்த ஆங்கிலக் கல்விமான்கள் மத்தியிலும், தமிழை அறவே புறக்கணித்து விட்ட சென்னைப் பல்கலைக் கழகப் பட்டதாரிகள் மத்தியிலும் வீராவேசமாகப் புகுந்து, "நீங்கள் படித்த இந்தப் படிப்பு உதவாக்கரைப் படிப்பு!" என்று அழுத்தம் திருத்தமாக ஓங்கி ஒரு போடு போட்டார்! உள்ளத்தின் பண்பாட்டையும், ஆங்கில மொழியிலும் விஞ்ஞான கலைகளிலும் அவருக்கிருந்த அபார ஞானத்தையும் கண்டு வியந்த அறிஞர்களால் டி. கே. சி. யின் வார்த்தைகளை அலட்சியமாகத் தள்ள முடியவில்லை. செவி சாய்த்தார்கள். டி. கே. சி. தமக்கே உரிய அற்புதமான தெளிவோடும், ஆனந்தத்தோடும் தமிழின் நயங்களை, அழகுகளை, அருமைப்பாடுகளையெல்லாம் எடுத்துக் கூறித் தமிழைப் பற்றித் தவறாக எண்ணிவந்த படித்த கூட்டத்தினருக்கு, விழிப்பைக் கொடுத்தார். ஜாதி வேற்றுமை, மொழி வேற்றுமை, குறுகிய நோக்கங்கள்—ஏதுவுமின்றி இலக்கிய நிலையிலே, கலையுலகின் ஆனந்த இதய அரங்கிலே நின்று, இந்த உண்மைகளையெல்லாம் வழங்கினார். யாவரும் புரிந்து அநுபவிக்கும் எளிய தமிழிலே வழங்கினார்.




தமிழ் மொழியில் பித்தே ஏற்பட்டது பலருக்கு. கல்லூரியில் கற்று உயர் நிலையை அடைந்த பலர் டி. கே. சி.யின் பக்தர்கள் ஆனார்கள். இது கல்வி உலகுக்கும் தமிழ் மொழிக்கும் டி. கே. சி. செய்த ஒப்பற்ற சேவையாகும்.

தமிழ் இசை இயக்கத்தைத் தோற்றுவித்து அதன் வளர்ச்சிக்கு எத்தனையோ வழிகளில் தொண்டாற்றியவர் டி. கே. சி. இதைக் குறித்துப் பல தப்பபிப்பிராயங்கள் இன்றும் நிலவுகின்றன. டி. கே. சி.க்கு சங்கீதம் தெரியாது என்று ஒரு காரணத்தைச் சொல்லி, டி. கே. சி.யின் தமிழிசை ஆர்வத்தைக் கேலி செய்தவர்கள் பலர் உண்டு.

இது முற்றிலும் தவறானது. டி. கே. சி. யோடு நெருங்கிப் பழகிய நண்பர்களுக்கும், சில சங்கீத வித்வான்களுக்குமே, டி. கே. சி. சங்கீதத்தின் ஜீவனையே உணர்ந்தவர்கள் என்பது அநுபவத்தில் தெரியும்.

டி. கே. சி. யோடு பல ஆண்டுகள் மிக நெருங்கிப் பழகிய முறையில், என்னுடைய எல்லையற்ற வியப்பு அவர்களுடைய ஒலி ஞானத்தைப் பற்றித்தான். அவர்களுடைய ஆராய்ச்சி, கல்வி, இதயப் பாங்கு, பண்பாடு, ஒழுக்கம் எல்லாவற்றிற்குமே அடிப்படை அவர்களுடைய இந்த ஒலி ஞானந்தான் என்றே சொல்லுவேன். செவிச் செல்வம் என்றால் அது சங்கீதம் மட்டும் இல்லை, ஆயகலைகள் அத்தனையுமேதான், என்பதற்கு அவர்களே சான்று. அவர்களுடைய தனிப் பண்பு. இந்த ஒலிஞானத்தினால் பிறந்ததே.

சங்கீதம் சம்பந்தமாக பாஷையைப்பற்றிய ஒரு வேண்டாத சர்ச்சை நம்மிடையே நிகழ்ந்து வருகிறது. இது குறித்து டி. கே. சிக்கு உறுதியான கொள்கை உண்டு. சங்கீதம் என்பது பாஷையைக் கடந்தது என்று சொல்லப் படுகிறது. இதில் உள்ள உண்மை டி. கே. சிக்கு நன்றாகத் தெரியும். சங்கராபரண ராகத்தை ஒருவர் ஆலாபனை செய்தால், "கொஞ்சம் தமிழிலே இந்த ஆலாபனையை நடத்துமய்யா!" என்று சொல்லக்கூடிய ஞான சூனியம் இல்லை அவர். ஆலாபனை என்றும், பல்லவி என்றும் சொல்லும்போது, அது பாஷையைக் கடந்த காரியம் என்பது டி. கே. சிக்கு நன்றாகத் தெரியும். நாகஸ்வர இசையை மணிக்கணக்காக ரஸிப்பார்கள். தனம்மாளின் வீணையை மெய்ம் மறந்து கேட்டுக் கொண்டிருப்பார்கள். அப்பொழுதெல்லாம் "கொஞ்சம் தமிழிலே நடக்கட்டுமே" என்று அவர்கள் சொன்னது கிடையாது. பின் ஏன் அவர்கள் தமிழிசை இயக்கத்தில் ஈடுபட்டார்கள்!

பாட்டு என்றும் கீர்த்தனை என்றும் ஒரு வித்வான் பாட ஆரம்பிக்கும் போது, அங்கே பாஷையின் ஆதிக்கம் வந்து விடுகிறது. இது யாரும் ஒப்புக் கொள்ளக்கூடிய விஷயம். நாதம் என்றால் அது அர்த்தமற்ற ஓசையில்லை. கூர்ந்து பார்த்தால் சொல் என்பது அச்செழுத்தா! இல்லை. அதுவும் நாதமே, நாத வடிவமே! இந்த உண்மையை நாம் உணர வேண்டும். நாதத்தினால் இறைவனை உபாசித்தவர்களான தியாகய்யர், முத்துஸ்வாமி தீக்ஷிதர் போன்ற வாக்கேய காரர்களும் தங்களுடைய நாத உபாசனைக்கு வெறும் ஒலியை எடுத்துக் கொள்ளவில்லை. சரிகமபதநி என்ற ஏழு ஸ்வரங்களையே மடக்கியும் நெளித்தும் தங்கள் பக்தியை, தங்கள் உணர்ச்சியை, தங்கள் கற்பனைகளைச் சொரிந்து விடவில்லை. இறைவனிடத்தில் அவர்களுக்கு இருந்த அளவற்ற பக்தியைச் சொல்லின் மூலமே வெளியிட்டார்கள். ஆனால் ஒன்று. வெறும் வசனமாக வெளியிடவில்லை. அற்புதமான பாடல்களாக வெளியிட்டார்கள். நாத உபாசனை என்ற மேலான பூஜைக்கு அவர்கள் சங்கீதத்திலேயே பாஷையைக் குழைத்து அபிஷேகம் செய்தார்கள். வெறும் ஒலியோடு நிற்கவில்லை அவர்கள். பார்க்கப் போனால் அவர்களுடைய கீர்த்தனைகளில், சாஹித்யத்தை சங்கீதம் உண்டாக்கியதா, அல்லது சங்கீதத்தை சாஹித்யம் உண்டாக்கியதா என்ற வறட்டு ஆராய்ச்சிக்கே இடமில்லை. இரண்டுமே ஒன்றையொன்று உண்டாக்கிக் கொள்ளவில்லை. இரண்டையுமே ஒருசேர ஆக்கிய சக்தி வேறொன்று. அதுதான் பக்தியோடு இயங்கிய ஞானம்.



"வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விழைவன யாவையே!"

என்ற அருமையான கம்ப ராமாயணப் பாடலுக்குப் பதவுரையும் பொழிப்புரையுமாக இருந்த இல்லறம்.

டி. கே. சி. இந்த உண்மைகளை நன்கு உணர்ந்த பெரியவர். ராமனிடத்தில் அபார பக்தி காரணமாகத் தியாகராஜருடைய உள்ளத்திலே இசையும் சொற்களும் இணைந்து கீர்த்தனங்களாகப் பிறந்தன. அந்த அநுபவத்தை நாமும் பெற வேண்டுமானால், அந்த இசையின்பத்தைத் தாங்கி வருகிற, அந்த பக்தியின் மற்றொரு முக்கிய வெளியீடான சொற்களின் பொருளையும் நாம் தெரிந்தே ஆக வேண்டும். இல்லையென்றால் நம்முடைய அநுபவம் பூரணமாகாது — இதைத்தான் டி. கே. சி. சொன்னார்கள்.

பொதுவாக, ஒரு பாட்டுக்கு மூன்று அம்சங்கள் உண்டு. ஒன்று, அந்தப் பாட்டு அமைந்துள்ள ராகத்தின் உணர்ச்சி. இரண்டாவது, அந்தப் பாடலின் அமைப்பு முறையினாலும் நடையினாலும் உண்டாகிற வடிவ உணர்ச்சி. மூன்றாவது அந்தப் பாடலின் சொற்களால் ஏற்படுகிற பொருள் உணர்ச்சி. புரியாத பாஷையில் கேட்கிற பாட்டுக்களில் முன் இரண்டு உணர்ச்சிகளை மட்டுமே நாம் பெறமுடியும். ராக ஆலாபனைகளையோ இசைத் துணுக்குக்களையோ அல்லது பல்லவிகளையோ போலன்றி, ஒரு பாட்டுக்கு அதன் பொருளுணர்ச்சி மிக மிக முக்கியமானது. சாஹித்யத்தின் வித்து அதுதான். அதிலும் தியாகராஜர் போன்ற பரம பக்திமான்களின் சாஹித்யங்களுக்கு ஜீவனாக அமைந்த பக்தி அந்தச் சொற்களிலே அல்லவா நிற்கிறது. அதை ஒலியினின்று பிரித்து எடுத்துவிட்டு, பொருள் உணர்ச்சி வேண்டாம், இவற்றின் ஒலி இன்பத்தை மட்டும், அநுபவியுங்கள் என்று சொல்வது சரியில்லை என்று டி. கே. சி. சொன்னார்கள். இது காரணமாகவே

டி. கே. சி. மணிமொழி

பெண்கள் வேடிக்கை பண்ணுவார்கள். குழந்தைகளிடம் "உனக்கு ஏன் இரண்டு கண் இருக்கிறது? சொல்!" என்பார்கள். குழந்தையும் குஷாலாகச் சொல்லும்: "உன்னைத் தேட ஒரு கண்; அடுத்த கண் அப்பாவைத் தேட" என்று!



மறைந்தும் மறையாத மணிகள் - கல்கியும், டி. கே. சி.யும்

தமிழ் மக்களுக்கு, அவர்களுக்குப் புரிகிற தமிழ் மொழியில் பாட்டுக்களைப் பாடவேண்டும் என்று டி. கே. சி. கூறினார்கள். இந்தக் கருத்து அறிஞர்கள் பலரும் முன்னரே ஒப்புக்கொண்ட காரியம். நமது தேசிய கவி பாரதியார் இந்த விஷயத்தைப் பல ஆண்டுகளுக்கு முன்பே மிக அழுத்தமாக எழுதியிருக்கிறார். இதனால் பாரதியாருக்கோ, டி. கே. சி.க்கோ பிற பாஷையிலுள்ள மகான்களிடத்திலோ, பெரிய சாகித்ய கர்த்தர்களிடத்திலோ வெறுப்பு என்று சொல்வது தவறு. இதனால் இவர்களுக்கு சங்கீதம் தெரியாது என்று கூறுவது அதைவிடப் பெரிய தவறு.

தமிழிசை என்றால் இக்காலத்தில் தேவாரப் பிரபந்தங்களையும், திருப்புகழ்ப் பாடல்களையுமே உதாரணமாகக் காட்டுகிறார்கள். இது பிசகு என்பது டி. கே. சி.யின் கருத்து. தமிழ் நாட்டில் எத்தனையோ நூற்றாண்டுகளாக வழங்கி வந்த நாகஸ்வர இசையென்ன, வீணை இசை என்ன, நாட்டிய இசை யென்ன, இவற்றில் வழங்கிவந்த எத்தனையோ வேறுபாடோடு கூடிய பாட்டுக்கள், ஸ்வரக் கோவைகள், ராகங்கள், ஒலிக் கற்பனைகள்—இவை எல்லாமே தமிழ் நாட்டின் இசை. தமிழ் இசை என்றால் தமிழ் நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வந்துள்ள குரல் இசை, வாத்திய இசை இரண்டுமேதான்! தமிழ்ச் சொற்களில் அமைந்த பாட்டுக்களோடு, தமிழ் நாட்டு மக்களுடைய இசைக் கற்பனைகள் எல்லாம், தமிழர்களுடைய சங்கீத ஞானம் எல்லாம் சேர்ந்துதான் தமிழ் இசை என்பது டி. கே. சி. யின் கருத்து.

நாடகங்கள் என்றால் டி. கே. சி.க்கு உயிர்! நாடகத்தில் இருந்த அளவு ஆர்வம் தமிழர்களுக்கு வேறெந்தக் கலையிலும் இருந்ததில்லை என்று, டி. கே. சி. அடிக்கடி சொல்லுவார்கள். தமிழ்க் கவிதைகள் எல்லாம் நாடகத்துக்கும், நடனத்துக்கும் என்றே பிறந்தவை என்பது டி. கே. சி.யின் கொள்கை.

இன்று பரத நாட்டியம் இத்தனை கௌரவமும் செல்வாக்கும் பெற்றதற்கு டி. கே. சி. ஒரு முக்கிய காரணம். இதுபோலவே, இடைக் காலத்தில் மங்கிப் போய்விட்ட நாடகக் கலையைப் புத்துயிர் ஊட்டி வளர்க்க வேண்டும் என்று அடிக்கடி கூறுவார்கள். குற்றாலக் குறவஞ்சியை நாடகமாக்கி நடிக்கச் செய்வதில் அவர்கள் எடுத்துக் கொண்ட ஊக்கமும், ஒத்துழைப்பும் சரித்திரப் பிரசித்தி பெற்றவை.

டி. கே. சி.யை முனிவர் என்று குறிப்பிடும்போது ஏதோ குருட்டு பக்தியினால் இப்படி அழைப்பதாகப் பலரும் எண்ணக்கூடும். அப்படி இல்லை. அவர்களோடு பழகி அவர்களுடைய சீலத்தையும், சத்தியத்தையும், இதய விலாசத்தையும், நேசப் பான்மையையும் நன்கு உணர்ந்த ஒருவனுக்கு அவர்கள் முனிவராகவே விளங்குகிறார்கள் என்பதே உண்மை. எத்தனையோ பெரியார்களிடம் பழகுகிறோம். ஆனாலும் நமது சிறுமைகளை, நமது குற்றங்களைக் கண்டு புன்முறுவல் செய்துவிட்டு நமது நலங்களையே வளர்த்துப் பாதுகாக்கும் உத்தமர்கள் எத்தனை பேர்? மனிதனை மனிதன் மன்னிக்கும் சுபாவம் எத்தனை பேரிடம் உண்டு! பிறருடைய குறைகளைத் தெரிந்து கொண்டு மன்னித்து விடுவதோடு, தான் அவற்றைத் தெரிந்து கொண்டதாகவே காட்டிக் கொள்ளாமல், செயற்கை அறியாமையை வரவழைத்துக் கொண்டு "இவரை நாம் ஏமாற்றி விட்டோம்!" என்று நாம் மகிழக்கூடிய ஒரு மகிழ்ச்சியையும் நமக்கு வழங்கி, அந்த மகிழ்ச்சியைக் கண்டு தானும் மகிழ்கிற உத்தமர் எத்தனை பேர் உண்டு இந்த உலகில்! எண்ணிப் பார்த்தால் விளங்கும். டி. கே. சி.யோடு பழகியவர்களுக்கே இது தெரியும்.

காஷாயம் தரியாமல், கையிலே கமண்டலம் ஏந்தாமல், காடு மலைகளிலே தவங்கள் செய்யாமல், நம்மை யெல்லாம் போல் ஜிப்பாவும் வெள்ளை வேட்டியுமாக ஒரு முனிவர் திருக்குற்றாலத்திலே சென்ற ஆண்டுவரை வாழ்ந்தார். முத்தமிழையும் வளர்த்தார். காஷாயம் தரிக்காமல், அன்பையே கோலமாக அணிந்திருந்தார். கமண்டலம் ஏந்தாமல் கையிலே தமிழ்க் கவிதையை ஏந்தினார். காடு மலைகளிலே தவம் செய்யாமல், குற்றாலத்துப் பொதிகைமலையிலே வாழ்ந்து தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் இரவும் பகலும் அரிய சேவை செய்தார். ஜிப்பாவும் வெள்ளை வேட்டியுமாக, மலர்ந்த முகத்தோடு காட்சி தந்த அந்தத் தமிழ் முனிவரின் திருவுருவம் மறைந்து இன்று ஒரு முழு ஆண்டு ஓடி விட்டது!

**டி. கே. சி. மணிமொழி**

இங்கே (சென்னையில்) தினம் காலைதோறும் குழந்தைகளிடம் பரத நாட்டியத்தைக் கற்று வருகிறேன். ஆடுவதற்காக அல்ல! அதன் அற்புதமான தத்துவங்களையும், சக்திகளையும் அறிந்து கொள்ளுவதற்காகத்தான்! நம்முடைய நடனம்போல் உண்மைக்கு விளக்கம் கொடுக்கக் கூடிய நடனம் உலகத்திலேயே இல்லை.



# உழைப்புடன் ஒட்டிய ஒயில்.. 1954

# ப்ளிமத்



**ஒய்யாரம்**

லளிதமான அமைப்பு சீதியால் பகட்டான 1954 வண்டிகளில் புதிய ப்ளிமத் தனி சிறந்தது.

**உழைப்பு**

ப்ளிமத் வண்டியின் கீர்த்திபெற்ற உழைப்பு அதன் பாங்குடன் இணைந்தது. சக்தி வாய்ந்த இஞ்சினுடன் நேர்த்தியான அடித்தள அமைப்பு, உறுதியான சஸ்பென்ஷன் ஏற்பாடு.

**சிக்கனம்**

வலிமை பொருந்திய ஹைட்ராலிக் பிரேக்குகள், பாதுகாப்பு தரும் விளிம்பு கொண்ட சக்கரங்கள், ரஸ்தாவில் கண்ணோட்டச் சீரான வசதி, செலுத்துவதில் இலகுவம் - இவற்றால் இவ்வழகிய வண்டி பாதுகாப்பு, சௌகரியம், சிக்கனத்திற்கு ஈடற்றது.

உங்கள் வியாபாரியிடம் கிடைக்கிறது. இன்றே பாருங்கள்.

முன்னேற்றத்தோடு
தயாரிப்பவர்

**தி பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிட்.**

சில்லரை விலை: ரூ18,590/- எக்ஸ்-பாக்டரி, உள்ளூர் வரி வேறு

விற்பனையாளர்கள் :

டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்டு சன்ஸ் லிமிடெட், மதுரை
சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட், மவுண்ட் ரோடு, சென்னை


...ஆம், ஐயா, நீங்கள் அதை ப்ரஷ்ஷினால் பூசலாம், ஸ்ப்ரே செய்யலாம் அல்லது தோய்த்துப் பூசலாம்...
... அது சீக்கிரமாகவும் நன்றாகவும் உலர்ந்து விடும்...
... என்றும் அழியாத பிரகாசத்தை கொடுக்கிறது...


... ஆம், யந்திரங்கள் மீதும், ஆபீஸ் உபகரணங்கள் மீதும் ...
... நீங்கள் விரும்பினால், சுவரின் மேலும் ...
...நிச்சயமாக அநேகவிதங்களில் உபயோகிப்பதற்கும் ...


...அன்பரே, மிக்க மகிழ்ச்சியுடன் சொல்லும்...
...எனக்கு தெரியும், அதுதான், எல்லோரும் விரும்பும் ஸிந்தடிக் எனாமல்...
SPW 261
ஷாலிமார்
ஸிந்தடிக் எனாமல்




ஆற்றிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த பங்கஜத்தை, "ஏன் பங்கஜம், நீ இன்னும் ஊருக்குப் போகலையா!" என்று ஆச்சர்யத்தோடு கேட்டாள் அவள் சிநேகிதி கமலா. பங்கஜம் பதில் சொல்லாமலே மேலே நடந்து விட்டாள்! எத்தனை பேருக்குத் தான் அவள் பதில் சொல்ல முடியும் இதே கேள்விக்கு!

பங்கஜத்தின் கண்கள் கலங்கின. இடுப்பிலிருந்த தண்ணீர்க் குடம் கொதிப்பது போலிருந்தது.

"என்ன பயித்தியக்கார உலகம்! நான் ஊருக்கல்லவா போக வேண்டுமாம்! நான் பிறந்து வளர்ந்த ஊர் என் ஊர் இல்லையாம். இரண்டு வருஷத்துக்குள் மூன்று இடம் மாற்றலாகி விட்டது அவருக்கு. பேர்கூடத் தெரியாத அந்த 'ஊர்' எப்படி என் சொந்த ஊர் ஆகிவிட முடியும்!" என்று அவள் உள்ளம் பேசியது. ஆனால் இதயமோ ஓரே மௌனம் சாதித்தது. அந்தப் பராமுகத்தைத்தான் அவளால் கொஞ்சங்கூடத் தாங்க முடியவில்லை!

பங்கஜம் நல்ல பெண்தான். செல்வத்தில் பிறந்தவள். துக்கமோ துயரமோ அவளை அண்ட விடாதபடி பார்த்து விட்டனர் அவள் பெற்றோர்கள். ஆனால் இன்பத்தை மட்டுமல்லாமல் கணவனுடன் துன்பத்தையும் பகிர்ந்து கொள்ள வேண்டியவளல்லவா லக்ஷியப் பெண்! பங்கஜம் முன்னதைச் செய்தாள். ஆனால் பின்னதோ!... அவளுக்குத் தெரியவே தெரியாதே!

"குண நலத்தில் குறையுள்ளவளை யல்லவா பொன்னிலே பொதித்து அனுப்ப வேண்டும்! உனக்கு எதுக்கு பங்கஜம் ஏகப்பட்ட நகைகள்!" என்று சொல்லி விட்டான் ரகுராமன். அவனுடைய வருவாயிலே அவன் தன் ஆனந்த வாழ்வை நடத்த எண்ணினான். இந்த அனுபவம் பங்கஜத்துக்குப் புதுமையாக மட்டுமல்ல, பிடிக்காததாகவும் இருந்தது. பல இடங்களுக்கு மாற்றினார்கள். ரகுராமன் அதைப் பற்றிக் கிஞ்சித்தும் கவலைப்படவில்லை. பாலைவனத்துக்கு மாற்றினால்கூட பங்கஜத்தின் உதவியால் அதைப் பசுஞ்சோலையாக மாற்ற முடியும் என்று கனவு கண்டான் அவன். ஆம் கனவுதான்! ஏனென்றால் அந்தப் பசுஞ்சோலை தன் பிறந்தகத்துக்குப் போக வேண்டும் என்றது! ரகுராமன் ஒரு கணம் யோசித்தான். பிறகு மறு வண்டிக்கே அவளை அனுப்பி வைத்து விட்டான். அவன் உதடுகள் அவளிடம் ஒன்றும் குறைபட்டுக் கொள்ளவில்லை. ஆனால் உள்ளமோ!......

ரயில் இழுத்தது. பங்கஜத்துக்கு அவளுடன் ரகுராமன் முகமும் ஓடி வருவதைப் போலிருந்தது!

மறு கணம்......

"அன்பில்லாத ஜீவன்! ஊருக்குப் போகிறேன் என்றதும் வண்டியேற்றி விட்டு விட்டாரே! அவரைப் பிரியும் பொழுது என் மனம் என்ன பாடு பட்டது! இதெல்லாம் அவருக்கு எப்படித் தெரியும்! அவராவது என்னிடம் ஒரு வார்த்தை பேசக் கூடாதா! அப்பப்பா! அவருக்குத்தான் எவ்வளவு கல் மனசு......!"

இதயத்தின் உள்ளிருந்து ஒரு குரல் முணுமுணுத்தது:

"கல்லானாலும் கணவன். புல்லானாலும் புருஷன்! இதுதான் பாரதப் பண்பு."

மகளிர் குலம் அன்பற்ற ஆண் வர்க்கத்துக்கு எழுதிக் கொடுத்த அடிமைப் பட்டயத்தின் முதல் வரி இது என்று நினைத்தாள் பங்கஜம்.

ஓடும் ரயிலில் உள்ளிருந்து கொண்டு ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். தூரத்தில் நெடிய மலைத் தொடர் படுத்திருந்தது.

"கல்லானாலும் கணவன்! அப்படியே இருக்கட்டும். இதோ இந்த மலையும் கருங்கல் பாறைதான். ஆனால் அதிலிருந்தும் கசிந்து வழிகிறதே சிற்றருவி, அது என்ன! அந்த ஈர நெஞ்சமாவது வேண்டாமா!

"புல்லானாலும் புருஷன்! இவர்கள் எல்லாம் அதிகாலையில் புல்லின் முகத்தில் விழித்திருக்க மாட்டார்கள் போலிருக்கிறது. பின் தூங்கி முன் எழச் சொன்ன பெரிய மனிதர்கள் அல்லவா! அப்படிப் பார்த்திருந்தால் புல்லின் நுனியில் துளித்திருக்கும் பனி நீர்த் திவலை அவர்கள் கண்ணில் படாமலா இருக்கும்!"

* * *

பங்கஜம் பிறந்தகத்துக்கு வந்து ஆறு மாதங்கள் பறந்து விட்டன. பிறந்த மண் வர வரப் புழுதியாகிக் கொண்டே வந்தது. ரகுராமன் எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறானோ என்று எண்ணிச் சஞ்சலப்பட்டாள் பங்கஜம். அவனைத் தனியே தள்ளிவிட்டு வந்தது எவ்வளவு பெரிய தப்பு—பாவம் என்று அவளுக்கு இப்போது பட்டது.

மறுநாள் காலையில் துயில் எழுந்ததும் பங்கஜம் அப்படியே நின்று விட்டாள். விடிந்ததும் விடி

டி. கே. சி. மணிமொழி

ஒரு உண்மையான அனுபவத்தைக் கண்டு பாவ உருவத்தோடு வெளியிடுவது கவி. அது உண்மையான உணர்ச்சி. வெறும் இலக்கணத் துறை அல்ல.

யாததுமாக அவன் முன்னால் நின்று கொண்டிருந்தான் ரகுராமன். 'அத்தான்' என்று அவன் பாதங்களில் விழுந்தாள் பங்கஜம். அவள் கண்ணீர் அவன் பாதங்களில் வழிந்தது. மறுநாளே அவளை அழைத்துக் கொண்டு வண்டியேறினான் ரகுராமன். நெடுநாளைக்குப் பிறகு மகள் முகத்திலே மகிழ்ச்சியைக் கண்டாள் அவள் தாயார்.

"அத்தான், ஏன் இப்படித் திடுதிப்பென்று வந்தீர்கள்!" என்றாள் பங்கஜம்.

ரகுராமன் உள்ளதை அப்படியே சொன்னான்:

"பங்கஜம் நேற்று சாயங்காலம் குளக்கரைக்குப் போயிருந்தேன். அப்போது அங்கே ஒரு தாமரைப் பூவைப் பார்த்தேன். ஆனால் அது தண்ணீரில் மலர்ந்திருக்கவில்லை. தரையில் கசங்கிப் போய்க் கிடந்தது. சட்டென்று உன்னுடைய ஞாபகம் எனக்கு வந்தது. என் பங்கஜமும் இப்படித் தானே வாடிக் கொண்டிருப்பாள் என்று நினைத்தேன். அப்போது ஒரு குரல் கேட்டது. சுற்று முற்றும் பார்த்தேன். தரையில் கிடந்த தாமரை தான் என்னோடு பேசியது.

"என் தாய் பூமி. தலைவன் சூரியன். நான் இருக்க வேண்டிய இடம் குளம். யாரோ ஒருவன் என்னைப் பறித்து எறிந்து விட்டான். தாயின் அரவணைப்பில் தலை நிமிர்ந்த நான் தண்ணீரில் ஆதரவற்று மிதந்தேன். என் அழகு வர வரச் சிதைந்தது. பிறகு யாரோ என் நிலைக்கு இரக்கப்பட்டுக் கரையில் தூக்கிப் போட்டார்கள். அங்கே என் காதலன் ஆதவனைக் காணத் துடிதுடித்தேன். ஆனால் என்ன பயங்கரம்! நீரிலே இருக்கும்பொழுது குளுமையாக இருந்த அவன் பார்வை இப்போது என்னை நெருப்பாகத் தகித்தது. அவன் வெப்பம் தாளாமல் கசங்கினேன்."

கதையை முடித்த ரகுராமன் பங்கஜத்தை ஏறிட்டுப் பார்த்தான். அவள் கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சிந்திக் கொண்டிருந்தன.

# பிள்ளை முன் இட்டது

பி. எஸ். மணி.

"குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே" என்று பெரியவர்கள் சொல்கிறார்கள். ரஸிகமணி டி. கே. சி. அவர்களுக்குக் குழந்தைகளிடத்தில் அளவற்ற அன்பு. சிறு குழந்தைகளைக் கட்டாயப்படுத்திக் காரியம் செய்யச் சொல்வதைப் பார்த்து விட்டால் அவர்களுக்குப் பிரமாதக் கோபம் வந்து விடும். 'சின்னஞ் சிறுவர்களை அவர்கள் இஷ்டப்படியே விட்டுவிட வேண்டும். அவர்கள் தாமாகவே விஷயத்தை வெகு எளிதில் எல்லோரும் கண்டு பிரமிக்கும்படியாகத் தெரிந்து கொண்டு விடுவார்கள்' என்று அடிக்கடி சொல்வார்கள்.

டி. கே. சி. அவர்கள் தம் பேரக் குழந்தை நடராஜனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதில்லை. அவன் தானாகவே வீட்டில் கற்றுத் தெரிந்து கொள்வான் என்று கூறுவார்கள். 'குழந்தைகள் என்ன மாடுகளா! அவர்களைப் பவுண்டில் அடைப்பது போல் பள்ளிக்கூடத்தில் ஐந்து மணி நேரம் அடைத்துப் போடுவதற்கு!' என்பார்கள்.

ரஸிகமணி அவர்கள் குழந்தைகள் விஷயத்தில் கொண்டிருந்த முடிவு முற்றிலும் சரி என்பதைக் கண் கூடாகக் காணும் பாக்கியம் கிடைத்தது.

திருநெல்வேலி—வண்ணார் பேட்டையில் ரஸிகமணி இல்லத்தில் ஒரு அழகிய வட்டத் தொட்டி உண்டு. அங்கு வாரந்தோறும் ஞாயிற்றுக் கிழமை மாலையில் கம்பராமாயணப் பிரசங்கம் ரஸிகமணி அவர்கள் நிகழ்த்துவார்கள். அதை அநுபவிக்கத் திருநெல்வேலியிலுள்ள இலக்கிய அன்பர்கள் பலரும் வருவது வழக்கம்.

அப்பொழுது கம்ப ராமாயணத்தில் ரஸமான கட்டம் நடந்து கொண்டிருந்தது. விசுவாமித்திரர் ராமலக்ஷ்மணர்களுடன் சுயம்வர மண்டபத்துக்கு வருகிறார். அந்த வாலிப ராஜகுமாரர்களின் திவ்ய தேஜஸைக் கண்டு மண்டபத்திலுள்ள அனைவரும் பிரமித்துப் போய் நிற்கிறார்கள். ஜனகமகாராஜன் வில்லைக் கொண்டு வந்து ராஜகுமாரர்களின் முன் வைக்கிறான். அந்தப் பச்சிளம் பாலகர்களின் முன் அந்த வில்லை வைத்ததைக் கண்டு சுயம்வர மண்டபத்திலுள்ளவர்களுக்கெல்லாம் ஆத்திரம் ஏற்பட்டது. அந்த சபையில் கூடியிருந்தவர்களின் உள்ளத் துடிப்பைத் தமக்கே உரிய பாணியில் ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் எடுத்துரைத்தார்கள். பிறகு கம்பரது பாடலைக் கூறினார்கள்:

"வள்ளல் மணத்தை
மகிழ்ந்தனன் என்றால்
கொள்ளென முன்பு
கொடுப்பதை அல்லால்
வெள்ளை மனத்தவன்
வில்லை எடுத்துஇப்
பிள்ளைமுன் இட்டது
பேதைமை என்பார்!"

அப்படியே கம்பரது கவியில் கூடியிருந்தவர்களெல்லாரும் மெய்யுருகிப் போனார்கள்.

மறுநாள் காலை. ரஸிகமணியைப் பார்க்கத் திவான்பகதூர் பி. ஆவுடையப்பப் பிள்ளையவர்கள் வந்திருந்தார்கள். அப்பொழுது சர்க்கிள் முத்தையா பிள்ளை அவர்கள், "நேற்று நீங்கள் வராமல் போய் விட்டீர்களே! மிதிலைக் காட்சி அற்புதமாக இருந்தது!" என்றார்கள்.

அந்தச் சமயத்தில், "வள்ளல் மணத்தை...இப் பிள்ளை முன் இட்டது பேதைமை என்பார்!" என்று உரக்கப் பாடும் குரல் கேட்டது.

எல்லோரும் வியப்புடன் குரல் வந்த திசையை நோக்கினார்கள். அந்தப் பாடலை அப்படியே கூறிய டி. கே. சி. அவர்களின் பேரன் நடராஜன் வெட்கத்தினால் அங்கிருந்து ஓடி விட்டான்.

யாரும் சொல்லிக் கொடுக்காமலே, தானாகவே நடராஜன் உள்ளத்திலிருந்து வந்த அந்தப் பாடலைக் கேட்டு அனைவரும் வியப்புக் கடலில் ஆழ்ந்தனர். குழந்தை தானாகவே எந்தக் காரியத்தையும் எளிதில் சாதித்து விடும் என்பதற்கு அன்றைய நிகழ்ச்சி நல்ல உதாரணமாக அமைந்திருந்தது.

## இலங்கை, திரிகோணமலை பிரபல திருமணம்



திருநெல்வேலி - கருங்குளம், திரு. ஜெகராயர் வில்லவராயர் அவர்களின் சிரேஷ்ட புத்திரரும், திருநெல்வேலி ஜங்ஷன் ஏ. எஸ். எம் ஜெகநாதன் தேசைய கம்பெனியின் மானேஜருமான திருவளர் செல்வன் ஜே. லூர்து வில்லவராய னுக்கும். இலங்கை திரிகோணமலை பிரபல வியா பாரியுமான திருவாளர் ஏ. எஸ். எம். ஜெகநாதன் பர்னாந்து அவர்களின் சிரேஷ்ட புத்திரி திருவளர் செல்வி புஷ்பராணி பர்னாந்துவுக்கும், திரிகோணமலை பரிசுத்த தேவமாதாவின் மேற்றிராசன ஆலயத்தில் 2 - 2 - 55ல் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

விவாகத்திற்கு உறவினர்களிடமிருந்தும் அன்பர்களிடமிருந்தும் ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் சன்மானங்களும் வந்து குவிந்தன.

வாழ்க பல்லாண்டு மணமக்கள்

# 2,20,000 டன் ஏசிசி சிமெண்ட்

# துங்கபத்ரா பிராஜக்டில்

# உபயோகிக்கப் பட்டுள்ளது.



காங்கிரிட் அணைகள் நம் நாட்டின் பாலை நிலங்களை செழிக்கச் செய்து எல்லோருக்கும் உணவு கிடைக்க உதவி வருகின்றன.

நீலகிரி பிராண்ட்






**தி சிமெண்ட் மார்க்கடிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்:**

9, மௌண்ட் ரோடு, மதராஸ். ● 4/12, ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர். ● ஷுகர் கம்பெனி பில்டிங், பங்களூர்.

# எங்கள் தந்தை

## நீலாவதி ராமசுப்பிரமணியம்

"என்ன! வெகு தூரமிருந்து தங்களைத் தேடி வந்திருக்கிறேன். தாங்கள் வெளியில் புறப்படத் தயாராயிருக்கிறீர்களே! அந்த வேலையை நிறுத்துங்கள். இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம்" என்றார் என்னைத் தேடி வந்தவர்.

நான்—அப்படியா! யார் வந்து மறித்தாலும் அந்த வேலையை நிறுத்த முடியாது. தாங்களும் என்னோடு வரலாம்.

வந்தவர்—எதற்கென்று சொன்னால் வருகிறேன். சென்னையில் எத்தனையோ நடைபெறுகின்றன. விளங்காத எதற்காவது கூட்டிச் சென்று வேடிக்கை பார்க்கப் போகிறீர்களா, என்ன!

நான்—உங்களை நன்கு தெரிந்த நான் அப்படியெல்லாம் செய்வேனா! ராமாயணத்துக்குப் போகிறேன். வரலாமல்லவா!

வந்தவர்—ரொம்பப் படித்தவர்கள் பாடினால் ஒன்றும் புரியாதே!

நான்—நீங்கள் பேசாமல் வாருங்கள் என்னோடு.

சில வருஷங்களுக்கு முன் கோகலே மன்றத்தில் ரசிகமணி டி. கே. சி. அவர்களால் கம்பராமாயணம் நடைபெற்று வந்தது. அப்போதுதான் அச் சகோதரி வந்தார். மேலே கண்ட பேச்சு நடந்தது. ரசிகமணி அடிக்கடி சொல்வார்கள். கம்பனைப் பெண்களிடம் தாய்மார்களிடம் ஒப்படைத்து விட்டேன். இனி எனக்குக் கவலை இல்லை, அவர்கள் பத்திரமாகப் பாதுகாப்பார்கள் என்று. என்னுடைய அநுபவத்தில் அது சரியாகவே படுகிறது.

அன்று கோகலேமன்றத்துக்கு என்னுடன்வந்த சகோதரி எழுத்து வாசனை அற்றவர். பெண்கள் நாங்கள் இருவர்தான். எழுதப் படிக்கத் தெரியாதவர்களையும், முன்பின் விஷயம் புரியாதவர்களையுங்கூடக் கம்பன் கவியை எப்படி அநுபவிக்கச் செய்கின்றார் என்பதை அன்று கண்டேன். ராமன் தாயாரிடம் சென்று தான் காட்டுக்குப் போக வேண்டிய செய்தியைச் சொல்கிறான். கேட்ட கோசலை துடிக்கிறாள். பாட்டுக்கு முன்னால் ஒரு அருமையான திரைப்படம். திரைப்படம் நம் கண் எதிரில் தீட்டியபடி இருக்கிறது. வருகிறது பாட்டு:

> "கையைக் கையில் நெரிக்கும்தன் காதலன்
> வைகும் ஆலிலை அன்னவயிற்றினை
> பெய்வளைத் தளிரால்ப் பிசையும்."

அந்த சந்தமும், சோக பாவமும் கோசலையின் அடிவயிற்றை மட்டுமா பிசைந்தன! என்னோடு வந்த சகோதரிக்கு ஒரே ஆச்சரியம்!

"ராமாயணப் பாட்டா இது! இப்படி யாரும் சொன்னதில்லையே! பெற்றவர்களின் வேதனையைப் படம் பிடித்துக் காட்டி நம்மை உருக வைத்து விட்டாரே! அற்புதம். இனி இதை மறக்கவே முடியாது" என்றார்.

இலக்கியத் துறையில் சாதாரணப் படிப்புள்ள பெண்கள் பங்கு கொள்வது குறைவுதான். அதை டி. கே. சி. அவர்கள் மிக எளிதாகப் போக்கி விட்டார்கள்.

இன்று 'கல்கி'யில் நம் அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள் எப்படி ராமாயண காவியத்தைப் பாலர்களும் புரிந்து கொள்ளும் விதம் பணியாற்றி வருகின்றார்களோ, அப்படியே அன்று 'கல்கி'யில் கம்பர் தரும் காட்சி கற்றார்க்கும் கல்லாதார்க்கும் ஒரு கலங்கரை விளக்காக அமைந்தது. கம்பனையும், தமிழ்க் காவியங்களையும், அநுபவிக்கும் ஆர்வத்தை எழுப்பியது.

பெண்கள் யாராவது விஷயம் புரியாமல் ரசிகமணி அவர்களிடம் "நாங்கள் ரொம்பப் படித்தவர்கள் அல்ல" என்று சொல்லிவிட்டால் போதும்.

"வேண்டாமே! நான்தான் அதிகப் படிப்பை வெறுக்கிறேனே! உங்கள் அடுப்பங்கரைப் பாஷையும், இதய உணர்ச்சியும் எனக்குப் போதும், கம்பனையும்—நம் தமிழ்க் காவியங்களையும் அநுபவிக்க. படித்தவர்கள் உங்களைப்போல் ஒரு நாளும் அநுபவிக்க முடியாது. உங்கள் நித்திய வாழ்க்கையில்தான் இலக்கியம் பின்னிக் கிடக்கிறது. நீங்கள் வேறு, இலக்கியம் வேறு அல்ல. உங்கள் உள்ளத்து உணர்ச்சிகளைத்தானே, கம்பன் தன் காவியத்தில் அற்புதமாகத் தீட்டி, அழியாத பொக்கிஷமாக்கி விட்டான்" என்று ஆர்வத்தோடு கூறுவார்கள்.

இத்தனையும் பெண்களைப் புகழ வேண்டுமென்றோ, போற்ற வேண்டுமென்றோ அல்ல. உண்மையில், பெண்மையின் மன அலைகளை ஆழ்ந்து அறிந்து சொல்லும் சொல் அது.

தமக்குப் பிடிக்காத விஷயத்தை ஒருவர் சொன்னால், உடனே அதை வெட்டிப் பேசி விடுவார் ரசிகமணி அவர்கள்.

ஒரு சமயம் ரசிகமணி அவர்கள் கவிகளை எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார். கூட்டத்தில் ஒருவர் எழுந்து போக முயற்சித்து யோசிப்பதை எப்படியோ அறிந்து கொண்டு, "நீங்கள் போக வேண்டிய காரியம் இருந்தால் போய் வாருங்கள்" என்று விடை கொடுத்து அனுப்பினார். எங்களைப் பார்த்து, "பாருங்கள் அவர் கஷ்டத்தை. கவியை இப்படி அநுபவிக்க முடியுமா! ஆண்டவனை அடைய அடியார்கள் எப்படி ஆண்டவனோடு ஒன்றி விடுகிறார்களோ, அப்படித்தான் கவியை அநுபவிப்பதிலும். ஆற்றிலே ஒருகால் சேற்றிலே ஒருகால் என்றிருந்தால் அது முடியாது. அவருக்காக நாம் சீக்கிரம் முடிப்பானேன்! அதுதான் போகச் சொன்னேன். நீங்கள் யாரும் போக வேண்டியதில்லையே!" என்றார்கள். எல்லோரும் 'கொல்' என்று சிரித்து விட்டோம். வேலையிருந்தாலும் போகப் பைத்தியமா என்ன!

கடவுளையும் – கவியையும் ஒன்ருக மதித்தார். ஆம்! பாடுகின்ற பக்தர்கள் தேடுகின்ற செல்வமல்லவா இறைவன்.

ஆற்றுலத்தில் நடைபெற்ற ராமாயண அரங்கேற்று விழாவுக்குச் சென்றிருந்தோம். ராஜ வைபவம் என்ருல் மிகையல்ல. அப்படி நடந்தது. கோலாகலத்தோடு அரசியல் ஞானி ராஜாஜி தலைமையில் தமிழ்ப் பெருமகனை வாழ்த்தி வணங்குகிறோம் என்ற பெருமை ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிரம்பி யிருந்தது.

விழா முடிந்து வீட்டுக்கு வந்தோம். அதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தோம். பேச்சுக்கிடையே ஒருவர், "இவ்விழா வேறு இடத்தில் நகரத்தின் மத்தியில் நடந்திருந்தால் இன்னும் நன்ருயிருக்கும். ரொம்பப் பேர் வருவார்கள்" என்ருர்.

அதைக் கேட்டதும் ரசிகமணி அவர்கள், "இல்லை. ஒருநாளும் இல்லை. இந்த விழா இங்கு நடந்ததுதான் இவ்வளவு சிறப்பு. வேறு நகர வாசத்தில் நடந்திருந்தால் வர மாட்டார்கள். தப்பித் தவறி வந்தாலும், கேட்க வர மாட்டார்கள். வேடிக்கை பார்க்க வருவார்கள். ஆனல் தாய்மார்கள் எங்கிருந்தாலும் வந்து விடுவார்கள். அதிலும் நாம் பக்காவாய்க் கொட்டகை போட்டுப் பலமாக உட்கார அல்லவா வைத்து விட்டோம். எழுந்து போனலும் இடமெங்கே!" என்ருர்கள்.

இப்படி எத்தனை! எத்தனை!!

'கவிதைகளை மக்கள் அநுபவிக்க வேண்டும். மனப்பூர்வமாக அநுபவிக்க வேண்டும்' என்ற அவர் ஆர்வத்துக்கு எல்லையே யில்லை. அரசியல் தந்தையான காந்தி அடிகள் எப்படிப்பெண்களிடம் பெருநம்பிக்கை வைத்தாரோ, அப்படியே, இலக்கியத் துறையில் ரசிகமணி அவர்கள் பெண்களிடம் பெருநம்பிக்கை கொண்டார். அது வீண் போகவில்லை. பல பெண்கள் அவர் காட்டிய பாதையில் இறங்கி இலக்கிய உணர்வு பெற்று விட்டார்கள். இலக்கிய உணர்வும், இறை உணர்வும் கலந்த நல் வாழ்வை நாட்டில் நிலவச் செய்வர் பெண்கள், நீடுபுகழ் சிதம்பரநாதனை நினைவிலே வைத்து.

அரங்கேற்று விழா முடிவிலே, மக்களின் உணர்ச்சி வெள்ளத்தைக் கண்டு தம் சக்திக்கு மீறிய சொற்பொழிவைக் கொட்டினர். டி. கே. சி. அவர்கள். 'ஏன் முடிக்கிருர்!' என்று ஏங்கிய உள்ளம், அன்று அவர் உடல் சோர்வைக் கண்டு, 'ஏன் இன்னும் பேசுகிருர்' என்று துடித்தது.

விழா முடிந்ததும் மூன்று நாள் தங்கினேம், எப்படிப் பிரிவது என ஏங்கி. புறப்படும் நாள் வந்தது. விடை பெற எண்ணி அவரிடம் செல்லும் போதே கால்கள் பின்னுக்கிழுத்தன. கார் வெளியில் கரைகிறது. கண்ணில் நீர் நிறைகிறது. ஒருவாறு சமாளித்து உள்ளே சென்று அவர் பாதங்களில் விழுந்து வணங்கி விடைபெற நிமிர்ந்தேன். வார்த்தைகள் வர மறுத்தன. கம்மிய குரலோடு கரங்குவித்துப் பின் வழியாக வந்தேன். முன்புறம் வந்து மீண்டும் ஒருமுறை அம்முகத்தைப் பார்க்கலாமே என்றுதான் முதலிலே முன் பக்கம் வரவில்லை. ஆயிற்று. காரிலிருந்தும் அக் கருணை முகத்தைக் காண விழைந்தது மனம். 'இனி எத்தனை நாள் செல்லுமோ, இனிய கவிகளைக் கேட்டு மகிழ!' என்ற ஏக்கத்தில் மிதக்கையில் கார் நகர்ந்தது. கண்ணீரை மறைத்தேன்.

வழியெல்லாம் அன்பர்களோடு அரங்கேற்று வைபவத்தைப் பற்றியே பேசி வந்தோம். திருச்சி வந்து நண்பர்கள் விடைபெறும் போது தான் இவ்வளவு தூரம் வந்து விட்டோமா என்று கேட்டுக் கொண்டோம்.

எவ்வளவு நாட்கள் ஆகுமோ என்று ஏங்கித் திரும்பிய எங்களுக்கு "அது இந்தச் சென்மத்தில் இல்லை" என்று ஆகப் போவதை உணர முடியவேயில்லை!

**டி. கே. சி. மணிமொழி**

தாகூரும் காளிதாஸரும் இதய வளர்ச்சியால் ஒரு இனத்தைச் சேர்ந்தவர்கள். இருவருக்கும் கடல், மலை, வானம், மரம், சூரியன், சந்திரன், குழந்தை, பெண், வீரன், கொம்பன் (ஆனை), மான் எல்லாம் மனசைக் கவர்ந்து களிப்பை உண்டு பண்ணுகிற பொருள்கள்.

அடிக்கடி நாம் எதையாவது மேகத்தையோ, தண்ணீர் கட கட என்று ஓடுவதையோ பார்த்து சந்தோஷப்பட்டு விடுகிறோம். சில நிமிஷம் பார்த்துக் கொண்டே நின்று விடுகிறோம். அப்போது ஒரு பயம் – யாராவது அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் நம்மைப் பார்த்து விடுவார்களோ என்கிற பயந்தான்! யாராவது கிட்ட வந்து 'என்னத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டு விட்டால் "ஒன்றும் இல்லை, சும்மாதான் நின்று கொண்டிருந்தேன்" என்று அசடு வழியச் சொல்லித் தீர்க்கிறது. இந்த லஜ்ஜையெல்லாம் ஒருவாறு அடக்கிக் கொண்டு வீட்டுக்குப் போகிறோம். தாகூரை ஷெல்பிலிருந்து எடுத்து வாசிக்கிறோம். அப்போது தெரிகிறது, அவர் நம்மைவிட ஏமாளி என்று. நம்மைவிட எத்தனையோ மடங்கு மேகத்தையும் தண்ணீர் ஓட்டத்தையும் பார்த்து அனுபவித்து விட்டதாகத் தெரிகிறது. பைத்தியத்திலும் நமக்கு ஒரு அண்ணா ஏற்பட்டு விட்டார் என்று தெரிய வருகிறது. எப்படியும் அது நமக்கு ஒரு பக்க பலந்தானே!

தாகூரை அனுபவிக்காதவர்கள், 'அவர் விளங்காததை – விஷயம் அல்லாததை எழுதிக் கொட்டுகிருர்' என்று கேவலமாகப் பேசுகிருர்கள். ஆனல் காளிதாஸனைப் பற்றிப் பேசும் போது மாத்திரம் "அடாடா! என்ன கவித்துவம்!" என்றெல்லாம் சொல்லுவார்கள். அப்படிச் சொல்லுவதெல்லாம் கிளிப்பிள்ளை பாடந்தான். "அவாள் சொன்னர்கள்; இவாள் சொன்னர்கள்" என்ற கணக்குத்தான் கடைசியில் வந்து சேரும்!

விஷயத்தை அனுபவிக்கிறது பொதுவாகப் பலருக்கும் முடியும். ஆனல் அதன் பாவ உருவத்தைக் கண்டனுபவிப்பது வெகு சிலருக்கே முடிகிற காரியம்.

# உங்களுக்குத் தேவை




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட்.

## நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம் : பாண்டியன் பில்டிங் : மதுரை

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்,
1 பெங்களூர், திருவனந்தபுரம், கோயமுத்தூர், கொச்சி

# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம் :  1907)

தலைமை ஆபீஸ் : "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாயிலும் புது டில்லியிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

**மூலதனம்**

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,50,000 |
| டெபாஸிட்டுகள் (31-12-54-ல்) | ... | ரூ. | 24·85 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி

கல்கியின்

# அமர தாரா



அத்தியாயம் 44

## "மனத்தை உறுத்திற்று!"

ஆனந்தி

அவர்கள் வீட்டில் அர்த்தமில்லாமல் பேசுவதையே ஒரு கலையாக நினைத்துக் கொண்டிருந்தார்கள். எதையெடுத்தாலும் அதைப்பற்றி அரை மணி தர்க்கம் செய்வார்கள். அதிலும், ரமேஷும் சுலோசனாவும் சேர்ந்து, கோமளவல்லி அம்மாளுடன் பேச ஆரம்பித்து விட்டால், ஓயவே ஓயாது. சில சமயம் வக்கீலும் இவர்கள் கட்சியில் சேர்ந்து கொண்டு கோமளவல்லி அம்மாளைப் பரிகசிப்பார். அவருக்குச் சினம் பொங்கும். அன்று பத்மநாபன் உற்சாகமாக இருந்ததால் கோமளவல்லியம்மாளைப் பரிகசித்தார்.

"என்ன இருந்தாலும் கோமளா, இந்த வீட்டிலே மெஜாரிட்டி என் கட்சிதான். அதற்குத்தான் நீ இப்போ உன் கட்சியைப் பலப்படுத்துவதில் முனைந்திருக்கே. இப்போது பார்! நீ மந்திரமூர்த்திப் பண்ணையாரையும், இந்துமதியையும் உன் கட்சியிலே சேர்த்துக்கொண்டிருக்கிறாய். ஆனாலும், உன் கட்சி மைனாரிட்டியாகத்தான் இருக்கிறது."

"எனக்கு மெஜாரிட்டியிலும் அக்கறை இல்லை. மைனாரிட்டியிலும் அக்கறையில்லை. என்னத்தையாவது சொல்லிக்கொண்டிருக்காதேங்கோ. பண்ணையார் ஏதோ சொல்ல வந்தார். அதைக் கேட்பதை விட்டு என்னவெல்லாமோ பேசுகிறீர்களே?"

"'சைலன்ஸ் ப்ளீஸ்.' பண்ணையார் சொல்வதைக் கேட்க எல்லாரும் தயார்" என்று அறிவித்தார் ரமேஷ்.

என் தந்தை "ஒன்றுமில்லை..." என்று ஏதோ கூற ஆரம்பித்தார்.

"ஒன்றுமில்லாத விஷயத்தைப் பண்ணையார் சொல்ல வந்தார். அதை அம்மா கேட்கச் சொல்கிறாள்" என்று சொல்லி விட்டு ரமேஷ் கலகலவென்று சிரித்தார். ஷீலா, வக்கீல், நான் எல்லோரும் சிரித்தோம்.

கோமளவல்லியம்மாள் எல்லோரையும் கடிந்து கொண்டார். "எந்த வேளையில் தான் நீங்கள் பிறந்தீர்களோ? பெரியவர்களிடம் மட்டு மரியாதையில்லாமல் பேசுவதுதான் உங்களுடைய படிப்பின் லக்ஷணமாக்கும்?" என்றார்.

"இந்துமதி கூடத்தான் சிரித்தாள், அம்மா. அதற்கு என்ன சொல்கிறாய்?" என்றாள் ஷீலா.

"சரி, நிறுத்து. அவர் இன்னும் தான் சொல்ல வந்ததை ஆரம்பிக்கவே இல்லை."

"அதற்கு நாங்கள் என்ன செய்வது? அவர்தான் ஒன்றுமில்லை என்றாரே!" என்றார் ரமேஷ்.

கடைசியில் என் தந்தை விஷயத்தைக் கூறினார்.

"நீங்களெல்லாரும் இவ்வளவு தூரம் வந்துவிட்டு, இந்தப் பக்கத்தில் தலைசிறந்த ஊரான




குங்குமத் துறையைப் பார்க்காமல் போகக் கூடாது. நீங்கள் ஊருக்குப் போகும் வழியில் எங்கள் ஊருக்கு வந்து, இரண்டு நாள் இருந்து விட்டுப் போக வேண்டுமென்பது என் ஆசை. இப்போது விட்டால் பின்னால் எப்போது சந்தர்ப்பம் ஏற்படுமோ ?" என்றார் என் தந்தை.

எனக்கும் ரொம்ப சந்தோஷமாக இருந்தது. "ஆமாம் ! நீங்கள் எங்கள் வீட்டுக்கு வரவேண்டும்" என்றேன்.

"கண்டிப்பாய்ப் போக வேண்டியது தான்" என்றாள் ஷீலா.

"இதையா ஒன்றுமில்லை என்று சொன்னீர்கள் ? கட்டாயம் வருகிறோம்" என்றார் ரமேஷ்.

கோமளவல்லி அம்மாளும், "ஆமாம். போய் ஒருநாள் இருந்து விட்டுத்தான் போவோமே ?" என்றார்.

மீராவும், "இந்துமதி அக்கா வீட்டுக்குப் போகணும்" என்றாள்.

"சரி ! குங்குமத்துறைக்குப் போ
விருப்பமுள்ளவர்கள் கையைத் தூ
குங்கள்" என்றார் ரமேஷ்.

பத்மநாபனைத் தவிர அனைவரு
கையைத் தூக்கினோம். கோமளவல்
அம்மாள் கூட மிகவும் உற்சாகமா
கையைத் தூக்கினார்.

"எனக்கு அவசியமான காரியம் இரு
கிறதே, என்ன செய்வது ? சென்னைக்
உடனே போயாக வேண்டுமே?" என்
வக்கீல் பத்மநாபன்.

"ஆமாம் ! தலை போகிற அவசரமா
கும் ! உங்களுக்கு அவசரமில்லாத நே
எது ? ஒருநாள் குங்குமக் துறைய

இருந்து விட்டுப் போனுல் குடி முழுகி விடாது'' என்ருர் மாமி.

''அப்படி உங்களுக்கு அவசரமாக இருந்தால் நீங்கள் ரயிலில் போய் விடுங்கள் நாங்கள் குங்குமத்துறைக்குப் போய் விட்டு வருகிருேம்'' என்ருர் ரமேஷ்.

''நீங்களெல்லோரும் இப்போது மெஜாரிட்டியாகி விட்டீர்களே? சரி! நானும் உங்களோடு சேர்ந்து கொள்கிறேன். குங்குமத்துறைக்குப் போய் விட்டுச் சென்னைக்குப் போவோம்'' என்ருர்.

எனக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. லீலாவை அழைத்துக் கொண்டு போய் எங்கள் ஊரில் உள்ள அழகிய இடங்களையெல்லாம் காட்டுவதற்குத் துடித்தேன். ஓரே உற்சாகமாக மறுநாள் காலை புறப்பட்டுக் குங்குமத் துறைக்குப் பிரயாணமானேம். என் தந்தை முதல் நாள் இரவே இவர்கள் தங்குவதற்கு வசதிகள் செய்வதற்காகப் புறப்பட்டுச் சென்று விட்டார். ஆகவே நான் வக்கீல் குடும்பத்தாருடன் காரில் புறப்பட்டுச் சென்றேன். ரமேஷ் தான் காரை ஓட்டிஞர். வெகு சீக்கிரத்தில் குங்குமத் துறைக்கு வந்து சேர்ந்து விட்டோம். சுமார் மூன்று மணி நேரத்தில் போய்ச் சேர்ந்து விட்டோம். அது எனக்கு ரொம்ப ஆச்சரியமாக இருந்தது. மாட்டு வண்டியிலேயே அதிகமாய்ப் பிரயாணம் செய்து வழக்கமாகியிருந்த எனக்கு ரயில் பிரயாணமே மிகவும் உற்சாகமாக இருக்கும். அழகிய காரில் வேகமாகப் பிரயாணம் செய்தது எனக்கு முதலில் பயமாக இருந்த போதிலும் ரொம்ப உற்சாகம் அளித்தது.

ரமேஷ் மாத்திரம் பாதை நன்ருக இல்லை என்று குறை சொல்லிக் கொண்டு வந்தார்.



"ரோடு மாத்திரம் நன்றாக இருந்தா எவ்வளவு வேகமாகப் போகலாம் தெ யுமா? மேடும் பள்ளமுமாய் என்ன ரோடு?" என்றார்.

ஷீலா என்னிடம், "இந்துமதி! சென்னை ரோடுகளைப் பார்த்தால் பி மித்துப் போய் விடுவாய். அப்படியே வழவழ வென்று 'வெல்வெட்' மாதிரி இருக்கும். கார் ஓடுவதே தெரியாது பறப்பதுபோல் இருக்கும்" என்றாள்.

குங்குமத்துறையை நெருங்கும்போதே அந்த ஊரின் அழகு தெரிய ஆரம்பித்த விட்டது. வழியெல்லாம் விதவிதமான மரங்களைக் காணலாம். உச்சி வெய்ய லில் சென்றால்கூட களைப்பாகவே இருக் காது. எத்தனையோ தடவைகள் நான் குங்குமத்துறையைப் பார்த்து அனுப வித்திருந்த போதிலும், அன்று வக்கீல் குடும்பத்தாருடன் காரில் சாலைகளின் வழியே சென்று கொண்டிருந்தபோது புதிதாகப் பார்ப்பதுபோலவே இருந்தது

நாங்கள் போய்க் கொண்டிருந்தபோது மேற்கு திக்கில் வானளாவிய மலைச் சிகரங்கள் கம்பீரமாக நின்று கொண் டிருந்தன. மலைச்சாரல் உயரத்தில் நீல நிறமாகவும் அடிவாரத்தில் பசுமை நிற மாகவும் தென்பட்டது. வழியெங்கும் சலசலவென்று ஓடும் கால்வாய்கள், ஓடைகள், சிற்றாறுகள் நிறைந்திருந்தன. அங்கங்கே மலையிலிருந்து விழும் அரு விகள் ஏதோ பச்சை நிறப் புடவையை உடுத்திக் கொண்டிருக்கும் ஒரு எழிலரசி முத்து மாலைகளை அணிந்து கொண்டிருப் பதுபோல் காட்சியளிக்கும்.

மரங்களில்தான் எத்தனை விதம்? நானும் மீராவுக்கு ஒவ்வொரு மரமாகச் சுட்டிக் காட்டி, என்ன மரம் என்று சொல்லிக் கொண்டும் வந்தேன்.

"அதோ பார். வெள்ளி இலை மாதிரி இருக்கிறதே, அதுதான் தேக்க மரம். உயரமாய், பச்சையாய்த் தெரிகிறதே, அதுதான் தோதகத்தி மரம். அது ஈட்டி மாதிரி இருக்கிறதல்லவா? அதனால் அதை ஈட்டி என்றுகூடச் சொல்வார்கள். அதோ சற்று கறுப்பாய் ஒரு மரம் இருக் கிறதே. அது கருங்காலி. இது புன்னை, அது சண்பக மரம், இது தென்னை, இது பலாமரம். அதோ வெள்ளையாய்ப் பாளைகள் தொங்குகிறதே, அது கமுக மரம்" என்று அவளுக்குச் சொல்லிக் கொண்டே வந்தேன்.

"இந்துமதியை அப்படியே கொண்டு போய் காலேஜில் 'பாட்டனி' வகுப்பில்

சேர்த்து விடலாம் போலிருக்கிறது!" என்றாள் சுலோசனா.

நானும் இன்னும் உற்சாகமாக, "இது ஜாதிக்காய், இது லவங்கம், இது ஏலம்" என்றெல்லாம் கூறிக் கொண்டு வந்தேன். அதில் எனக்கு ஏற்பட்ட பெருமையை எழுத்தில் வர்ணிக்க முடியாது.

பிறகு சுலோசனாவுக்கு நான் எப்படிக் 'குங்குமப் பூந்துறை' என்னும் பெயர் குங்குமத்துறை யாயிற்று என்று கூறினேன். அவளுக்கு இந்தப் பெயர் ரொம்பப் பிடித்து விட்டது.

"நான் எப்போதாவது ஒரு எழுத்தாளியாகி விடுவேன். அப்பொழுது 'குங்குமப்பூ' என்று புனை பெயர் வைத்துக் கொள்வேன்" என்றாள்.

மூன்று மணி நேரமும் மூன்று நிமிஷங்களாக முடிந்து விட்டது போல் இருந்தது. வீட்டு வாசலைக் கார் நெருங்கியதும் காரை விட்டு இறங்கவே எனக்கு மனம் வரவில்லை.

அய்யாக்குட்டியும், அப்பாவும் வாசலில் நின்று வரவேற்றார்கள். அய்யாக்குட்டி முகமலர்ச்சியுடன் அனைவரையும் வரவேற்றார்.

அவர் அவர்களை விழுந்து விழுந்து உபசரித்தது எனக்கு மிக ஆச்சரியமாக இருந்தது. பத்மநாபனை, "உங்களுக்கு வெற்றிலை பாக்கு வாங்கிக் கொண்டு வரட்டுமா?" என்று கேட்டார். ரமேஷிடம், "உங்களுக்கு சிகரெட் வேண்டுமா?" என்று விசாரித்தார். கோமளவல்லி அம்மாள் சற்றுக் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தபோது, "தலையை வலிக்கிறதா, அம்மா? தலைவலி மாத்திரை வேண்டுமா?" என்று கேட்டார். லீலாவுக்குச் சண்பக மலர் பிடிக்குமா' என்று கேட்டுத் தருவித்துக் கொடுத்தார். அவர் தன் சினிமா கூடாரத்தைப் பற்றி வாயைத் திறக்காமலிருந்தது, எனக்கு வியப்பாக இருந்தது.

நான் "அய்யாக்குட்டி ஒரு சினிமா கம்பெனி நடத்துகிறார்" என்று பேச்சை ஆரம்பித்தேன். எல்லோரும் சற்று வியப்படைந்தார்கள். எனக்கு சினிமா கம்பெனிக்கும், சினிமா கூடாரத்துக்கும் வித்தியாசம் தெரியாது. அய்யாக்குட்டி என்னைச் சற்று விழித்துப்பார்த்துவிட்டு, "அதெல்லாம் இப்போது ஒன்றுமில்லை. எனக்கு அது சரிக்கட்டி வரவில்லை. கம்பெனியைக் கலைத்து விட்டேன்" என்றார்.

சினிமா கம்பெனி நடத்துவதின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றி எல்லோரும்

சிறிதுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். தாம் சினிமாக் கொட்டகை முதலாளி என்று பெருமை யடித்துக் கொண்ட ஸ்ரீ ராஜாராம், அவர்களிடம் அதைச் சொல்லவே கூச்சப்படுவதைக் கண்டு வியப்படைந்தேன். வக்கீல் பத்மநாபன் குடும்பத்தார் குங்குமத் துறையில் இரண்டு நாட்கள் இருந்தார்கள். அவர்களுக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் அப்பா செய்து கொடுத்தார்.

குங்குமத்துறையில் உள்ள அழகிய இடங்களையும், வித விதமான வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் மலைச்சாரலையும், கோடிக்கணக்கான முத்துக்களைச் சொரிவது போல் விழும் அருவிகளையும் எல்லோருக்கும் காட்டி மகிழ்ந்தேன். ஆனால் பாதிரித் தோட்டத்தின் அருகில் கூட நான் போகவில்லை.

இரண்டாவது நாள் காலை ரமேஷ், "ஏதோ மர்டர் நடந்தது என்றீர்களே? அது எந்த இடம்?" என்று என் தந்தையைக் கேட்டார். எனக்குத் திக்கென்றது.

அப்பா சிறிது தயக்கத்தோடு, "இங்கே பாதிரித் தோட்டம் என்று ஒரு தோட்டம் இருக்கிறது. அங்கே அதற்குப் பிறகு யாருமே போவதில்லை" என்றார்.

"யாரும் போகா விட்டால் என்ன? நாம் போய்ப் பார்த்து விட்டு வருவோமே?" என்றாள் ஷீலா.

"நான் அழைத்துக் கொண்டு போகிறேன். அந்த இடத்தைப் பார்த்ததனால் என்ன வந்து விடும்?" என்றார் அய்யாக்குட்டி.

எனக்குக் கலவரமாக இருந்தது. ஆனால் சாமர்த்தியமாகச் சமாளித்துக் கொண்டேன். அய்யாக் குட்டியிடம் கோபம் வந்தது. பிறகு நமக்கென்ன என்று பொறுத்துக் கொண்டு அவர்கள் பேசுவதை மாத்திரம் கவனித்துக்கொண்டிருந்தேன்.

சிலருக்கு இந்தக் கொலை, கொள்ளை முதலியவற்றைப் பற்றிப் பேசுவதிலும், கேட்பதிலும் தனி உற்சாகம் உண்டாகும். அவர்கள் எவ்வளவு நல்லவர்களாக இருந்த போதிலும் இந்த மாதிரி விஷயங்களைப் பேசுவதில் ஒரு ருசி இருக்கும். சிலர் இந்த மாதிரி விஷயங்களையே கொண்ட துப்பறியும் நாவல்களைப் படித்துக் கொண்டே இருப்பார்கள். இந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள்தான் ரமேஷும், ஷீலாவும்.

மாமி மாத்திரம், "என்ன வேண்டியிருக்கிறது? கோவிலையும் குளத்தையும் பார்த்து விட்டு வருவதாக இருந்தால் அர்த்த மிருக்கிறது. இந்தக் கண்றாவி நடந்த இடத்தைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று உங்களுக்குத் தோன்றுகிறதே. உங்கள் புத்தி ஏன்தான் இப்படி உலக்கைக் கொழுந்தாக இருக்கிறதோ?" என்று வருந்தினார். ஆனமட்டும் போக வேண்டாமென்றார். அவர்கள் கேட்கவில்லை. என்னையும் கூப்பிட்டார்கள். நான் வேலையிருப்பதாக மறுத்து விட்டேன். நான் கோமளவல்லி அம்மாளைத் திருப்தி செய்வதற்காக வரமாட்டேன் என்று சொல்வதாக நினைத்துக் கொண்டார்கள். "அம்மாவுக்குச் சரியானபடி நடந்து கொள்கிறாயே" என்று ஷீலா கூறினாள். நான் அதைப் பொருட்படுத்தவில்லை. நல்லதாய்ப் போயிற்றென்று நினைத்துக் கொண்டேன். போகும்போது அய்யாக்குட்டி என்னைப் பார்த்துச் சிரித்து விட்டுப் போனதுதான் எனக்கு எரிச்சலாக இருந்தது.

நல்ல வேளையாக அதன் பிறகு இதைப் பற்றி அதிகமாகப் பேச்சு வரவில்லை. இந்த ஒரு சம்பவத்தைத் தவிர அவர்கள் இருந்த இரண்டு நாட்களும் மிகக் குதூகலமாகப் பொழுது போயிற்று.

மீராவையும், சுலோசனாவையும் வயலுக்கு அழைத்துக் கொண்டு போய்க் காட்டினேன். அறுவடையாகிக் கொண்டிருந்தது. இருவரும் அதிசயித்துப் போனார்கள். அரிவாளினால் பெண்கள் அறுவடை செய்வதையும், போரடிப் பதையும், நெல்லைத் தூற்றுவதையும், சேர் கட்டுவதையும் கண்டு வியப்படைந்தனர். மீரா தான் அங்கேயே இருந்து விடுவதாகக் கூறினாள்.

வயலுக்கருகில் கல்யாண முருங்கை மரங்கள் நிறைய வளர்ந்திருந்தன. அவற்றின் செந்நிறப் புஷ்பங்களைக் கண்டு மீரா வியந்தாள். குன்றிமணிச் செடிகளிலிருந்து நிறையக் குன்றிமணிகள் சேகரித்துக் கொடுத்தேன். மீரா அடைந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை.

நாங்கள் வீட்டுக்கு வந்தபோது அப்பா வெளியில் போயிருந்தார். கோமளவல்லி

> டி. கே. சி. மணிமொழி
>
> தமிழர்கள் நாடகத்தில் மூழ்கி முழுகினவர்களாகத் தெரிகிறது. கோவைப் பிரபந்தங்களைப் பார்த்தால் எல்லாச் செய்யுள்களும் நாடகத் துறைகளாகவே இருக்கும். கலம்பகத்தைப் பார்த்தாலும் நாடகச் செய்யுள்கள்தான். அவ்வளவு ஆசை நாடகத்தில் நம்மவருக்கு.

அம்மாள் தலைவலி யென்று என் அறையில் படுத்துக் கொண்டிருந்தார். அய்யாக் குட்டியும் வக்கீலும் மாத்திரம் பேசிக் கொண்டிருந்தனர். எனக்கு அதைப் பார்த்ததுமே கவலையாக இருந்தது. "இந்த அய்யாக் குட்டி எதற்காக இவர்களோடு இப்படி இழைய வேண்டும்?" என்ற கேள்வி என் மனத்தை உறுத்தியது.

மூன்றாவது நாள் காலை எல்லோருமாகச் சென்னைக்குப் புறப்பட்டோம். காரை. சுலோசனா, ரமேஷ், பத்மநாபன் மூவரும் மாற்றி மாற்றி ஓட்டினார்கள். ஒரு இரவு திருச்சியில் பத்மநாபன் அவர்களுடைய சிநேகிதர் வீட்டில் தங்கினோம். மறுநாள் காலை புறப்பட்டு மாலை சென்னை வந்து சேர்ந்தோம். சென்னை நகரத்தின் அமைப்பையும், தார் ரோடுகளின் வனப்பையும், கட்டடங்களின் நேர்த்தியையும், கார்களின் எண்ணிக்கையையும், கடைவீதிகளின் சிறப்பையும் கண்டு மலைத்துப் போனேன்.

கடைசியில் ஒரு அழகிய பங்களாவின் முன் கார் நின்றது. ஒரு ஆள் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்து கேட்டைத் திறந்தான். கேட்டுக்கு அருகில் "ஏ. பத்மநாபன் அட்வகேட்" என்று ஆங்கிலத்தில் பொறித்திருப்பதைக் கண்டேன்.

விதவிதமான கோலங்கள் போட்டிருப்பதைப் போன்ற, சித்திர விசித்திர வேலைப்பாடுகள் நிறைந்த சலவைக் கற்கள் பதிக்கப்பட்டிருந்த தரையும், அழகிய புஷ்பங்களைப் போல் உருவங்கள் அமைந்த கண்ணாடிக் கூடுகளைக்கொண்ட விளக்குகளையும் கண்டதும் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. வீடு ரொம்பப் பெரிது. ஆடம்பரமும் ரொம்ப அதிகம். நான் அவற்றில் அப்படியே தேன் குடித்த நரி மாதிரி மயங்கிப் போய் விட்டேன்.

சுலோசனா என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய், ஒவ்வொரு அறையாகக் காட்டினாள். அவளுடைய அறையைக் கண்டு நான் உண்மையில் சற்று பொறாமை கூடப்பட்டேன் என்று சொல்ல வேண்டும். சுலோசனா நல்ல பாக்கியசாலி. பிறந்தது முதல் இவற்றிலேயே திளைத்துக் கொண்டிருக்கக் கொடுத்து வைத்திருக்கிறாள் என்று எண்ணினேன்.

## அத்தியாயம் 45

# அன்பின் பயன்!

நான் சென்னை வந்த இரண்டாவது நாளே என்னை அழைத்துக் கொண்டு ஒரு ஆங்கிலப் படத்துக்குப் போனாள் சுலோசனா. படம் மிக நன்றாக இருந்தது. எனக்கு ஒன்றும் சரியாகப் புரியாத போதிலும் கூட எனக்குக் கதை புரிந்தது. ஆகவே மிகவும் ரஸமாக இருந்தது. பிரமித்துப் போய் விட்டேன்.

திரும்பி வரும் போது சுலோசனாவிடம் "ஏன், ஷீலா! இந்தச் சினிமாவில் ஒரு இடத்தில் அந்தக் கதாநாயகன் ஒரு பிரும்மாண்டமான கல்லை உதைத்துத்



தன்னுகிறனே? இது எப்படி சாத்தியம்?'' என்று கேட்டேன்.

"அது ஒன்றும் நிஜக் கல்லாக இருக்காது, இந்து. அட்டையினால் உருண்டையாகப் பண்ணிக் கறுப்பு வர்ணம் தீட்டியிருப்பார்கள். அவ்வளவுதான்'' என்றாள் ஷீலா.

"பின்னே நிஜக் கல் மாதிரியே இருக்கிறதே!'' என்றேன்.

"அப்படித்தான் இருக்கும். காதலனும் காதலியும் நிலவொளியில் நடப்பதாக ஒரு காட்சி வருகிறது அல்லவா? அந்த சந்திரன், அந்த வானம், அந்த நட்சத்திரங்கள் எல்லாம் ஒரு திரையில் வரையப்பட்டிருக்கும். அந்தத் திரைக்கு முன் இவர்கள் நடந்தால் காமிராவில் எடுக்கும் போது நிஜம் மாதிரியே தெரியும்'' என்றாள்.

என்னால் அதை நம்பக் கூட முடியவில்லை. அது எப்படி சாத்தியம் என்பது விளங்கவே இல்லை.

அதன் பிறகு ஒரு வர்ணப் படம் பார்த்தோம். ஆகா! அதில் நான் கண்ட வர்ண ஜாலங்களை வெகு நாட்கள் வரையில் என்னால் மறக்க முடியாமலிருந்தது. அது ஒரு பிரபல நடிகை நடித்த நடனப் படம். அந்த நடிகை சுழன்று சுழன்று நடனமாடிய போது என்னுள்ளமும் அவளுடன் சேர்ந்து சுழன்று சுழன்று வந்தது. அவள் ஒரு கட்டடத்தின் உச்சியில் நின்று ஆடுகிறாள். ஒரு கூரையின் மேல் ஆடுகிறாள். புல் தரையில் ஆடுகிறாள். பனிக் கட்டியில் ஆடுகிறாள். வீட்டினுள்ளே ஆடுகிறாள். தெருவில் ஆடிக் கொண்டே ஓடுகிறாள். அதையெல்லாம் கண்டு நான் மெய்மறந்து போனேன் என்று கூறினால் மிகையாகாது. ஒரே சினிமாப் பைத்தியமாகி விட்டேன் என்றுதான் கூற வேண்டும். ஷீலாவை அடிக்கடி சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகச் சொல்லித் தொந்தரவு செய்ய ஆரம்பித்தேன்.

பிரபல அழகியும், பாடகியுமான அருணா தேவி நடித்த படம் ஒன்றைப் பார்த்தேன். அது என் மனத்தை மிகவும் கவர்ந்தது. கணவனுக்காகத் தன் உயிரையே அர்ப்பணிக்கும் ஒரு உத்தம ஸ்திரீயின் கதையான அந்தப் படத்தைப் பார்த்ததிலிருந்து எனக்கு அருணா தேவியிடம் மிகுந்த அன்பு உண்டாகியிருந்தது.

இந்தச் சமயத்தில்தான் "தீபஜோதி'' சினிமா டிஸ்டிரிப்யூடர்ஸ் என்ற சினிமா கம்பெனியின் முதலாளி ஸ்ரீமான் ஜோதிலால் அவர்களைக் காணும் பேறு எனக்கு வாய்த்தது. நானும் சுலோசனாவும் ஒரு நாள் அவர்கள் வீட்டு வாசலில் உள்ள புல் தரையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். ரமேஷும், அவருடைய நண்பர்களும் சற்றுத் தூரத்தில் டென்னிஸ் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அந்த வீட்டுத் தோட்டம் மிக அழகாக இருந்தது. முன்புறத்தில் பசும் புல் தரை. சுற்றிலும் பல வர்ண மலர்களையுடைய விதம் விதமான புஷ்பச் செடிகள் கண்களைக் கவர்ந்தன. மதில் சுவரின் மேல் வளைந்திருக்கும் 'பூகன் வில்லா' கொடியில் ஊதா நிறப் பூக்கள் குலுங்கிக் கொண்டிருந்தன. இந்தத் தோட்டத்தையும் வீட்டையும் பிரித்துக்



டி. கே. சி. மணிமொழி

முன்னால், தமிழ் வளருகிறது என்று சொன்னால் அது பள்ளிக்கூடத்திலே தான் என்று சொல்லுவார்கள். இப்படிச் சொல்லுவதெல்லாம் சப்பாத்திக் கள்ளி வளர்ச்சியை வளர்ச்சி என்று சொல்லு வதைப் போலத்தானே!

கொண்டு அர்த்த சந்திர வடிவமாகப் பாதை இருந்தது.

'டாலியா' செடிகளில் பூத்திருந்த பல விதமான நிறங்களை யுடைய புஷ்பங் களைக் கண்டு நான் மயங்கிப் போனேன். கரும் சிவப்பு, இளம் சிவப்பு, ரோஸ், ஆரஞ்சு, இளம் மஞ்சள், கத்தரிப்பு நிறம், நீல நிறம் இத்தனை விதங்களும் எப் படித்தான் உண்டாகிறதோ என்று வியந்த வண்ணம் இருந்தேன்.

சுலோசனாவை ஒவ்வொரு புஷ்பத்தின் பெயரையும் சொல்லச் சொல்லிக் கேட் டேன். எத்தனை தரம் கேட்டாலும் எனக்கு மறந்து போய்க் கொண்டே இருந்தது.

அவளும் பொறுமையாகச் சொல்லிக் கொண்டு வந்தாள்.

"அதோ நீளமான கொத்தாய் செக் கச் செவேல் என்று பூத்திருக்கிறதே, அதன் பெயர் என்ன?"

"அதற்கு 'ரெட்ஸால்வியா' என்று பெயர்."

"ரத்தின கம்பளம் விரித்த மாதிரி, பூத்துக் குலுங்கி யிருக்கிறதே அந்தப் பக்கத்தில், அதன் பெயர் என்னவென்று சொன்னாய்?"

"அதற்கு ப்ளாக்ஸ் என்று பெயர்."

"இங்கே செண்டு செண்டாய்ப் பூத் திருக்கிறதே இதன் பெயர் எக்ஸோரா தானே?"

"அடேயப்பா! நினைவிருக்கே உனக்கு! இத்தனை புஷ்பத்தில் அது ஒன்றுதான் பாக்கியம் செய்திருக்கிறது."

'இல்லை! அந்த மரத்தில் படர்ந்திருக் கிறதே, நீல நிறமாக இருக்கிறதே அதற்கு 'மார்னிங் க்ளோரி' என்று பெயர்."

"வெரி குட், இவ்வளவு நினைவிருக் கிறதே. இந்த மஞ்சளும் சிவப்பும் கலந்த பூவுக்கு என்ன பெயர் என்று சொல், பார்க்கலாம்."

"அது தெரியாதா, எனக்கு? செம் பருத்தி."

"இல்லவே இல்லை. அதற்கு 'ஹை பிஸ்கஸ்' என்று பெயர்."

நான் சிரித்தேன். "ஏன் சுலோசனா, இந்தப் புஷ்பங்களுக்குக் கூட உன்னைப் போல் இரண்டு பெயர் போலிருக்கிறது. எங்கள் ஊரில் செம்பருத்தி என்று தான் சொல்வார்கள்" என்றேன்.

"ஆமாம்! சுலோசனா என்று நீட்டிச் சொன்னால் நன்றாக இருக்கிறதா? பெயர் சின்னதாகப் பளிச்சென்று இருக்க வேண்டாமா? அது கிடக்கட்டும். இது பித்தானியா, அது ஜினியா, அதோ மஞ்ச ளாய்ப் பெரிதாய்ப் பூத்திருக்கிறதே அது அலமண்டால், அதற்குப் பக்கத்தில் இருப்பது மெர்ரி கோல்ட்" என்று அடுக்கிக் கொண்டே போனாள்.

நான் அவளை நிறுத்தினேன். "இந்தா, சுலோசனா. இப்படி அடுக்கினால் எனக்கு ஞாபக மிருக்காது.........ஆனால் அந்த மெர்ரி கோல்ட் என்று நீ சொன்ன பூவுக்குத் துலுக்க சாமந்தி என்று சொல்வார்கள் எங்கள் ஊரில்."

"மற்றவர்கள் எப்படியாவது போகட் டும். நீயாவது 'மெர்ரி கோல்ட்' என்றே சொல்லு......"

"ஆகட்டும்."

"ஆமாம்! நீ ஏன் என்னை ஷீலா என்று கூப்பிடாமல் திடீரென்று சுலோ சனா என்று கூப்பிடுகிறாய்?"

"எனக்குச் சுலோசனா என்று கூப்பிட் டால்தான் பிடிக்கிறது."

"சும்மா சொல்கிறாய். நேற்று வரை ஷீலா என்றுதானே கூப்பிட்டாய்?"

"நிஜத்தைச் சொல்லி விடுகிறேனே. மாமிக்கு நான் அப்படிக் கூப்பிட்டால் பிடிக்க வில்லையாம். 'அழகாகப் பெயர் வைத்திருக்கிறேனே. நீயாவது என் மாதிரி கூப்பிடக் கூடாதா?' என்றார். அதனால்தான்."

"சரிதான்! நான் நினைத்தது சரியாகப் போயிற்று."

"நீ என்ன நினைத்தாய்?"

"அம்மா உன்னைத் தன் மருமகளாக்கிக் கொள்ள விரும்புகிறாள் என்று சந்தே கித்தேன்!"

"சே! எதையாவது உளறாதே, சுலோ சனா! இப்படி நீ சொல்வதாக இருந்தால் இன்றே நான் ஊருக்குப் போகிறேன்."

"நான் உளறவில்லை, இந்து! அப்பாவும் அம்மாவும் இரண்டு நாட்களுக்கு முன் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந் தது. அதனால்தான் சொன்னேன்."

"என்ன பேசிக் கொண்டிருந்தார்கள்?" என்று கேட்டேன். அவள் என்ன சொல் லப் போகிறாளோ என்று மிகவும் ஆவ லாக இருந்தது. (தொடரும்)



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை

## 9. முக்கூடல்

தென் பாண்டி நாட்டிலே முக்கூடல் என்ற ஊர் ஒன்று உண்டு. மூன்று நதிகள் கூடும் இடத்தில் அமைந்தது அவ்வூர். வட நாட்டில் உள்ள திரிவேணியைப் போன்று தென்னாட்டு முக்கூடல் ஒரு சிறந்த தீர்த்தத் துறையாக விளங்கிற்று. பொதிய மலையிலே பிறக்கும் பொருநை யாறும் குற்றால மலையிலே பிறக்கும் சிற்றாறும் கழுகு மலையின் அருகே ஓர் ஊற்றினின்று எழுந்து செல்லும் ஓடையும் முக்கூடற் பதியிலே கலக்கும் காட்சியைக் கண்டு கவிஞர் பாட்டிசைப் பாராயினர்.

வேனிற் காலம் முடிந்ததும் முக்கூடலில் வேளாண்மை செய்யும் உழவர் வானத்தையே நோக்கி நிற்பர்; கார்மேகம் தவழ்ந்து சென்றால் கைகூப்பித் தொழுவர்; மழைக் காற்று வீசினால் மனம் களிப்பர்; பருவ மழையை வருவிக்குமாறு கருங் குயிலை வேண்டுவர்.

"பொருநையாம் திருநதியின்
இருகரையும் இருபூவும்
பூஞ்சாலி விளையவே
கூவாய் குயிலே
பெருவளம் தருநாடு
திங்கள்மும் மாரியும்
பெய்யமழை வேண்டியே
கூவாய் குயிலே"

என்று சோலைக் குயிலை நோக்கி முறையிடுவர்.

பருவ மழைக்குரிய அறிகுறிகள் தோன்றும். "கோடை மாறிக் கொண்டல் வந்தது" என்று குயில் கூவும்; சுழல் காற்று வீசும்; மின்னலின் ஒளி கண்ணைப் பறிக்கும்; வானம் பாடி வட்டமிட்டு ஆடும். கரு மேகத்தில் இடியேறு முழங்கும். இவ் அறிகுறிகளைக் கண்டு அக மகிழ்ந்து "ஆற்று வெள்ளம் நாளை வரும்" என்று ஆடிப் பாடுவர் பயிர்த் தொழில் செய்யும் பள்ளர்.

"ஆற்றுவெள்ளம் நாளை வரத்
தோற்றுதே குறி — மலை
யாள மின்னல் ஈழ மின்னல்
சூழ மின்னுதே

நேற்றும் இன்றும் கொம்பு சுற்றிக்
காற்றடிக் குதே — கேணி
நீர்ப்படு சொறித் தவளை
கூப்பிடு குதே

சேற்று நண்டு சேற்றில் வளை
ஏற்றடைக் குதே — மழை
தேடி யொரு கோடி வானம்
பாடி ஆடுதே

போற்று திரு மால்அழகர்க்
கேற்றமாம் பண்ணைச் — சேரிப்
புள்ளிப் பள்ளர் ஆடிப் பாடித்
துள்ளிக் கொள்ளுமே"

என்று பள்ளரின் உள்ளக் கிளர்ச்சியை உணர்த்தினர் முக்கூடற் பள்ளுக் கவிஞர்.

பள்ளர் எதிர்பார்த்தபடியே பொதிய மலையிலும் குற்றால மலையிலும் கார்மேகம் கவிந்தது; கனத்த மழை பெய்தது. பெரியாறு என்னும் பொருநை யாற்றிலும் சிற்றாறு என்னும் சித்திர நதியிலும் புது வெள்ளம் பொங்கி எழுந்தது: கால்களின் வழியாகக் குளத்தில் நிறைந்து வயல்தொறும் பாய்ந்தது. காய்ந்து கிடந்த வயல்களிற் பாய்ந்து நிறைந்த தண்ணீரை முக்கூடலழகரின் கருணை வடிவாகவே கண்டு வணங்கினர் பண்பாடுடைய பள்ளர்.

பண்ணை நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்யத் தலைப்பட்டான் வடிவழகக் குடும்பன். சேரிப் பள்ளரோடு சேர்ந்து காற்றங் காலை நன்றாக உழுதான்: தொளியில் விதை

யைத் தெளித்தான். முளைத்த முளைக்குத் தண்ணீர் அடைத்தான்; வயலைச் சுற்றி வேலி இட்டான்; வளர்ந்த நாற்று முகம் கண்டான்; அளவிலா மகிழ்ச்சி கொண்டான்.

" உழுத உழவைக் கண்டு களித்தான்–பள்ளர்
  உள்ள பேரையெல்லாம் விளித்தான்
  தொழுது தெய்வக் கடன் கழித்தான்–அந்தத்
  தொளியில் விதைகளெல்லாம் தெளித்தான் "

" வளர்ந்த நாற்று முகம் கண்டான்
  அளந்திடா மகிழ்ச்சி கொண்டான்."

நாற்று வளர்ந்த போது அதைப் பறித்து ஏராலே சீராக்கிய நிலங்களில் நடத்தொடங்கினர் பள்ளியர்: பாடிக் கொண்டே நடந்தது நடுகை. காளிங்க கீர்த்தனம் செய்த கண்ணனைப் பாடினர்; கஞ்சனைக் கொன்று முடித்த அஞ்சன வண்ணனைப் போற்றினர்; வானவர்க்கு அமிழ் தூட்டிய வள்ளலை வாழ்த்தினர்; மூவுலகும் ஈரடியால் அளந்த முதல்வனைப் புகழ்ந்தனர்.

" கடிக்கும் அரவில் நடிக்கும் இறைவர்
    கஞ்சனுக் கொரு நஞ்சனர்
  கடையும் அமுதம் உடையும் திரையில்
    காட்டி அண்டருக் கூட்டினர்
  அடிக்குள் அடங்கும் படிக்கு முதல்வர்
    அழகர் முக்கூடல் வயலுள்ளே
  ஆடிப் பாடி நாற்று முடியை
    அலைத்துக் குலைத்து நடச்செய்தே."

என்று வாயாரப் பாடி நாற்று முடியைக் கையார நட்டனர் பள்ளியர்.

நட்ட நாற்றுத் தளிர்த்தது; பசப்பேறித் தழைத்தது; பொதி நீட்டிப் புன்முறுவல் பூத்தது; நெற்கதிர் எழுந்து வளைந்து முதிர்ந்தது. நாட்கதிர் கடந்தது. அறுவடை முடிந்தது.

இவ்வாறு அழகர் பண்ணையில் பணிசெய்த வடிவழகக் குடும்பனுக்கு வாய்த்த பள்ளியர் இருவர். மூத்தவள் முக்கூடற் பள்ளி. இளையவள் மருதூர்ப் பள்ளி. இருவரும் விண்ணாணம் பேசுவதில் விருப்பம் மிக்கவர்; தம் பிறப்பின் மேன்மையை ஓயாது பேசுவர். முக்கூடற் பள்ளி கூறுவாள்: " என் குடும்பம் இன்று நேற்று வந்ததன்று; பெரியாறும் சிற்றாறும் கலந்த காலமுதல் வழி வழியாக வருவதாகும் என் குடி.

" உத்தர பாக மான
  சித்திர நதியும் தேன்பால்
      ஓடும் பொருநையுடன்
      கூடும் போதே
  அந்தநாள் காலமுந் தொட்டு
  இந்தநாள் காலமுங் கண்டு
      அடிபடி வாழையாய் நான்
      குடியில் வந்தேன்."

என்று தன் குடித்தரம் கூறுவாள், மூத்த பள்ளி.

டி. கே. சி. மணிமொழி

குழந்தைகளிடத்தில் பாவனு சக்தி மிகுதியாக இருக்கக் காண்கிறோம். அவர்கள் மரப்பாச்சியை வைத்துக் கொண்டு ஏதோ அதனிடத்தில் உயிரும் உணர்ச்சியும் இருப்பதாக எண்ணிக்கொள்வார்கள். மரப்பாச்சியோடு வெகு நேரமாக இல்லாத பேச்செல்லாம் பேசிக் கொண்டும் இருப்பார்கள் .... குழந்தைகளின் பாவனை யுலகம், எத்தனையோ விஷயங்களைப் புதிது புதிதாக உற்பத்தி பண்ணி அனுபவிக்கும் தன்மையது. அந்தப் பாவனையுலகத்தில் நிகழும் விஷயங்கள் அநேகமாய் நமக்கு விளங்காது. விளங்கி விட்டால் நாம் பாக்கியசாலிகள்தான்!

அதுகேட்ட இளைய பள்ளி,

"செஞ்சிக்கும் கூடலுக்கும்
தஞ்சைக்கும் ஆணைசெல்லும்
செங்கோல் வடமலேந்திரன்
எங்கள் ஊரே;

நெஞ்சில் குறித்துக் குளம்
அஞ்சுக்கும் சக்கரக் கல்
நிலையிட்ட நாளில் பண்ணை
தலையிட்டேன் நான்."

என்று தன் குடிப் பெருமை பேசுவாள் இளைய பள்ளி.

மூத்த பள்ளி வடிவழகக் குடும்பனுக்கு மாமன் மகள். அந்த முறையில் தன்னை உரிமையுடன் மறித்து மணந்து கொண்டான் என்று எப்பொழுதும் பெருமிதம் கொண்டு பேசுவாள் மூக்கூடற்பள்ளி.

"வழக்கிட்டு நான்வந்தேனே
மருதூர்ப்பள்ளி — பள்ளன்
மாமன்மகள் என்றென்னை
மறித்துக் கொண்டான்"

என்று தனக்குள்ள பிறப்புரிமையை எடுத்துரைப்பாள்.

இளையாள் அவளுக்கு இளைத்தவளா? "மாமன் மகள் ஆனால் என்ன? மற்றொருத்தி ஆனால் என்ன? உழக்கிலே கிழக்கு மேற்கு என்பது உண்டோ? உன்னைக் கட்டிய பள்ளன் என்னைக் கண்டான்; மையல் கொண்டான்; வலிய என் ஊரில் வந்து மணம் செய்தான். முன்னே வந்தவள்; பின்னே வந்தவள் என்று பேசுவதில் ஏதேனும் பொருள் உண்டோ?

"உழக்கில் கிழக்கு மேற்கோ
மூக்கூடற்பள்ளி—மறித்து
உன்னைக் கொண்டான் என்னைக் கண்டு, என்
ஊரிலே வந்தான்"

என்று மூத்தாளின் வாயடைத்தாள்.

இப்படியே ஏச்சும் பேச்சும் வளர்ந்து கொண்டு போயிற்று. நெடும் பொழுது வாதாடிய பின் இருவர் வாயும் ஓய்ந்தது. "ஏசலும் பூசலும் இனி வேண்டாம்: ஈசனார் பாதம் பணிந்து இணங்கி வாழ்வோம்" என்றுசொல்லிப் பாடு பார்க்கச் சென்றனர் பள்ளியர் இருவரும்.

"சொன்னால் என்ன நீயும் போறு
நானும் போறந்தேன் — கீழே
சூழ்ந்திருக்க நாமே கூடி
வாழ்ந்திருக்கலாம்.

"பன்னகத்தில் ஆடியமுக்
கூடல் அழகர் — திருப்
பாதமலர் வாழ்த்தி ஆடிப்
பாடுவோமே"

என்று இருவரும் மனமொத்துப் போனதைப் பாடுகின்றார் பள்ளுக் கவிஞர்.

மூக்கூடலின் தொன்மையும் சீர்மையும் மூந்நூறு ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்ட 'மூக்கூடற் பள்ளு' என்னும் நாடகத்தால் நன்கு விளங்கும். தமிழ் மொழியிலுள்ள பள்ளு நாடகங்களுள் இதுவே தலை சிறந்ததாகும். எட்டு நூற்றாண்டுக்கு முன் பாண்டி நாட்டை ஆண்ட மாற வர்மன் பயிர்த் தொழிலை வளர்ப்பதற்கு ஒரு திட்டம் வகுத்து, மூக்கூடலில் பெரியதோர் ஏரி வெட்டினான். அம் மன்னனது பட்டப்பெயர் ஸ்ரீவல்லபன் என்பது. அப்பெயரை அமைத்து "ஸ்ரீ வல்லபப்பேரேரி" என்று அவ் ஏரியை அழைத்தனர். நாளடைவில் பேரேரி என்பது பேரி என மருவிற்று. 'ஸ்ரீ வல்லபப் பேரி'யும் 'சீவலப்பேரி'யாகச் சிதைந்தது. மூக்கூடல் என்னும் பழம் பெயர் மறைந்து சீவலப் பேரி என்பது ஊரின் பெயராகவும் வழங்கலாயிற்று. எனவே, இந்நாளில் நெல்லை நாட்டிலுள்ள சீவலப்பேரியே பள்ளு நாடகத்தில் பாடப் பெற்ற மூக்கூடலாகும்.

இப்போது சீவலப்பேரி ஒரு சிற்றூராய் விட்டது. ஆற்றுப் பெருக்கற்ற காலத்தில் அங்குள்ள பரந்த வெண் மணல், நடப்போர் அடிகளைச் சுட்டெரிக்கும். ஆற்றிலே நீராடச் செல்லும் மாதர்கள் சுடு மணற் பரப்பில் அடி வைத்து நடந்து படும் அவதியைக்கண்ட பெரியோர் "செக்கடிக்கப் பெண் கொடுத்தாலும் சீவலப்பேரியில் பெண் கொடுக்கலாகாது" என்றார்கள். அவர் வாய்மொழி தென்னாட்டில் ஒரு பழமொழியாய் இன்றும் வழங்குகின்றது.

டி. கே. சி. மணிமொழி

விலைப்பட்டியைப் பார்த்த மாத்திரத்தில் சாமான் வாங்கத் தோன்றுது. கண்ணாடி வழியாகப் பார்க்கும்போதுதான் வாங்கத் தோன்றும். காதல் தத்துவத்திலும் இது உண்மை!

* * *

காதல் வெறிக்கு எத்தனை எத்தனையோ பட்டங்கள். காரணமில்லாமல் களிப்பு வரும்; காரணமில்லாமல் துயரம் வரும்; காரணமில்லாமலே ஆறுதல் ஏற்படும், அந்த வெறியில்!




# டியூடர் ஆயிஸ்டர் பிரின்ஸ்

## சுறுசுறுப்பான ஆடவர் ஒவ்வொருவருக்கும் ஏற்ற கடியாரம்

இந்த சீர்திருத்தப்பட்ட புதிய டியூடர் ஸெல்ப்-வைண்டிங் கடியாரத்திற்கு பிரத்யேக கவனம் சிறிதும் தேவையில்லை. உங்கள் கை மணிக்கட்டின் ஒவ்வொரு சிறு அசைவிலும் இதன் (ரோலெக்ஸ் பேடண்ட்) ரோட்டார் விசை ரிசப்தமாக தானாகவே சாவி கொடுத்து கடியாரத்தை நேர்மையுடன் ஓடவைக்கிறது.

19-ஜுவல் யந்திரம்; காந்தத்தினால் பாதிக்கப்படாதது அதிர்ச்சி தாங்கக்கூடியது . . . ஜலம், தூசி, அழுக்கு, வியர்வைகூட புகாதபடி அழகிய ஆய்ஸ்டர் கேஸின் பாதுகாப்புடையது.



**டியூடர் ஆய்ஸ்டர்டேட்** கடியாரத்தைப் பார்க்கத் தவறாதீர்கள் — பிரின்ஸைப்போன்று அதே அழகிய அமைப்பு ஆனால் டயலில் தேதியும் காட்டும்.

**டியூடர்** ஜெனிவா ரோலெக்ஸாரால் பொறுப்பு ஏற்கப்பட்டது

தென்இந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள் :

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

# வள்ளியின் செல்வன்

**ஏகலைவன்**

“பணம் சம்பாதிப்பதற்காகப் படங்கள் எடுக்கட்டும். பாமர மக்களைக் களிப்பூட்டுவதற்காக ஆடல் பாடல் நிறைந்த படங்களை எடுக்கட்டும். பத்துப் படங்களுக்கு ஒரு முறையாவது நாட்டையும் நாட்டு மக்கள் பண்பையும் உயர்த்தக்கூடிய முறையில் நம் சினிமா முதலாளிகள் படம் எடுக்கக் கூடாதா!” என்று நாட்டு மக்களின் நலத்தில் அக்கறையுள்ள பலர் கூறிக்கொண்டிருந்தனர். அவர்களின் குறையை ஓரளவு நீக்கும் முறையில் “வள்ளியின் செல்வன்” என்னும் தமிழ்ப் படம் வெளியாகித் தமிழ் நாட்டு ரஸிகர்களை மகிழ்வித்துக் கொண்டிருக்கிறது.

** ** **

“வள்ளியின் செல்வன்” ஜெமினி ஸ்டுடியோவில் தயாரான படம். யுனைடெட் பிலிம் ஆர்ட்ஸ் ஸ்தாபனத்தார் தயாரித்த படம். கொத்தமங்கலம் ஸ்ரீ சுப்பு டைரக்ட் செய்த படம்.

வள்ளியின் செல்வன் நல்ல கருத்துள்ள படம்; குற்றமில்லாத நகைச் சுவை உள்ள படம்; ஆபாசமில்லாத படம்; குதூகலமும் சோகமும் மாறி மாறி வந்து உணர்ச்சி மயமாக உள்ள படம்; ஆடல் பாடல் நிறைந்த படம்; நடிப்புத் திறமையும் டைரக்ஷன் திறமையும் உள்ள படம்; இவ்வளவு நல்ல அம்சங்களுடன் ஜனங்களைத் திருப்தி செய்யும் படமாக அமைந்திருக்கிறது.

** ** **

மனோகரம் பிள்ளை ஒரு லட்சாதிபதி. கல்யாணமாகிப் பத்து வருஷங்களுக்கு மேலாகியும் அவருக்குக் குழந்தை பிறக்க வில்லை. அதற்காக இத்தனை நாளும் அன்பும் ஆதரவும் காட்டி வந்த தம் அருமை மனைவி வத்ஸலாவை விட்டு விட்டு வேறு கல்யாணம் செய்து கொள்ள முயற்சிக்கிறார். இதை அறிந்த வத்ஸலா துடிதுடிக்கிறாள்; கண்ணீர் விட்டுக் கதறுகிறாள். அவள் அழுது புலம்புவதை அவர்கள் வீட்டில் வேலை செய்து வரும் வேலைக்காரக் கந்தன் பார்க்கிறான். இந்த சம்பவத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு அதிக சம்பளம் பெறுவதற்கு அவன் முதலாளியின் தயவை எதிர்பார்க்க வில்லை. தன் மனைவி வள்ளிக்குப் பிறந்த குழந்தையை வத்ஸலாவிடம் கொடுத்து அவளுக்குப் பிறந்த குழந்தையாக்கி விடுகிறான். வத்ஸலாவும் தனக்குப் பிறந்த குழந்தையாகவே நடித்துத் தன் கணவனையும் மற்றவர்களையும் நம்ப வைத்து விடுகிறாள். ஆனால் அவள் சகோதரன் மூர்த்திக்கு மட்டும் உண்மை தெரியும்.

மூர்த்தி குழந்தையே வேண்டாம் என்ற கொள்கையுடையவன். அவன் மாமனார் சிரஸ்தார் துரைசாமிப் பிள்ளை மூர்த்திக்குக் குழந்தை பிறந்து அதை மனோகரம் பிள்ளைக்கு ஸ்வீகாரம் கொடுத்து அவர் சொத்துக்கு அதிபதியாக்க ஆசைப்படுகிறார்.

வத்ஸலாவிடம் கந்தனின் குழந்தை அன்போடு வளர்கிறான். ஆனாலும் வள்ளியின் தாயுள்ளம் துடிக்கிறது. அதே ஏக்கம் அவள் உயிருக்கே உலை வைத்து விடுகிறது. இந்தச் சமயத்தில் வத்ஸலாவுக்குக் குழந்தை பிறக்கிறது. வத்ஸலாவின் மனம் மாறுகிறது. குழந்தை ராஜுவை வத்ஸலா கொடுமைப் படுத்துகிறாள். வேலைக்காரக் கந்தன் வேதனைப் படுகிறான். இந்தக் கட்டத்தில் எல்லாம் படம் பார்ப்பவரின் நெஞ்சு நெகிழ்ந்து விடுகிறது. ஆசை நிறைவேறாது போன சிரஸ்தார் துரைசாமிப் பிள்ளை கலகம் செய்கிறார். கந்தன் வேலையைவிட்டு நீக்கப்படுகிறான். அவனைத் தொடர்ந்து குழந்தை ராஜுவும் போகிறான். பிறகு இதயங்கள் மாறுகின்றன. மனிதப் பண்புடன் மன்னிக்கும் கட்டம் வருகிறது. படம் நல்ல விதமாக முடிகிறது.



வள்ளியின் செல்வன்

** ** **

சிறுவர்கள் பாபு, ராஜுவாக நடித்திருக்கும் பாபுஜியும், முரளியும் சினிமா உலகத்தில் உதயமாகிச் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் குழந்தை நடிக நட்சத்திரங்களாகத் திகழ்கிறார்கள். சிறுவர்களின் பேச்சும், பாட்டும், சிரிப்பும், விளையாட்டும் “வள்ளியின் செல்வனை”க் கவர்ச்சியுள்ள படமாக்கி, மீண்டும் பார்க்கும்படி தூண்டுகின்றன. சிறுவர்கள் இருவர்களும் கணீர் என்று பேசியிருக்கிறார்கள்; கண்ணீர் விட்டு அழுதிருக்கிறார்கள்; இயற்கையாக நடித்திருக்கிறார்கள்.

இந்தச் சிறுவர்களிடம் உள்ள நல்ல அம்சங்களையெல்லாம் நன்கு சோபிக்கும்படி செய்திருக்கும் டைரக்டர் சுப்புவின் திறமையை மீண்டும் பாராட்டத் தோன்றுகிறது.

வள்ளியாக நடிக்கும் ஸ்ரீமதி சுந்தரிபாய் குழந்தையைப் பிரிந்த ஏக்கத்தால் காரில் அடிபட்டுச் சாகிறாள். அவளுடைய சோக நடிப்பினால் நம்மையும் துயரக் கடலில் ஆழ்த்தி விடுகிறாள். அவள் துயரம் ததும்பும் முகபாவம் நம் உள்ளத்தை உருக்குகிறது. அவள் கனிவு ததும்பும் வார்த்தைகள் கண்ணீரை வருவித்து விடுகின்றன.

சிரஸ்தார் துரைசாமிப் பிள்ளையாக நடித்த ஸ்ரீ டி. எஸ். துரைராஜின் ஹாஸ்ய நடிப்பு உயர் தரமான அமெரிக்க ஹாஸ்ய நடிகரின் நடிப்புக்கு இணையாக இருக்கிறது. தாம் சிரிக்காமல் மற்றவர்களைச் சிரிக்கப் பண்ணி விடுகிறார். தம் மாப்பிள்ளைக்கும் மகளுக்கும் ஆணை வெடி கட்டுக்

காட்டும் கட்டமும் குழந்தைக்கு பலூன் ஊதிக் காட்டும் கட்டமும் அவருடைய ஹாஸ்ய நடிப்பின் சிகரங்கள்.

மூர்த்தியாக நடித்திருக்கும் ஜெமினி ஸ்ரீ கணேசன் நல்ல பிள்ளையாக மிக உயர்ந்த முறையில் நடித்திருக்கிறார். இயற்கையாகப் பேசுகிறார்; தோற்றமளிக்கிறார்; நடிக்கிறார். இது பாராட்ட வேண்டிய காரியம்.



"சிகு சிகு சிகு சிகு சிகு, ஊ ஊ ஊ......"

வத்ஸலாவாக வரும் ஸ்ரீமதி லலிதா இதுவரை நடித்த படங்களுக்குள் இதில் முதல் தரமாக நடித்துப் புகழுக்கு உரியவரா யிருக்கிறார். ஒயிலான நடையும், குறு குறு என்ற பார்வையும், உல்லாச நடிப்பும், சுத்தமான பேச்சும், பாடிக் குதிப்பதும் படத்துக்குச் சோபை யளிக்கின்றன.

மனோகரம் பிள்ளையாக நடித்திருக்கும் ஸ்ரீ சகஸ்ரநாமம் ரொம்ப ரொம்பப் பொல்லாதவராக மிக நல்ல முறையில் நடித்திருக்கிறார். வேலைக்காரக் கந்தனின் வேதனையைப் பார்க்கும்போது மனோகரம் பிள்ளைக்கு ஒரு சகஸ்ரநாம அர்ச்சனை செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது. அவ்வளவு கல் நெஞ்சராக இருந்தவர் கடைசியில் கந்தனிடமே வந்து சரணாகதி யடைகிறாரே அதற்காக மன்னித்துவிடத் தோன்றுகிறது.

வேலைக்காரக் கந்தனாக வந்து எல்லார் உள்ளத்தையும் கவரும் முறையில் நடித்துள்ள ஸ்ரீ எஸ்.வி. சுப்பையா படத்துக்கு விறுவிறுப்பை அளிக்கிறார். "கஷ்டம் எல்லைமீறிப் போனால்தானே கடவுளையும் ஏழையையும் நினைக்கிறீர்கள்!" என்று கதறும் கட்டம் மனத்தை உருக்குவதா யிருக்கிறது.

ஒளிப் பதிவு, ஒலிப் பதிவு, காட்சி ஜோடனைகளைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல முடியாதபடி கதையின் சோகம் நம்மைக் கவர்ந்து விடுகிறது.

படத்தில் வரும் பாட்டுக்கள் இனிமையாக இருக்கின்றன. படம் முடிந்து வெளி வந்ததும் படத்தில் வந்த மற்றப் பாட்டுகளைவிட குழந்தைகள் ரயில் வண்டி விளையாடும் "சிகு சிகு சிகு சிகு சிகு, ஊ ஊ ஊ" என்ற பாட்டுத்தான் நினைவுக்கு வருகிறது! இதுவும் குழந்தைகள் பாட்டுக்கு ஏற்றபடி அபிநயம் பிடித்து விளையாடியதால்தான். இந்த ஒரு பாட்டைத் தயாரிப்பதில் எத்தனையோ கவனம் செலுத்தி யிருக்கிறார்கள். சிறு சிறு நுட்பங்களையும் கவனித்து இந்த அபிநயப் பாட்டை எடுத்திருக்கிறார்கள். இந்தப் பாட்டு ஒன்றே போதும் "வள்ளியின் செல்வன்" படம் பார்த்து அநுபவிப்பதற்கு என்று சொல்லத் தோன்றுகிறது.

கதையின் கட்டுக்கோப்பில் சில குறைபாடுகள் இல்லாமல் இல்லை. உதாரணமாக ராஜுவை வத்ஸலா கடுமையாகக் கண்டிக்கும் இடம் சற்று "அதி"யாகவே இருக்கிறது. என்றாலும் படம் ஒரு விஷயத்தை நமக்கு ஐயமறத் தெரிவிக்கின்றது. மனிதப் பண்பை உயர்த்திக் காட்ட ஒரு உதாரணப் படமாய் அமைந்திருக்கிறது.

வட்ட மேஜை

# இருமுனைப் போர்!

இந்த வாரக் கல்கியின் தலையங்கம் மூலம் தாங்கள் தமிழ் நாட்டு மக்கள் அனைவருடைய சிந்தனையையும் கிளறி விட்டிருக்கிறீர்கள்.

தமிழ் நமது தாய்மொழி, அதன் மேல் நமக்கு ஆர்வம் உண்டு என்பதற்காக மட்டும் அல்ல; நாட்டு மக்களின் முன்னேற்றத்துக்காகவே இப்போது உள்ள ஆங்கில மொழி மூலம் கல்வி கற்கும் முறை ஒழிய வேண்டும்.

கல்லூரிகளில் விஞ்ஞானம், பொருளாதாரம் போன்ற பாடங்களைப் படிக்க மாணவன் இரண்டு முயற்சிகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. முதலாவது, அன்னிய மொழியில் ஓரளவு வல்லமையும், அதன் பிரயோகங்களை யெல்லாம் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். அதோடு கற்றுக்கொள்ளும் விஷயத்தின் நுணுக்கங்களை அறிய வேண்டும். இந்த இரட்டை முயற்சியில் வெற்றி பெறும் மாணவர் தொகை மிகக் குறைவு. பெரும்பாலும் அவர்கள் உருப்போட்டு ஒப்பித்துத் தேர்வில் தேறி விடுகிறார்கள்.

கற்கும் விஷயத்தில் தமது முழுக் கவனத்தையும் செலுத்த முடியாத காரணத்தால், தாம் கற்கும் படிப்பில் ஒரு பிடிப்பு ஏற்படுவதில்லை. அவர்களுக்கு ஏற்பட்டிருந்தால், இன்று சயன்ஸ் ஆனர்ஸ் மாணவர்கள் குமாஸ்தா வேலை நாடுவதேன்!

எத்தனை பேர் கல்லூரிப் படிப்புக்குப் பின்னர் விஞ்ஞானத்தைத் தொடர்ந்து படிக்கிறார்கள்! அவர்கள் மேல் பிசகில்லை. அவர்களுக்குத் தாய் மொழியில் கல்வி புகட்டியிருந்தால் அவர்கள் தமது முழுக் கவனத்தையும் கற்கும் விஷயத்திலே செலுத்தி யிருப்பார்கள். சிறந்த நிபுணர்களாக விளங்கி யிருப்பார்கள். பிறநாட்டு இளைஞரை விட நமது இளைஞர்கள் அறிவுத் திறனில் மட்டமானவரா! இல்லையே!

இன்று தமிழ் நாட்டில் சிறந்த விஞ்ஞானிகள் நிறையத் தோன்றாததற்குக் கல்லூரிகளில் அன்னிய மொழி மூலம் கல்வி புகட்டப்படுவதும் ஒரு முக்கியமான காரணம்.

எத்தனை பேர் கல்லூரியில் படித்தும் என்ன பயன், அவர்கள் படிப்பு நாட்டின் அறிவு முன்னேற்றத்துக்குப் பயன்படாவிட்டால்!

விஷயம், மொழி ஆகிய இரு முனைகளிலும் மாணவர் போரிட வேண்டி யிருப்பதைச் சீக்கிரம் நிறுத்த வேண்டும். அப்போதுதான் அவர்கள் உண்மையான கல்வி கற்க முடியும். அப்படிப் பெறும் கல்வியறிவே அவர்களுக்கும், வளர்ந்து வரும் நம் பாரத நாட்டுக்கும் பயன்படும்.

மயிலாப்பூர்
25—2—55

ஸ்ரீநிவாஸன்




பண்டிகை

நாட்களிலும்

மற்றும் எல்லா நாட்களிலும்

# துஷார்

விட்டமின் சேர்ந்த

வனஸ்பதி



துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்நூல்.

துஷார் சுத்திகரித்த எண்ணெயும் கிடைக்கும்

தமிழர்கள், கடிதம் எழுதுவதென்றால், விஷயத்துக்காகத்தான் எழுதுவார்கள். "இவ்விடம் க்ஷேமம். அவ்விடம் க்ஷேமத்துக்குப் பதில் எழுதவும்", "ஊருக்குச் சௌக்கியமாக வந்துசேர்ந்தேன்" "புண்ணுக்கு விலை ஏறிக் கொண்டிருக்கிறது. நெல் விலை எப்படி இருக்கிறது!" என்னும் அரிய விஷயங்களைப் பற்றித்தான் எழுதுவார்கள். வந்த வுடனேயே கடிதத்தைக் கிழித்தெறிந்து விடலாம். 'பைண்ட்' பண்ணிப் பாதுகாக்க வேண்டிய அவசியமே கிடையா.

ஆனால் டி. கே. சி. கடிதங்கள் எல்லாம் கலை அந்தஸ்து பெற்றவை; ஒரே ஹாஸ்யமும், உல்லாசமும் உணர்ச்சியுமா யிருக்கும். படிக்கப் படிக்கத் தெவிட்டாத இலக்கிய ரத்தினங்கள் அவை. டி. கே. சி. கடிதம் எழுதுவதைக் கைக் கொண்ட பின்தான் கடித இலக்கியம் என்று ஒன்று தமிழ் நாட்டில் பிறந்தது.




எஸ். மகாராஜன்

ஒவ்வொரு கடிதமும், நேருக்கு நேர் நின்று பேசும். உடல்நிலை மோசமா யிருப்பது கேட்டு வருந்தி எழுதி யிருந்தேன். அடுத்த தபாலில் கீழ்க்கண்ட பதில் வந்தது:—"என் உடலைப் பற்றித் தாங்கள் மிக்க கவலை கொள்வதாகத் தெரிகிறது. அது வேண்டாம். உடம்பு சரியாகத்தானிருக்கிறது. இன்ஸுலின் (Insulin) இன்ஜெக்ஷன் கிடையாது. மற்ற குத்துகளும் இல்லை. மலை ஏற முடியாது. மரம் ஏற முடியாது. அவ்வளவுதான்."

* * *

நீரிழிவும், காச நோயும் டி. கே. சி. யின் உடலைத் தாக்கி முற்றுகை போட்டன. ஆனால் கடைசி வரையில், அவர்கள் உள்ளத்திலேயுள்ள ஹாஸ்யத்தையும், உல்லாசத்தையும் அவை பாதிக்க முடியவில்லை. வாய்க்கு ருசியான ஆகாரங்களை அவர்கள் தள்ளிக் கொண்டே வந்தார்கள். இப்படியும் கடும் பத்தியம் போடலாமா என்று கேட்டு எழுதி யிருந்தேன். ஆறுதலுக்காக வந்த கடிதம் இது:—"உளுந்துத் தோசை, ருக்மணி அம்மாள் அனுப்பிய கார்த்தங்காய் ஊறுகாய், இட்டலி, தயிர் எல்லாம் சேர்ந்து வாய்க்கு ருசியான ஆகாரம் ஆகிவிடுகிறது. போதும்தானே. மற்றவர்கள் என்னத்தைச் சாப்பிட்டால், நமக்கென்ன! ரஸம், மோர்க் குழம்பு, மாம்பழம், பலாப் பழம் எல்லாவற்றையும் சாப்பிட்டால் சாப்பிடட்டும். அது நம்மைப் பாதிப்பானேன்! எருமை கோரைப் புல்லை, லவக்கு, லவக்கு என்று தின்று குதப்புகிறது. அதைப் பார்த்து, ஐயோ, கோரையைத் தின்ன முடியவில்லையே என்று ஒப்பாரி வைப்பார் உண்டோ! வள்ளுவரும் இந்த அபிப்பிராயம் கொண்டவர்தான்.

"யாதனின் யாதனின்
நீங்கியான் நோதல்
அதனின் அதனின்
இலன்."

டி. கே. சி. தமிழின் எளிமையைப் பார்க்கும் போது, 'அடே, நாம் கூட இப்படி யெல்லாம் வெளுத்து வாங்கி விடலாம்' என்று தோன்றும். ஆனால், உட்கார்ந்து எழுதிப் பார்த்தால், அது நமக்குக் கை வராது என்று தெரியும். எளிய தமிழ் என்றால், வெள்ளைத் தமிழல்ல, மொட்டைத் தமிழும் அல்ல. நமக்கு எட்டாத ஆழத்திலும், தெளிவிலு மிருந்து உருவான எளிமை அது. பரிணாம நெறியை ஒட்டிப் பார்த்தால்தான் எளிமையைப் பற்றி டி. கே. சி. இப்படி யெல்லாம் ஏன் பிரமாதப் படுத்தினார்கள் என்று விளங்கும். இயற்கை அன்னை, விதம் விதமான பிராணிகளை உண்டாக்கி வந்திருக்கிறாள். நானா வட்டத்தில் உருவங்களைச் செய்து செய்து, அவள் கை திருந்திக் கொண்டே வந்திருக்கிறது. பத்து கால், மூன்று கண் உள்ள பிராணிகளை உண்டாக்கினாள். அவைகள் வசதியோடும் புத்தியோடும் வாழ முடிய வில்லை. அவைகளை அழித்துப் புது உருவங்களை உண்டு பண்ணிப் பார்த்தாள். இப்படி எத்தனை, எத்தனையோ திருத்தங்களைச் செய்து, கடைசியாக மனித உருவத்தைக் கண்டு பிடித்தாள். இரண்டே கால் போதும், பத்து கால்கள் வேண்டியதில்லை, இரண்டே கண் போதும், மூன்று கண் வேண்டியதில்லை என்று இயற்கை தேவி கண்டு பிடிப்பதற்கே லக்ஷக்கணக்கான ஆண்டுகள் ஆகி விட்டன. உயிருள்ள வஸ்துகளுக்குள், மனித உருவம் ரொம்ப எளிமை வாய்ந்ததுதான். ஆனால் அந்த எளிமை கை வருவதற்குள் இயற்கை அன்னை எத்தனை பாடுபட்டிருக்கிறாள்!

கலையுலகத்தில் எளிமையேற்பட்ட கதையும், கிட்டத் தட்ட மேற் சொன்ன மாதிரிதான். இந்த உண்மையை யெல்லாம், பரிணாம நெறியை யொட்டி உணர்ந்து அனுபவித்தார்கள் டி. கே. சி. ஆகையால், எந்தத் துறையில் எளிமையைக் கண்டாலும் அதை அபாரமாக அனுபவித்து வந்தார்கள்.

ஒரு நாள் வீட்டுக்கு வந்திருந்தார்கள். முற்றத்திலே மாப்பொடியினால் கோலம் போட்டிருந்தது. அதைப் பார்த்துப் பார்த்து ஒரு மணி நேரம்




ரஸித்துக் கொண்டிருந்தார்கள். எங்கள் குருட்டுக் கண்ணுக்கு, அவர்கள் எடுத்துச் சொன்ன பிறகு தான், கோலத்தின் அழகு தெரிய வந்தது. ஊருக்குப் போன பிறகு, ஒரு கடிதம் எழுதினார்கள் :—

'' இங்கேயும் வீடுகளில் எத்தனையோ கோலங்கள் போடத்தான் செய்கிறார்கள். நூற்றுக்கணக்கான பொட்டுகள் ; நூற்றுக்கணக்கான கோடுகள். எல்லாம் சேர்ந்து ஒரே கசாபுசா. அம்மாள் ரகத்தில் எளிமையும், கருத்தழகும் சேர்ந்து கலையாய் விளங்கும். அந்தக் கலையை உணருவதற்கு மற்றக் கோலங்களையும் பார்க்க வேண்டும். கம்பர் செய்யுளின் எளிமையை அனுபவிப்பதற்கு, கந்த புராணச் செய்யுள்களையும், சீவக சிந்தாமணிச் செய்யுள்களையும் பார்க்க வேண்டும். பாரதியும், தேசிக விநாயகம் பிள்ளையும் கவிஞர் ஆனதால் எளிமையைக் கையாண்டிருக்கிறார்கள். விஷயத்தை இப்படிச் சொல்லுவதை விட்டு விட்டு, எல்லாருக்கும் விளங்குவதற்காக லேசாய் எழுதியிருக்கிறார்கள் என்று மாறுய்ச் சொல்லுகிறார்கள். கவிஞர்கள், தங்களுக்கே விளங்க வேண்டும் அல்லவா, அதற்காக எளிமையைக் கையாளுகிறார்கள் என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும்.

''பூண்டுகள்கூட காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக எளிமையைக் கையாண்டிருக்கின்றன.

''எட்டுத் திசையிலிருந்தும், பதினாறு கோணத்திலிருந்தும் மகரந்தத் தூள்களை வண்டுகள் கொண்டு வர வேண்டும். அதற்காகப் பதினாறு இதழ்களையா விரிக்கிறது ? ஐந்து இதழ் போதும் என்றுதானே வைத்துக் கொண்டது. Radial symmetry ஐந்து பட்டங்களால் ஆய் விடுகிறது. பல அடுக்குப் பூக்கள் எல்லாம் கஷ்டப்படுகிற பூக்கள்தான். கோலத்தை எளிமையுடன் போடவில்லை அவைகள்.''

இப்படியாக, கோலத்திலிருந்து கவிதைக்கும், கவிதையிலிருந்து சிருஷ்டி தத்துவத்துக்குமே டி. கே. ஸி. யின் எளிமைக் கடிதங்கள் நம்மை இழுத்துச் சென்று விடுகின்றன; சில்லறை விஷயங்களைப் பற்றிக் கடிதம் விளக்கிக் கொண்டிருக்கும் போதே, அரிய உண்மைகள் எல்லாம், அந்த ஒளியிலே, தெளிவாகி விடும்; விஞ்ஞானம், சமயம், கடவுட் தத்துவம், — எல்லாவற்றைப் பற்றியுமே, மத்தாப்பூ போட்டுவிடும் அந்தக் கடிதங்கள்.

பேரறிஞர்கள் பலரைப் பார்த்திருக்கிறோம். அரசியல், பொருளாதாரம், சமூக இயல், விஞ்ஞானம், இலக்கியம், சங்கீதம், கலை, சமயம் — ஆகிய ஒவ்வொரு துறையிலும் அவர்கள் ஒரு முடிவு கட்டி வைத்திருப்பார்கள். ஆனால், அவர்களுக்கெல்லாம், ஒரு துறையில் ஒரு கொள்கையிருக்கும், மற்றொரு துறையில் மற்றொரு கொள்கையிருக்கும். இந்தக் கொள்கைகளுக்கிடையே அடிப்படையான ஒற்றுமையிருக்காது ; பெரும்பாலும் முரண்பாடுதான். ஆனால் ரஸிகமணி காரியம் அப்படியல்ல. எந்தத் துறையினாலும் சரி, அடிப்படையான ஒரே கோணத்திலிருந்துதான் விஷயங்களைக் கண்டு முடிவு கட்டுவார்கள். கிளைகள் எத்தனையாயிருந்தால்தான் என்ன, ஒரே கொப்பிலிருந்து முளைத்தெழுந்த கிளைகள்தான்.

தென்காசியிலிருந்து ரயிலிலே சென்னைக்குப் போய்க் கொண்டிருந்தார்கள் டி. கே. ஸி., ரயிலடியிலாவது சந்திக்கலாம் என்று போயிருந்தோம். சந்தித்து இரண்டு வார்த்தை பேசுவதற்குள், ஸ்ரீவில்லிப்புத்தூர் ஸ்டேஷனை விட்டு ரயில் நகர்ந்து விட்டது. ஒரே ஏமாற்றம்! சென்னையிலிருந்து வந்த டி. கே. ஸி. யின் கடிதம், கீழ்க் கண்டவாறு ஏமாற்றத்தைத் தெரிவிக்கிறது :—'' எவ்வளவோ ஆத்திரத்தோடு, தாங்கள் வந்தீர்கள், ஓடியே வந்தீர்கள். ஆனால், ரயிலும், கால தேவதையும் ரொம்பக் கேலி பண்ணி விட்டன. இரண்டு வார்த்தை பேசுவதற்குள் வாய்க் குருவியை (Whistle) ஊதிவிட்டான்......வெறும் இருட்டிலிருந்து இந்த உலகத்துக்கு வருகிறோம். கண்ணைத் துடைக்கவே, பத்திருபது வருஷம் (சிசிஷந்தான்) ஆகிறது. அதைக் கொஞ்சம் பார்க்கிறோம், இதைக் கொஞ்சம் பார்க்கிறோம். ஏதோ குருடன் தடவிப் பார்க்கிற கணக்குத்தான். ஆனால் ஒன்று தெரிகிறது, எவ்வளவோ பார்க்கவேண்டியிருக்கிறதே, எவ்வளவோ அறிய வேண்டியிருக்கிறதே என்பதாக. கற்றதும் ஒன்றும் இல்லையே என்ற திகைப்பும் ஏற்படுகிறது. அப்போது உலக — ஓட்டி, சங்கை ஊதி விடுகிறான். அடாடா, உலகத்தோடு ஒன்றும் பேச வில்லையே என்று தோன்றுகிறது.''



இருபது வருஷங்கள் டி. கே. ஸி. யோடு பழகிய பிறகு, இன்னும் எவ்வளவோ அவர்களிடம் அறிய வேண்டியிருக்கிறதே என்று பட்டது. அதற்குள்ளாக, உலக ஓட்டி சங்கை ஊதி விட்டான். டி. கே. ஸி. தத்துவம் மறைந்து விட்டது. திகைப்புத்தான் மிஞ்சுகிறது !

# ஆரோக்கிய வாழ்வு

ஸ்ரீலக்ஷ்மி குமாரசாமி

## 9. விபரீதகரணியின் பலன்

பூமியின் ஆகர்ஷண சக்தியை எல்லோரும் அறிவார்கள். எந்தப் பொருளையும் தன்னிடம் இழுத்துக் கொள்ளும் சக்தியுடையது, பூமி. ஒரு பொருளை நாம் மேலே ஆகாயத்தில் வீசி எறிந்தால், அது அப்படியே ஆகாயத்திலே பறந்து விடுவதில்லை. அங்கேயே தங்கியும் விடுவதில்லை. நாம் எறிந்த பலம், விசையை அனுசரித்து ஆகாயத்தில் சிறிது தூரம் செல்லும். அப்படிச் செல்லுவதற்கு நமது வேகம் அவசியமாகிறது. அந்த வேகத்தினால் பூமியின் ஆகர்ஷண சக்தியையும் எதிர்த்துக் கொண்டு போகிறது. வேகம் தணிந்ததும், பூமியின் இழுக்கும் தன்மையினால் அது கீழே வந்து விழுந்து விடுகிறது.

இந்த இயற்கைச் சக்தியை நமது யோகிகள் அறிந்து இந்த விபரீதகரணி ஆசனத்தைச் சிருஷ்டித்திருக்கிறார்கள். இந்த விஞ்ஞானம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தெரிந்து இயற்கையை ஒட்டி அதனையே அடிமையாகக் கொண்டு பயன்படுத்திச் சுகத்துக்கு அடிகோலி யிருக்கிறார்கள். இன்று பூமியின் ஆகர்ஷண சக்தியைப் பற்றி வானளாவப் பேசுகிறோம். அன்றே நமது யோகிகள் இதனை உணர்ந்திருக்கிறார்கள்.

ஆஸ்துமாக்காரர்களுக்கு வேண்டியது இரத்த வேகம். அதுவும் மூச்சு பாகங்களுக்கு நிறையப் பாய வேண்டியது; அவ்வளவுதான். அதற்காகத்தான் பிட்யூடரின் ஊசியையும் அட்ரினேல் ஊசியையும் போடுகிறார்கள். இந்த விபரீதகரணி ஆசனம் செய்யும்போது மேற்சொன்ன இரண்டையும் இயற்கையே விபரீதகரணி ஆசனத்தில் செய்து விடுகிறது.

நமது இருதயம் இருக்கும் இடம் எல்லோரும் தெரிந்ததே. அது நமது மார்பில் சிறிது இடது பக்கமாகத் தள்ளி, இரண்டு நுரையீரல்களுக்கும் நடுவில் இருக்கிறது. அது இரத்தத்தை அடித்துத் தள்ளும் வேகத்தினால்தான் உடலின் எல்லா பாகங்களுக்கும் இரத்தம் கிடைக்கிறது. இயற்கையின் அற்புத சிருஷ்டியே சிருஷ்டி. இந்த இருதயத்தை வயிற்றில் வைக்கக் கூடாதா அல்லது உடலின் வேறெங்காவது வைக்கக் கூடாதா! எங்கிருந்தாலும் என்ன! இரத்தத்தை அடித்துத்தான் துரத்துகிறதே. அது எல்லா பாகங்களுக்கும் போகுமே! ஆனால் இயற்கை மிக யோசனையுடன் சௌகரியமான இடத்தில் வைத்திருக்கிறது. கால்களிலிருந்து அளந்தால் அவரவர்களின் அளவுக்கு முக்கால் பாகத்துக்குச் சற்றேறக் குறைய வரும் உயரத்தில் இருதயம் இருக்கிறது. அதற்குக் கவசங்கள் போல் நுரை ஈரலும், மார் பெலும்புக் கூடுகளும் அமைந்திருக்கின்றன.

நமது உடலில் ஓடி அசுத்தப்பட்டு வரும் இரத்தம் மறுபடியும் நுரை ஈரலுக்கு இருதயம் அனுப்புகிறது. அங்கு பொடியான காற்றுக் குழாய்களின் முடிவில் இருக்கும் எண்ணிறந்த காற்றுப் பைகளைச் சுற்றி இந்த அசுத்த இரத்தம் செல்லுகிறது. அங்கு நாம் ஒரு மூச்சை வாங்கி விடுவதற்குள் ஒரு பெரிய பண்டமாற்று வியாபாரம் போல் நடக்கிறது. நாம் மூச்சாகக் கொண்ட பிராண வாயு இந்தக் காற்று அறைக்குள் சென்றதும் ஒரு சில விநாடிகளுக்குள் அந்தப் பிராணவாயுவை இரத்தத்தில் சேர்ப்பிக்கப்பட்டு, அசுத்த ரத்தத்திலுள்ள கரியமிலவாயு இந்தக் காற்றுப் பைகளுக்கு மாற்றப்படுகிறது. இரத்தம் பிராண வாயுவினால் சுத்தமாகி மறுபடியும் இருதயத்துக்குச் சென்று உடல் முழுதும் பாய்கிறது. காற்றுப் பையில் விடப்பட்ட கரியமிலவாயு பொடி சுவாசக் குழாய்களிலிருந்து, இன்னும் சுவாசக் குழாய்களுக்கு வந்து, பின் பெரிய காற்றுக் குழாயின் வழியாக மூச்சாக வெளியேறுகிறது. நாம் விடும் ஒவ்வொரு மூச்சுக்கும் இம்மாதிரி கரியமிலவாயு வெளியேற்றலும் நாம் இழுக்கும் ஒவ்வொரு மூச்சுக்கும் பிராண வாயு இரத்தத்துடன் கலக்கலும் நடக்கின்றன.

இத்தனையும் நடத்தச் சௌகரியமாய் இருக்கும் பொருட்டே நுரை ஈரல்களுக்கு மத்தியில் இருதயம் பத்திரமாய் வைக்கப்பட்டிருக்கிறது.

உடலில் சுமார் முக்கால் பாகத்துக்கு மேல் இருக்கும் இருதயத்திலிருந்து வரக்கூடிய இரத்தம் பூமியின் ஆகர்ஷண சக்தியால் அதன் கீழ் பாகத்துக்கு அதிகம் வரவேண்டியது இயற்கை. மேல் பாகங்களாகிய நுரையீரல், கழுத்து, கைகள், தலை இவைகளுக்குப் போகப் பூமியின் ஆகர்ஷண சக்தி சம்மதிக்காது. ஆயினும் இந்தப் பாகங்களுக்கு இரத்தம் சென்று கொண்டுதான் இருக்கிறது. காரணம் இரத்தாசயம் அடித்து அனுப்பும் வேகத்தினால், முடிகிறது. நாம் எப்படி நமது வேகத்தினால் ஒரு பொருளை ஆகாயத்தில் சிறிது தூரம் வரை செல்லும்படிக்கு வீசி யெறிந்தோமோ, அப்படியே இரத்தாசயத்தின் துடிப்பின் வேகத்தினால் இந்தப் பாகங்களுக்கெல்லாம் இரத்தம் செல்லுகிறது. அதனால்தான் இவ்வளவு உயரமாகத் தலைக்குக்கீழே மார்பில் இரத்தாசயம் இருக்கிறது. வேறெங்காவது இருந்தால் இரத்தம் அவ்வளவு உயரத்துக்குப் போகாது.

அப்படி ஆகர்ஷண சக்தியையும் எதிர்த்து நுரையீரல்களுக்கும் தலைக்கும் இரத்தம் போவதை முதலில் இந்த விபரீதகரணி ஆசனம் சுலபமாக்குகிறது. இதன் இருக்கை நிலையைக் கவனித்தால் தெரியும். கீழ் இருந்த முக்கால் பாகம் இப்பொழுது மேல் பக்கம் இருக்கிறது. தலை, புஜம், மார்பு கீழே இருக்கின்றன. இப்பொழுது மார்பு பாகத்துக்கு இயற்கையாய் அதிக இரத்தம் வந்தாயிற்று. இயற்கை ஆகர்ஷண சக்தி உதவியினால் நுரையீரல்கள் நன்கு குளிப்பாட்டினதைப் போல் இரத்த போஷணை அடைகிறது. ஆனால் இந்த அதிக ரத்தம் மட்டும் ஆஸ்துமாக்காரர்களுக்குப் போதாது. இரத்த வேகமும் அதிகமாக வேண்டும். அப்பொழுதுதான் ஆஸ்துமாக்காரர்களின் காற்றுக் குழாய்களின் அடைப்பு நீங்கும்.

விபரீத கரணியின் விளக்கப் படங்களையும் மேலும் அது சம்பந்தமான நலன்களையும் அடுத்த இதழில் பார்க்கலாம். (தொடரும்)

## 42. கிராமம் அழைக்கிறது!

விஜயலக்ஷ்மி, விடாமல் தன் கேள்வியைத் திருப்பித் திருப்பிக் கேட்கவே, கோகிலாவின் மனம் நைந்து விட்டது. திருப்பித் திருப்பி அவளை அதே கேள்வியைக் கேட்க வைத்து வேடிக்கை பார்ப்பதில் என்ன பிரயோஜனம் என்று எண்ணி, "கேட்கிறேன், கேட்கிறேன்; நீ சொல்வதைக் கேட்கிறேன். போதுமா?" என்றாள்.

"அப்படி வா, வழிக்கு!" என்று சொன்ன விஜயலக்ஷ்மி, "இந்தா! இதை உன்னிடம் வைத்துக் கொள். இது என்னுடைய அன்பளிப்பு!" என்று சொல்லிக் கோகிலாவின் கையில் ஒரு மணிபர்ஸைக் கொடுத்தாள்.

அதைப் பார்த்த கோகிலா, "நான் அயல் நாட்டுப் பொருள்களை உபயோகிப்பதில்லையே!" என்று தன் ஆட்சேபணையைத் தெரிவித்தாள்.

"பேஷ், பேஷ்! தேவலையே, உன்கொள்கை! நாளைக்கு உன் கணவர் அயல் நாட்டுக்குப் போய் அங்கே தங்கியிருந்து விட்டு வருகிறார் என்று வைத்துக் கொள். அயல் நாட்டிலிருந்து வந்தவர் என்பதற்காக அவரை வேண்டாம் என்று சொல்லி வெறுத்து விடுவாயா? நீ பேசுவதைப் பார்த்தால் அப்படியும் செய்து விடுவாய் போலிருக்கிறதே! அன்பளிப்பில் அயல் நாட்டுப் பொருள் என்ன, உள் நாட்டுப் பொருள் என்ன?" என்று விஜயலக்ஷ்மி ஒரு விசித்திர வாதத்தைக் கிளப்பினாள்.




கோகிலாவுக்கு அந்த வாதம் சரியென்றே பட்டது. அவளுக்குச் சரியென்று பட்டுவிட்ட பின், ஏன் பட்டது, எப்படிப் பட்டது என்ற கேள்விகளுக்கெல்லாம் இடம் ஏது? அதோடு விஜயலக்ஷ்மியின் சொல்லைக் கேட்பதாக முன்பே வேறு வாக்களித்து விட்டாள்! அப்புறம் அதிகம் ஆட்சேபணை சொன்னால் நன்றாயிருக்குமா? எனவே, பதில் பேசாமல் அவள் அளித்த அன்பளிப்பை ஏற்றுக் கொண்டாள். அநேக ஆண்டுகளுக்குப் பின் அவள் அன்றுதான் முதல் தடவையாக அயல் நாட்டுப் பொருளை ஏற்றுக் கொண்டாள்.

"இன்னொரு விஷயம், கோகிலா! கீழே வண்டி தயாராக நிற்கிறது. அதில்தான் நீ போக வேண்டும். என்ன, புரிந்ததா?" என்று சொல்லிக் கோகிலாவுடன் கூடவே கீழே இறங்கி வந்தாள் விஜயலக்ஷ்மி. பிறகு வேலைக்காரனைக் கூப்பிட்டு வண்டியைப் பூட்டச் சொல்லி அதில் எல்லோரையும் உட்கார வைத்தாள். பிறகு வத்ஸராஜைக் கூப்பிட்டு அவன் விலாசம் முதலியவற்றைக் கேட்டுத் தெரிந்து கொண்டாள்.

வத்ஸராஜின் கிராமத்துக்குப் போவதற்கு இரண்டு வழிகள் இருந்தன. ஒன்று ரெயில் மார்க்கம்; மற்றொன்று ஆற்று மார்க்கம். ரெயில் வந்துவிடவே, ஆற்று வழியாகப் போவது அதிகப் பழக்கத்தில் இல்லாமற் போய் விட்டது. அதற்காக ஒரேயடியாக அவ் வழி அடைத்துப் போய் விட்டது என்றும் சொல்லி விடுவதற்கில்லை. ஆடிக்கொரு தடவை, ஆவணிக்கொரு தடவை என்று யாராவது அவ்வழியே போய்க் கொண்டுதான் இருந்தார்கள். அந்த வழியே போவதில் ஒரு சௌகரியம் இருந்தது. அதாவது, அந்தக் கிராமத்திலேயே போய் இறங்கி விடலாம். ரெயில் மார்க்கம் கொஞ்சம் சுற்றுனதாக இருந்த பொழுதிலும், ஆற்று மார்க்கத்தைக் காட்டிலும் சீக்கிரமாக ஊருக்குப் போய் விட முடியும். அதோடு ஆற்று மார்க்கமாகப் போனால் பூபதாஜியைக் காண நேரிட்டாலும் நேரிடலாம். அது ராதாவுக்கும் பிடிக்கவில்லை; வத்ஸராஜுக்கும் உசிதமாகப் படவில்லை. எனவே, கிராமத்துக்கும் ரெயில்வே ஸ்டேஷனுக்கும் ஐந்தாறு மைல் தூரம் இருந்த பொழுதிலும் ரெயில் வழியாகப் போவதே நல்லது என்று தீர்மானித்தார்கள் அந்தத் தம்பதிகள்.

விஜயலக்ஷ்மியின் வண்டியில் ஏறி ஸ்டேஷனை அடைந்தவர்கள் மூன்றாவது வகுப்பு டிக்கட் வாங்கிக் கொண்டு சௌகரியமான இடமாகப் பார்த்து ரெயிலில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள்.

உத்தியோகத்தை விட்ட பின்னர் ஜகதீஷ் மூன்றாம் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்யும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தான். அதனால் நாகரிகம் தோய்ந்தவர்கள் இழிவாக நினைக்கும் மூன்றாம் வகுப்பில் உட்காரக் கோகிலாவுக்குச் சிறிதும் மனக்கிலேசம் உண்டாகவில்லை.

ரெயில் புறப்படுவதற்கான மணி அடித்தது. ரமேஷ் பறக்கப் பறக்க ஓடி வந்தான்.




ஒவ்வொரு பெட்டியாகப் பார்த்துக் கொண்டு வந்தவன் கோகிலா உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் சட்டென்று தாவி அந்தப் பெட்டியில் தொத்திக் கொண்டான். அப்பொழுது வண்டி நகரத் தொடங்கியிருந்தது. ரமேஷ் பெட்டியில் ஏறும் படியில் கால் வைத்து உள்ளே நுழைய முயன்று கொண்டிருந்தான். அதே சமயம் டிக்கட் பரிசோதகர் ஓடி வந்து அவன் கையைப் பற்றி, "ஏன், ஐயா! வண்டி புறப்பட்டு விட்டது, தெரியவில்லை? இறங்கு ஐயா, கீழே!" என்று அதட்டினார்.

"எல்லாம் தெரியும், ஐயா! சும்மா இருங்கள்!" என்று ரமேஷ் அடக்கமாகப் பதில் அளித்தான்.

"டிக்கட் வைத்திருக்கிறாயா?"

"இல்லை!"

"இல்லையா?"

"டிக்கட் வாங்காமற் போனால் தண்டிப்பார்கள்!"

"தெரிந்த விஷயம்தான். அதற்காகத் தலையை இறக்கிவிட மாட்டார்களே?" என்று கேட்டவாறே பரிசோதகரது கையை உதறிக் கொண்டு ரமேஷ் வண்டிக்குள் போய் உட்கார்ந்து விட்டான்.

மெதுவாக நகர்ந்து கொண்டிருந்த வண்டி வேகம் பிடிக்கத் தொடங்கி விட்டது. பரிசோதகரும் பேசாமல் முணுமுணுத்த வண்ணம் திரும்பி விட்டார்.

கோகிலாவுக்கெதிரே யிருந்த ஆசனத்தில் போய் ரமேஷ் இடம் செய்து கொண்டு உட்கார்ந்தான். அவனைப் பார்த்த கோகிலா, "அட, ரமேஷா! எங்கே போகிறாப்போலே?" என்று கேட்டாள்.

"அண்ணியா? நீங்கள் கேட்ட கேள்வியைத்தான் நானும் கேட்கணும்! நீங்கள் எங்கே புறப்பட்டீர்கள்? என்னிடம் சொல்லவே இல்லையே! திடுதிப்பென்று எந்த ஊருக்கு அவசரப் பயணமோ?" என்று கேள்விக்குமேல் கேள்வியை அடுக்கினான் ரமேஷ்.

"கேட்கிற கேள்வியைக் கொஞ்சம் மெதுவாகக் கேட்கலாமே? இதற்காக இப்படிப் படபடவென்று பொரிந்து தள்ள வேண்டும்? என்மேல் ஏதாவது கோபமா?" என்றாள் கோகிலா.

"நல்ல வேளையாக வண்டி கிடைத்தது! இல்லாவிட்டால் நான் உங்களை எங்கே என்று தேடுவது?—ஆமாம், முதலில் நான் கேட்பதற்குப் பதில் சொல்லுங்கள். இப்பொழுது நீங்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டான் ரமேஷ்.

"இவர்களோடு போய்க் கொண்டிருக்கிறேன்!" என்று சொன்ன கோகிலா பக்கத்திலிருந்த ராதாவைச் சுட்டிக் காட்டினாள். அந்தப் பெட்டியில் அவர்களைத் தவிர அதிகமாக ஜனங்கள் யாரும் இல்லை. வண்டி போய்க் கொண்டிருந்த வேகத்திலும் சப்தத்திலும், இருந்த இரண்டொருவர் காதில் கூட அவர்கள் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்பது விழுந்திருக்காது.

"ரமேஷ் செத்தொழிந்து விட்டான் என்பதுதானே உங்கள் எண்ணம்?"

தன்னிடம் சொல்லாமல் கொள்ளாமல் கோகிலா கிராமத்துக்குப் புறப்பட்டதை ரமேஷ் மிகவும் தவருக எடுத்துக் கொண்டு விட்டான் என்பது அவன் பேச்சிலிருந்து தெளிவாகத் தெரிந்தது.

"சிவ, சிவா! இப்படியெல்லாம் ஒருவர் பேசலாமா? எங்கள் ரமேஷ் என்றென்றும் மார்க்கண்டேய மகரிஷியாக இருக்க வேண்டும்!" என்று வாழ்த்தினுள் கோகிலா.

"அண்ணி! இம்மாதிரி இனிக்க இனிக்கப் பேசி மனுஷ்யன் உயிரை வைத்து உயிரை எடுப்பானேன்? இதுதான் எனக்குப் புரியவில்லை. உங்கள் ரமேஷைப் பற்றி இப்படிப் பிரமாதமாகப் புகழ்கிறீர்களே தவிர, உண்மையைக் கேட்கப் போனல், அவன் உயிர் வாழ்ந்தால் என்ன, வாழா விட்டால் என்ன என்று நீங்கள் எண்ணுவதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. அப்படி யில்லாவிட்டால் அவனிடம் சொல்லாமல் இப்படிப் புறப்பட்டிருப்பீர்களா? நிஜமாகவே ரமேஷை வேண்டியவன் என்று நினைத்திருந்தால் இம்மாதிரி யெல்லாம் செய்வீர்களா? அவன் என்னடா வென்றால் திருட்டுப் பட்டத்தைத் தன் தலையில் கட்டிக் கொண்டு எங்கேயோ தலைமறைவாய்ப் போய் விட்டான். இங்கே நீங்கள் மாயமாய் மறைந்துவிட மகத்தான திட்டம் போட்டுக் கொண்டு புறப்பட்டிருக்கிறீர்கள். உங்கள் இருவரையும் தேடிக் கண்டு பிடிக்க நான் இந்த உலகத்தைச் சல்லடை போட்டுச் சலிக்கவேண்டியிருக்கிறது. என் தலையெழுத்து அப்படி! நான் இந்த வேளையில் இங்கே வராமல் இருந்தால் அப்புறம் உங்களைப் பார்ப்பது ஏது?" என்று ரமேஷ் மிகவும் அங்கலாய்த்தான்.

"அதிருக்கட்டும். உங்களுக்குத் திருட்டைப் பற்றித் தெரியுமா? ஏதாவது தடயம் கிடயம் கிடைத்திருக்கிறதாமா?" என்று அவன் அங்கலாய்ப்புக்கு அப்படியே முற்றுப் புள்ளி வைத்து விட்டுக் கேட்டாள் கோகிலா.

"அதை ஏன் கேட்கிறீர்கள்? நினைத்துப் பார்த்தாலே தலையைச் சுற்றுகிறது! அப்பப்பா! என்ன மாயமோ! என்ன மந்திரமோ! ஜகதீஷ் என்ன செய்திருப்பானே. யார் கண்டார்கள்? வேறு யாராவது திருடி, இவன் தன் தலையில் குற்றத்தைத் தூக்கிப் போட்டுக் கொண்டிருந்தாலும் இருக்கலாம். என்னைக் கேட்டால் எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது. நேற்று இரவு முழுவதும் அவனைத் தேடிக் கண்டு பிடிக்கத்தான் பாடாய்ப் பட்டுக் கொண்டிருந்தேன். குறிப்பாக இரண்டு மூன்று இடங்களில் அவன் இருக்கலாம் என்று எண்ணிப் போலீஸாருடனேயே சுற்றினேன். அவன் எங்கேயாவது பிடிபட்டு, அவனுக்கு ஜாமீன் கொடுக்கும் படிநேரிட்டால் என்ன செய்வது? அல்லது அவனுக்கு வேறு ஏதாவது யோசனை தேவை இருந்தால் என்ன ஆவது? அவனுக்குக் கை கொடுத்து உதவ யார் இருக்கிறார்கள் என்று எண்ணித்தான் இரவு முழுதும் அவனுக்காகச் சுற்றினேன். ஆனல் ஆள் அகப்படவில்லை. அதனல்தான் நேற்றிரவே உங்களை வந்து பார்க்க முடியவில்லை. காலையில் சீக்கிரமாக எழுந்து உங்களைப் பார்ப்பதற்கு உங்கள் வீட்டுக்கு வந்தால், நீங்கள் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுப் போய் விட்டதாகத் தெரிந்தது. உடனே உங்களைப் பிடித்து விடுவதென்று பின்னலேயே ஓடி வந்திருக்கிறேன். அடுத்த ஸ்டேஷனில் வண்டியிலிருந்து இறங்கி விடுங்கள். நாம் திரும்பிப் போவோம். நான் ஒருவன் இருக்கும் பொழுது நீங்கள் இம்மாதிரி புறப்பட்டு வரலாமா?" என்று ரமேஷ் விட்ட விஷயத்தையே மீண்டும் தொடர்ந்தான்.

கோகிலா அதற்குச் சம்மதிக்க மறுத்தாள். என்ன என்னவோ சாக்குப் போக்குச் சொன்னுள். அவ்வளவுக்கும் அவன் சமாதானம் சொல்லித் தன்னுடன் திரும்பித்தான் வந்தாக வேண்டும் என்று வற்புறுத்தினுன்.

"செலவுக்கு எவ்விதமான சிரமமும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுகிறேன். வேறு வீடு வாடகைக்கு அமர்த்தித் தருகிறேன். இல்லா விட்டால் என் வீட்டிலேயே செளகரியமாகத் தங்குவதற்கு ஏற்பாடு செய்து தருகிறேன். அடிக்கடி வந்து விசாரித்துக் கொள்வதற்கும் ஜகதீஷ் சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பதற்கும் நீங்கள் நகரத்திலேயே இருக்



"இலக்கிய நண்பர்கள்" :—இலக்கியத்தின் மூலம் இணைந்த நண்பர்கள், இலட்சிய நண்பர்களாகவே விளங்கினார்கள். நட்புக்கே இலக்கியம் என்று சொல்லும்படி இருந்தது அந்த உறவு.

---

தால்தான் சௌகரியமாயிருக்கும்!" என்று ரமேஷ் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். நண்பன் என்ற முறையில் ஜகதீஷுக்குத் தான் செய்யக் கடமைப் பட்டிருப்பவன் என்பதையும் எடுத்துக் கூறினான்.

அவன் என்ன சொல்லியும் கோகிலா நகரத்துக்குத் திரும்பி வர முடியாது என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டாள். நாகரிகம் நிறைந்த குடும்பத்தார்களைக் காட்டிலும் அவளுக்குக் குற்றவாளிகளின் சகவாசம் எத்தனையோ மேலானதாகப் பட்டது; பிடிக்கவும் பிடித்திருந்தது. ரமேஷ் என்ன சொல்லி என்ன? அவளுக்கு அப்படிச் செய்வது பிறரை அண்டிப் பிழைப்பதாகவே பட்டது. பிறர் தன் மேல் இரக்கம் காட்ட வேண்டும் என்பதை அவள் விரும்ப வில்லை.

ரமேஷின் வற்புறுத்தலோ விஜயலக்ஷ்மியின் வற்புறுத்தலோ பொதுவில் மேலெழுந்தவாரியாகப் பார்க்கப் போனால் உண்மையாகத் தோன்றியது; நியாயமானதாகத் தோன்றியது. அதோடு அதிசயமாகவும் தோன்றியது. ஆனால் வேறு எந்த உள் அர்த்தமும் கொண்டதாகத் தோன்றவில்லை. இருந்தாலும் சிறையிலிருந்து விடுபட்டு வந்த குற்றவாளியின் மனைவியோடு வாசம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவள் மனத்தை ஏனோ ஆக்கிரமித்திருந்தது. அதனால் அவளும் எத்தனையோ சாக்குப் போக்குகள் சொன்னாள். சிறிது காலத்துக்குத்தான் ஊர் மாற்றத்தை விரும்புவதாகவும் சீதோஷ்ண ஸ்திதி மாறினால் தான், புண்பட்ட தன் உள்ளத்துக்கு அமைதி கிடைக்கக் கூடும் என்றும் சொல்லி ரமேஷின் விருப்பத்துக்கும் வற்புறுத்தலுக்கும் இணங்க மறுத்தாள்.

கடைசியில் ரமேஷ் தன் எண்ணம் ஈடேறாது என்று எண்ணி, என்ன வற்புறுத்தினாலும் அவள் கேட்க மாட்டாள் என்று தீர்மானித்து நம்பிக்கை யிழந்தவனாய், அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றதும் இறங்கினான்.

"கொஞ்ச காலத்தில் நிலபுலன்களைக் கவனித்து ஏற்பாடு செய்வதற்காக நான் அந்தப் பக்கம் வந்தாலும் வருவேன். அப்பொழுது உங்களைப் பார்க்க அங்கே வருகிறேன்!" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டான். அப்பொழுது பிறர் யாரும் பார்க்காமல் இருக்கும் சமயமாகப் பார்த்துக் கொஞ்சம் ரூபாய்களை எடுத்து அவளுடைய செலவுக்காகக் கொடுக்கப் போனான். ஆனால் கோகிலா அதை வாங்கிக்கொள்ள வில்லை.

அதனால் அவன் முகம் தொங்கி விட்டது. "அன்று அவர் உங்களிடம் என்ன சொன்னார்?" என்று கேட்டாள் கோகிலா.

"என்ன சொன்னான் என்று யார் கண்டார்கள்? இப்பொழுது அதெல்லாம் யாருக்கு நினைவிருக்கிறது? என்ன சொல்லியிருந்தாலும் அதையெல்லாம் மறந்து விட்டு இந்த ஏழையின் சொல்லைக் கேளுங்கள். இந்தப் பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள். தேவைப்பட்டால் செலவழியுங்கள். இல்லாவிட்டால்......!" என்றான் ரமேஷ்.

"உங்களை நாங்கள் எங்களுடைய கடைசிச் சாதனமாகப் பயன்படுத்திக் கொள்வதாகத் தான் வைத்துக் கொண்டிருக்கிறோம்!"

"அப்படியானால் அத்தகைய சந்தர்ப்பம் இன்னும் வரவில்லை என்கிறீர்கள். அப்படித்தானே?" என்றான் ரமேஷ்.

"நீங்கள் முதலில் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். அப்புறம் நாங்கள் உங்கள் வீட்டை விட்டு நகர மாட்டோம்!"

"இப்பொழுது அந்தப் பொய்ச் சாக்கெல்லாம் எதற்கு?"

"நான் சொல்வதில் பொய் ஒன்றுமே இல்லை. உண்மையைத்தான் சொல்கிறேன். இப்பொழுது காசைக் கரியாக்காமல் சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள். கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் வைத்த பிறகு மிகுந்திருப்பதை எங்களுக்குக் கொடுத்து விடுங்கள்!" என்றாள் கோகிலா.

அவனை அதிகமாக வற்புறுத்துவதில் பிரயோஜனமில்லை என்று ரமேஷுக்குப்பட்டது. அவன் வற்புறுத்த நினைத்தாலும் அதற்கு இடம் கொடாமல் வண்டி புறப்பட்டு விட்டது. எனவே, கோகிலாவுக்குக் கைகூப்பி வணக்கம் தெரிவித்து விடைபெற்றுக் கொண்டான் ரமேஷ். (தொடரும்)




"அருணா! என் உடல் எல்லாம் சோர்ந்திருக்கிறது. எனக்கு ஏற்பட்டுள்ள களைப்பைச் சொல்லி முடியாது" என்றார் பேராசிரியர்.

"ஓய்ச்சல் ஒழிவின்றி நீங்கள் மிகவும் கஷ்டப்பட்டு உழைக்கிறீர்கள். உடல் சோர்வடையாமல் என்ன செய்யும்!"

அருணாவின் இந்தப் பதிலில் குரு பக்தியும் அன்பும் ஆதரவும் ததும்பின.

"உன்னைப் பார்த்தாலும் களைப்படைந்திருப்பவள் போல்தான் தோன்றுகிறது" என்று பரிவுடன் கூறினார் ஆசிரியர்.

"என் களைப்பு கிடக்கட்டும்" என்றாள் அருணா. அவள் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது.

அருணா ஏராளமான செல்வம் படைத்த குடும்பத்தில் பிறந்தவள். அவள் குழந்தைப் பருவத்திலிருந்தே சங்கீதம், நடனம், ஓவியம் முதலியவற்றில் பயிற்சி பெற்று, எல்லோருடைய பாராட்டுதலுக்கும் உரியவளாகிப் புகழுடன் விளங்கினாள்.

அருணாவுக்கு அப்போது இருபது வயதுதான். அப்படியிருந்தும் பிரபல சங்கீத வித்துவான்கள் கூட அவளது சங்கீத ஞானத்தையும் சாரீர இனிமையையும் வெகுவாகப் புகழ்ந்தார்கள்.

அதனால் அருணா சங்கீதப் பயிற்சி பெற்ற குமுத சங்கீதக் கல்லூரியின் தலைமைப் பேராசிரியர் குமுதனும் அவள் மீது பேரபிமானம் கொண்டிருந்தார். பிரபல சங்கீத வித்துவானும் பேராசிரியருமான குமுதனின் அன்புக்கும் அபிமானத்துக்கும் தான் பாத்திரமாகி விருப்பதைக் குறித்து அருணா ஆனந்தமடைந்தாள்.

பேராசிரியர் குமுதனும் அருணாவும் சங்கீதக் கச்சேரியில் கலந்து கொள்கிறார்கள் எனில் அன்று கூட்டம் தாங்க முடியாது.

அன்று நடந்த கச்சேரியில் அவர்கள் வெற்றியின் சிகரத்தையே எட்டி விட்டார்கள் என்று சொல்ல வேண்டும். அவர்களைப் பாராட்டி ஜனங்கள்செய்த கரகோஷமும் சந்தோஷ ஆரவாரமும் பிரமாதமாக இருந்தன.

அருணா அன்று பாடிச் சபையோரைப் பரவசம் அடையும்படி செய்தாள். அவள் வீணை வாசித்த போதும் நாட்டியம் ஆடிய போதும்ஜனங்கள், "இவள் சகலகலா வல்லியான கந்தர்வப் பெண்ணே!" என்று அதிசயித்தனர்.

பேராசிரியர் குமுதனும் அன்றையக் கச்சேரியில் ஆனந்த தாண்டவ மூர்த்தியாக வேடம் தரித்து அற்புதமாக நடனம் செய்தார்.

எனவே, கச்சேரி முடிந்து இருவரும் தங்கள் ஜாகைக்கு வந்தபோது மிகவும் களைத்திருந்ததில் ஆச்சரியமில்லை.

*      *      *

சிறிது நேரம் கழித்து அருணா பேராசிரியரைச் சாப்பிட வரும்படி அழைத்தாள்.

"என்ன, அருணா! இன்று சிவ பூஜையும் பிரார்த்தனையும் செய்யாமல் நாம் சாப்பிடக் கூடாது என்பதை மறந்து விட்டாயா!"

குமுதன் இவ்விதம் கூறிய பிறகுதான் அருணாவுக்குச் சிவபூஜை ஞாபகம் வந்தது.

"அடாடா, மறந்து விட்டதற்காக வருந்துகிறேன்" என்று சொல்லிக் கொண்டே அருணா சிவ பூஜைக்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினாள்.

வழக்கம்போல் சிறிய அகல் விளக்கு ஏற்றப்பட்டது. சாம்பிராணிப் புகையின் மணம் எங்கும் பரவியது.

பேராசிரியர் அர்ச்சனை செய்த பின், சிவபெருமானைக் குறித்து உடலும் உள்ளமும் உருக தோத்திரம் செய்தார். அவரது குரலில் பக்தி உணர்ச்சி ததும்பியது. அவரது ஹிருதயம் நிறைந்திருந்தது.

திடீரென்று அவர் அருணாவின் பக்கம் திரும்பினார். அவளது மடியில் தலையை வைத்துக் கொண்டு அழ வேண்டும் போல் இருந்தது அவருக்கு! இது என்ன பைத்தியக்கார எண்ணம்!

அவர் அருணாவின் முகத்தை இரண்டொரு தடவை உற்றுப் பார்த்தார். அவள் கண்களை மூடிக் கொண்டு கை கூப்பிய வண்ணம் மெய் மறந்து தோத்திரம் செய்து கொண்டிருந்தாள்.

பக்கத்தில் தோத்திரம் செய்து கொண்டிருக்கும் பேராசிரியரின் மனம் படும் பாடு அவளுக்கு எப்படித் தெரியும்! தன்மீது ஆசிரியருக்கு விசேஷ அபிமானம் என்பது அவளுக்குத் தெரியும். எனினும் மற்ற மாணவிகளைப் போலவே தன்னிடமும் அவர் தந்தையைப் போல் அன்பு காட்டி வருவதாகவே நினைத்தாள் அருணா.

பிரார்த்தனை முடிந்ததும் அவ்விருவரும் மற்றவர்களுடன் சாப்பிடப் போனார்கள். பேராசிரியருக்குச் சாப்பாடு பிடிக்கவில்லை. எனவே, அவர் இரண்டு மூன்று கவளம் சாப்பிட்டுவிட்டு எழுந்து விட்டார். அருணாவும் அரை வயிறு சாப்பாட்டுடன் எழுந்து விட்டாள்.

மற்றவர்கள் அவரவர் இருப்பிடத்துக்குச் சென்றனர். பேராசிரியர் தமது அறைக்குச் சென்றார். நாற்காலியில் கால் மேல் கால் போட்டபடி உட்கார்ந்து கொண்டார். அப்படியே வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார்.

குறிப்பாக இரவில் எந்த மாணவியும் அவர் அறைக்குச் செல்லுவது வழக்கமில்லை. இருந்தாலும் சாப்பிடும்போது பேராசிரியரின் மன நிலை சரியாக இல்லை என்பதை அறிந்த அருணாவுக்கு, அதற்குக் காரணத்தைத் தெரிந்து கொள்ளாமல் தன் அறைக்குச் சென்று படுக்க மனமில்லை. எனவே, ஆசிரியரைப் பார்த்துப் பேசி விட்டு வருவதற்காக அவரது அறைக்குச் சென்றாள்.

அருணா அறைக்குள் நுழைந்ததும் பேராசிரியர் அவளை நிமிர்ந்து பார்த்தார்.

"அருணா, நீ ஏன் இங்கு வந்தாய்!" என்று தமது பரபரப்பை வெளிக் காட்டிக் கொள்ளாமல் கேட்டார்.

"என்னை மன்னிக்க வேண்டும். உங்களுக்கு உடம்பு சௌகரியமாக இல்லையோ என்று நினைக்கிறேன்" என்றாள்.

"ஆமாம், நீ நினைப்பது சரிதான். ஆனால்......"

இதற்கு மேல் பேராசிரியரால் எதுவும் பேச முடியவில்லை.

"ஏன் இப்படித் தயங்குகிறீர்கள்!" என்று பரபரப்புடன் கேட்டாள் அருணா.

"என் மன நிலையை அறிந்து கொள்ள முடியாது, அருணா."

"நீங்கள் விளக்கிச் சொன்னால், என்னால் ஏதாவது உதவி செய்யமுடியுமா என்று பார்க்கிறேன்."

"எனக்குப் பைத்தியம் பிடித்தது போலிருக்கிறது, வெறி பிடித்திருக்கிறது" என்று உரக்கக் கத்தினார் பேராசிரியர்.

"ஏன் அப்படி!"

"என் மன வேதனைக்குக் காரணத்தை நீ அறிய வேண்டுமா! இங்கிருந்துபோ, உடனேபோய்விடு."

பேராசிரியரின் கண்டிப்பான உத்தரவைக் கேட்டதும் அருணா கலக்கமடைந்து, அங்கிருந்து மௌனமாகத் தனது அறைக்குப் போய்விட்டாள்.

* * *

இருபது வருஷங்களுக்கு மேலாக குமுத் வாழ்க்கையில் வேறு எவ்வித சிந்தனையுமின்றிக் கலைக்காகவே வாழ்ந்து வந்தார்.

துறவி போன்ற அவரது ஒழுக்கமும், எளிய வாழ்க்கையும், சஞ்சலமற்ற அவரது அமைதியான வாழ்க்கைக்கு உறுதுணையாக இருந்தன.

ஆனால், சங்கீதக் கல்லூரிக்கு அருணா வந்ததிலிருந்து அவரது மன நிலை மாறத் தொடங்கியது. அமைதியான, கட்டுப்பாடான அவரது வாழ்க்கையில் சஞ்சலம் உண்டாயிற்று. குமுத் தமது மனத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் கஷ்டப்பட்டார். சதா சர்வ காலமும் அவரது மனத்தில் அருணாவைப் பற்றிய ஞாபகமே எழுந்து கொண்டிருந்தது. அருணா அருகில் இருக்கும் போதெல்லாம் குமுதின் கண்கள் அவளையே நாடின.

அவள் அருகில் இராதபோது அவளைப் பற்றிய கனவுகளும் குமுதை ஆட்கொண்டன. சென்ற பத்து மாதங்களாக அவர் தமது மனத்தை எவ்வளவோ கட்டுப்படுத்திக் கொண்டுவந்தார். ஆனால் அன்று நடந்த கச்சேரியின் போது குமுத் தமது மன உறுதியை அடியோடு இழந்து விட்டார். தம் மனம் அடியோடு நிலைகுலையும்படி செய்யும் அருணாவின் அழகைக் கண்டு அவருக்கு இனம் தெரியாத பீதியும் ஏற்பட்டது.

தன்னைக் கண்டதிலிருந்து பேராசிரியர் குமுதின் நிலை தடுமாறி விட்டது என்பது அருணாவுக்கு எப்படித் தெரியும்!

அவள் குமுதைத் தன் தந்தையாகவே எண்ணி அவருடன் நெருங்கிப் பழகினாள். எனவே, குமுதின் மனச் சஞ்சலத்துக்கும் தடுமாற்றத்துக்கும் தான் தான் காரணம் என்பதைப் பேதை உள்ளம் படைத்த அவளால் அறிய முடியவில்லை.

# புருஷோத்தம கோபல்

**வடமொழிக்கதை: மொழிபெயர்ப்பு: ஜெயமணி**



"நான் ஏதாவது குற்றம் செய்து விட்டேனோ! அல்லது அன்று நடந்த கச்சேரியில் ஏதாவது தவறு இழைத்து விட்டேனோ!" இவ்வித மெல்லாம் அவள் மனம் கலங்கியது. தான் செய்த தவறுதான் பேராசிரியரின் அமைதியின்மைக்குக் காரணமாக இருக்க வேண்டும் என்று அவள் வருந்தினாள்.

அருணாவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை; ஒரே கலக்கமாக இருந்தது. பேராசிரியரை மீண்டும் மன அமைதி பெறும்படி செய்ய வழி எதுவும் அவளுக்குத் தோன்றவில்லை.

அருணா படுத்துக் கொண்டாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லை. பேராசிரியரின் மனக் கஷ்டத்துக்கு அவள்தான் காரணம் என்று அவளது மனச்சாட்சி உறுத்தியது.

சிறிது நேரம் தூங்கிய பின் அருணா மறுபடியும் விழித்துக் கொண்டாள். திரும்பித் திரும்பிப் படுத்தாள். தூக்கம் வரவில்லை. கடைசியில் எழுந்து அறைக்கு வெளியே வந்தாள்.

அப்போது விடியற்காலம் ஆகிவிட்டது. பட்சிகள் சப்திக்கத் தொடங்கின.

அருணா நேராகப் பேராசிரியரின் அறைக்குச் சென்றாள். என்ன ஆச்சரியம்! அவர் அப்போது கூடக் கால் மேல் கால் போட்டுக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்திருந்தது ஜன்னலின் வழியாக அவளுக்குத் தெரிந்தது. அதைக் கண்டு அருணா திடுக்கிட்டாள்.

அவள் அவரது சிந்தனையைக் கலைக்கத் துணியவில்லை. எனவே, அவள் தன் அறைக்குத் திரும்பிச் சென்றாள். ஸ்நானம் செய்துவிட்டு மீண்டும் பேராசிரியரின் அறைக்குத் திரும்பி வந்தாள்.

பேராசிரியர் குழுக் கண்களைத் திறந்து பார்த்த போது, அருணா சிவபூஜைக்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தாள்.

காலை பூஜை முடிந்ததும் அருணா தன் அறைக்குச் சென்றாள். பேராசிரியர் கல்லூரி அலுவல்களைச் செய்யத் தொடங்கினார். பிறகு மாணவிகள் யாவரும் வந்து சேர்ந்தனர். அப்போது அருணா பேராசிரியருக்கு மத்தியான உணவு பரிமாறினாள். பேராசிரியரின் முகத்தில் கவலையோ, மாறுதலோ எதுவும் இராதது அருணாவுக்கு ஆறுதலைக் கொடுத்தது. எனவே, அவள் மாலையில் கவலையற்று ஆனந்தமாக வீணை வாசிக்கத் தொடங்கினாள். ஒரு கீர்த்தனம் ஆயிற்று; மற்றொரு கீர்த்தனமும் வாசித்து முடித்தாள். மூன்றாவது கீர்த்தனமும் ஆரம்பமாயிற்று.

அருணா அன்று வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாக வீணையின் அமுத நாதத்தில் லயித்து விட்டாள். அவளுக்கு நேரம் போனதே தெரியவில்லை. தன்னையும் சூழ்நிலையையும் கூட அவள் மறந்து விட்டாள்!

எனவே, அவள் வீணை வாசிப்பை நிறுத்திய போது இரவு மணி பன்னிரண்டு ஆகிவிட்டது.

அவள் படுக்கச் செல்லுவதற்காக எழுந்த போதுதான் பேராசிரியரைப் பார்த்தாள். அவர் சிறிது தூரத்தில் நின்று, வைத்த கண் வாங்காமல் அருணாவையே புன்முறுவலுடன் பார்த்தார்.

அருணா தம்மைப் பார்த்துத் திடுக்கிட்டபோது தான் பேராசிரியருக்குச் சுய உணர்வு வந்தது.

"அருணா! நீ படுத்துக் கொள்ளாமல் ஏன் இவ்வளவு நேரமாக விழித்துக் கொண்டிருக்கிறாய்!"

மிகுந்த கனிவுடன் பேராசிரியர் கேட்ட அந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவதென்றே அவளுக்குத் தெரியவில்லை. அவளுக்கு வெட்கமாக இருந்தது.

ஆனால், அதே சமயம் பேராசிரியர் தன் அருகில் வரவே, அருணா அவரது முகத்தைப் பார்த்தாள். அவ்வளவுதான், திகில் அடைந்து திடுக்கிட்டாள்.

ஆசை வெறியால் பேராசிரியரின் முகம் வேறுபட்டிருந்ததே, அருணாவின் பீதிக்குக் காரணம்.

அவள் திடுக்கிட்டுப் பின் அடையவே, பேராசிரியர் அப்படியே நின்று விட்டார். அருணாவின் முகத்தில் தென்பட்ட பயம், அவர் முன்னேறி வர முடியாமல் அவரைத் தடுத்து விட்டது.

"தந்தையே!" என்றாள் அருணா.

அருணாவின் அந்த வார்த்தை சவுக்கடி போல் பேராசிரியரைத் தூக்கிவாரிப் போட்டது. அந்த ஒரே வார்த்தையால் அவரது வெறி இருந்தவிடம் தெரியாமல் மறைந்து விட்டது. அவர் சுய உணர்வு பெற்றார்.

பேராசிரியர் தலையைத் தொங்க விட்டுக் கொண்டு நின்றார். வெட்கத்தினால், அவமானத்தினால் அவரது மனம் வெதும்பியது.

"அருணா! நான் ஒரு பாவி. என் பாவத்தை மன்னித்து விடு" என்று பேராசிரியர் நாத் தழுதழுக்கக் கூறினார்.

**ம**று நாள் அருணா பேராசிரியரின் அறைக்குச் சென்றபோது, அவர் முதல் நாள் இருந்ததைப் போலவே, கால்மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்ததைக் கண்டு திடுக்கிட்டாள். இரவு முழுதும் தூங்காமல் அவர் அப்படியே உட்கார்ந்திருந்தது அருணாவை என்னவோ செய்தது. அவரது சிந்தனையைக் கலைக்க வேண்டாம் என்ற உத்தேசத்துடன் அவள் தன் அறைக்குத் திரும்பிச் சென்றாள்.

அருணா காலையில் கோவிலுக்குப் போய் விட்டுத் திரும்பி வந்தபோதும் பேராசிரியர் அப்படியே உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவளுக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டாயிற்று.

அவள் அருகில் சென்றபோதும் பேராசிரியர் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தது அவளது வியப்பை இன்னும் அதிகப்படுத்தியது. அருணா மெதுவாகப் பேராசிரியரைத் தொட்டாள். தொட்டதுதான் தாமதம். நடுநடுங்கி விட்டாள். பேராசிரியரின் உடலில் உயிர் இல்லை என்பது அப்போதுதான் அவளுக்குத் தெரிந்தது.

முதல் நாள் இரவு நிகழ்ந்த சம்பவத்தினால் பேராசிரியருக்கு அவமானம் தாங்க முடியவில்லை. எனவே, அவரது ஹிருதயத்தில் எழுந்த தீ அவரைச் சுடாமல் சுட்டு விட்டது! அவரது உயிருக்கே உலை வைத்து விட்டது!

அருணாவினால் தனக்கு ஏற்பட்ட துக்கத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவள் 'ஹா' என்று அலறினாள். அவளது தலை சுற்றியது, பேராசிரியருடைய பாதங்களுக்கு அருகில் வீழ்ந்து மூர்ச்சையடைந்தாள்.

---

அகில உலகச் சிறு கதைப் போட்டியை ஒட்டி தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம், மலையாளம், கன்னடம், ஹிந்தி, வங்காளி, உருது, குஜராத்தி, மகாராஷ்டிரம், ஒரியா, ஆங்கிலம் முதலிய பன்னிரண்டு பாஷைகளில் சிறு கதைகள் அனுப்பப்பட்டன. அவற்றில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையால் பரிசளிக்கப்பட்ட கதைகள் ஏற்கெனவே "கல்கி"யில் பிரசுரமாகி யுள்ளன. அந்தந்த பாஷையில் பரிசு பெற்ற கதைகள் இனி தொடர்ச்சியாக வெளிவரும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

பிரயாணத்தில் குறைந்ததொரு நேரந்தான் . . . அதிக நேரம் உங்கள் குடும்பத்துடன் கழிக்கலாம்.

ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக ஏழே மணி நேரத்தில்

# சிங்கப்பூர்



பறந்து செல்லலாம்

## சென்னையிலிருந்து வெள்ளிக்கிழமைதோறும் ஸெர்விஸ்

- நான்கு என்ஜின்களுள்ள கான்ஸ்டலேஷனில் மிக செளகரியமாகவும் பாதுகாப்புடனும் பிரயாணம் செய்யலாம்.
- எவ்வித அசௌகரியமோ தொந்தரவோ இல்லாமல் ஏழு மணி நேரப் பிரயாணம் தான்.
- உங்கள் தேவைகளை கவனிக்க ஹோஸ்டஸ் மற்றும் பர்ஸர்கள் எப்பொழுதும் ஆஜருண்டு.
- இரவு எங்கும் தங்காது.
- நல்ல ருசியான சைவ போஜனம் அல்லது மாமிச போஜனம்—இலவசம்.
- 12 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு விசேஷ ஏற்பாடுகள், பாதிக் கட்டணம்.
- சிங்கப்பூரிலிருந்து மலாய நாடுகளுக்கு செளகரியமான ரயில், விமானத் தொடர்பு வசதிகள்.

புறப்பாடு மதராஸ் வெள்ளிக்கிழமை இரவு 10-45 மணி
வருகை சிங்கப்பூர் சனிக்கிழமை காலை 7-45 மணி
(லோக்கல் டைம்)

### கட்டணம்

| | முதல் வகுப்பு | டூரிஸ்ட் வகுப்பு |
|---|---|---|
| மதராஸ்-சிங்கப்பூர் (ஒற்றைப் பிரயாணம்) | ரூ. 854/- | ரூ. 680/- |

- திரும்பும் பிரயாணத்திற்கு ஒற்றைப் பிரயாண கட்டணத்தின்பேரில் 20% தள்ளுபடியுண்டு; ரிட்டர்ன் டிக்கட் ஒரு வருஷகாலத்திற்கு செல்லுபடியாகும்.
- கூட எடுத்துச் செல்லாத சாமான்களுக்கு விசேஷச் சலுகை கட்டணங்கள்.

ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக செளகரியத்துடன் பிரயாணம் செய்யுங்கள்.

புகிங் மற்றும் இதர பிரயாண விவரங்களுக்கு நேரிலோ கடித மூலமோ விசாரியுங்கள்:



# ஏர்-இந்தியா இன்டர்நேஷனல்

கல்வி மான்ஷன், 85, மவுண்ட்ரோட், மதராஸ்-2
டெலிபோன: 86194

அல்லது இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன்

திருச்சி, திருவனந்தபுரம், கொச்சி, கோயமுத்தூர், பெங்களூர்

AIL 1195

# ஹாஸ்யக் களஞ்சியம்










## பலே பையன்







"இந்தக் கிண்ணம் நிறைய அம்மா நெய் வாங்கிக் கொண்டு வரச் சொன்னுள். பயப்படாதீர்கள்! இதற்குள்ளே ஒரு சிறிய கிண்ணம் இருக்கிறது. அது நிறையத் தான் வேண்டும்!"

சாமா










"எப்பொழுது பார்த்தாலும் நமக்குள்ளே சண்டையா யிருக்கிறது. விவாக ரத்து அமுலுக்கு வந்தவுடனே நாம் ரத்து செய்துகொண்டு இவ் வீட்டில் சிநேகிதர்களாக வாழலாம்!"


"என்ன ஸார், வக்கீல் ஐயாவினுடைய பேர் போர்டில் போய் விட்டதே?"
"அவர்தான் பேர் போன வக்கீலாமே!"


வரவு
செலவு
"குடும்பத்து வரவு செலவை எழுதிக் கொண்டு வரச் சொன்னுல். அதற்காக இப்படியா எழுதுகிறது?"

கருடனை பறவைகளுக்கு ராஜா வென்று கூறுவது வழக்கம். அது சீர் வனப்புக்கும் வேகமாகப் பறப்பதற்கும் கூட அமெரிக்காவில் பெயர்போனது. கருடனுக்கு அளவற்ற விசை வேகமுண்டு.

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## உங்களுக்கு விசையின் வேகத்தை ... துரிதமாக அளிக்கிறது!



கடுமையான டென்னிஸ் விளையாட்டைக் காட்டிலும் தினசரி அலுவல்களுக்கு அதிகச் சக்தி வேண்டும். ஆகையால் தான் ஒவ்வொரு ஸ்திரீக்கும் தினசரி ஆகாரத்தோடுகூட வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் அளிக்கும் அதிகப்படி போஷணை தேவையாயிருக்கிறது. அது உங்களுடைய தினசரி வாழ்க்கைக்குத் தேவையான விசை வேகத்தை யளிக்கிறது.

தினசரி உட்கொண்டால், நாவிற்கினிய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் ஓர் ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும். அது உங்களுடைய தேகம் முழுவதிலும் அதிகப்படி சக்தி உண்டாகச் செய்கிறது. களைப்பு, இருமல், ஜலதோஷம் முதலியவைகளை எதிர்க்கும் வன்மையை யளிக்கிறது. புதிய தாய்மார்களுக்கும், நோயிலிருந்து சொஸ்தமடைபவர்களுக்கும் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நல்ல ஆரோக்யத்தை யளிக்கிறது.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொண்டு புதிய, மகிழ்வுறும ஸ்திரீயாயிருங்கள்...உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் ஒரு ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும்!




## ஆரோக்கியத்தைத் தரும் வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உங்களை சௌக்யமாகவைக்க உட்கொள்ளுங்கள்

NAS 287

# சக்கரவர்த்தித் திருமகன்

## 55. ஆபரணங்களைக் கண்டான்

சீதையை இழந்ததனால் ராமன் படும் துக்கத்தைப் பார்த்து சுக்ரீவன் அவனுக்குப் பலவிதமாகத் தைரியம் சொன்னான்.

"லக்ஷ்மணன் சொன்னதிலிருந்து எல்லாம் அறிந்தேன். நீ சிந்திக்க வேண்டாம். எப்படியாவது சீதை இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்போம். அவளை எங்கே மூடி வைத்திருந்தாலும் கண்டு பிடித்துத் தருவோம். நீ சந்தேகப்பட வேண்டாம். வெகு நாள் காத்திருக்க வேண்டியதுமில்லை. சீக்கிரமே இந்தக் காரியத்தை முடித்துத் தருவோம்.

"ஆகாய மார்க்கமாய் ஒரு ஸ்திரீயை அரக்கன் தூக்கிப் போனதை நானும் என்கூட இருந்தவர்களும் பார்த்தோம். அவள் துடிதுடித்து அழுது கொண்டும் 'ராமா! லக்ஷ்மணா' என்று கூக்குரலிட்டுக் கொண்டும் போனதைக் கண்டோம். எங்களை அவளும் கண்டாள். கண்டு தன் உத்தரீயத்தை எடுத்துத் தன் மேலிருந்த ஆபரணங்களைக் கழற்றி அதில் முடித்துக் கீழே போட்டாள். அதை எடுத்து வைத்திருக்கிறோம். நீ பார்த்து இது உன் மனைவி சீதையின் ஆபரணங்களா என்று பார்க்கலாம்" என்றான்.

இதைக் கேட்டதும் ராமன் தாங்க முடியாத பரபரப்புடன் "கொண்டு வா, கொண்டு வா" என்றான்.

குகையில் வைத்திருந்த அந்தத் துணி மூட்டையைக் கொண்டு வந்தார்கள். வஸ்திரத்தைப் பார்த்தவுடனே ராமனுடைய துக்கம் பொங்கி, பொறுக்க முடியாமல் போய் விட்டது. சிறு முடிப்பாகக் கட்டியிருந்த சீதையின் உத்தரீயத்தைப் பார்த்ததும் அரக்கன் கையில் சிக்கித் தவித்த சீதையின் சங்கட நிலை ராமன் கண்முன் நின்றது.

**ராஜாஜி**

"லக்ஷ்மணா! இந்த மூட்டையை அவிழ்த்துப் பார், என்னால் பார்க்க முடியவில்லை" என்று கண்களை மூடிக் கொண்டான்.

லக்ஷ்மணன் துணி முடிப்பை அவிழ்த்து, "இவை சீதையின் நூபுரங்களே. சந்தேகமில்லை" என்றான்.

கால்களுக்கு இட்ட ஆபரணங்களை முதலில் எடுத்து லக்ஷ்மணன் அடையாளம் கண்டதைப் பற்றி பக்தர்கள் ரொம்ப ரசித்து அதை எடுத்துக் கொண்டு உபந்யாசம் செய்வது வழக்கம்.

பிறகு எல்லா ஆபரணங்களையும் எடுத்து ராமன் நன்றாக அடையாளம் கண்டு கண்ணுக்கு ஒத்திக் கொண்டான். "புல்லில் விழுந்தபடியால் அப்படியே எல்லாம் கெடாமலிருக்கிறது பார், லக்ஷ்மணா!" என்றான் ராமன்.

பிறகு துக்கத்துக்கு மேல் அடங்காத கோபம் மூண்டவனாக ராமன் "சீதையைத் தூக்கிப் போன இந்த அரக்கனுக்காக யமன் வீட்டு வாயில் திறந்து கிடக்கிறது. அவனையும் அவன் குலம் முழுதையும் இப்போதே அழிப்பேன், நிச்சயம்" என்றான்.

• • •

இப்படி ராமன் தன் மனைவியையிழந்த துக்கமும் அரக்கன்மேல் உண்டான கோபமும் வளர்ந்து பொங்கி வந்ததை சுக்ரீவன் பார்த்துக் கொஞ்சம் கவலைப் பட்டான்.

பரஸ்பர சிநேகத்தைப் பற்றியும் சகாயத்தைப் பற்றியும் பிரதிக்ஞை அக்கினி சாக்ஷியாக எடுக்கப் பட்டிருந்த போதிலும் எந்தக் காரியம் முன் நடை பெற

வேண்டும், எது பின்னால் நடைபெற வேண்டும் என்கிற பிரச்சினை சுக்ரீவன் மனத்தில் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தது. ராமனுடைய கோபாவேசத்தையும் துக்கத்தையும் சுக்ரீவன் நன்றாக உணர்ந்தான். அவனோடு வாதம் செய்வதில் பயனில்லை. அப்படிச் செய்தால் ராமன் மனத்தில் தன்னைப்பற்றிச் சந்தேகங்கூட உண்டாகலாம், புதிதாக ஏற்பட்ட நட்பு சேதப்படும் என்று எண்ணினான். உடனே சீதையைத் தேடுவதிலும் ராவணனைத் தாக்கும் வேலையிலும் புகுந்து விட்டால் வாலி என்ன செய்வானோ? அண்ணன் வாலி வானர ராஜ்ய பதவியிலிருக்கும் போது சுக்ரீவனுடைய பலம் எந்த மட்டுக்குச் செல்லும்? ராமனுடைய காரியம் வெற்றியடைவது கூடச் சந்தேகமாகப் போகும் என்றெல்லாம் யோசித்தான். ஆனபடியால் முதல் வேலையாக வானர ராஜ்யத்தை மறுபடி தான் அடைந்துவிட வேண்டும். இருவருடைய காரிய சித்திக்கும் இது அவசியம் என்ற முடிவுக்கு வந்தான். நீதி சாஸ்திரமும் ராமனுடைய மனோ நிலையையும் உணர்ந்து சமத்காரமாக நடந்து கொள்ளத் தீர்மானித்தான்.

"இந்த மகா பாபி அரக்கனுடைய பலபராக்கிரமமும் இருப்பிடமும் நான் நன்றாக அறியேன். அவன் சீதையை எங்கே கொண்டு போய் வைத்திருக்கிறான் என்பதும் தெரியாது. ஆயினும் நான் உனக்குச் சத்தியம் செய்து வாக்குறுதி கொடுக்கிறேன். சீதையை எங்கே வைத்திருந்தாலும் கண்டு பிடித்து, அவன் இருக்குமிடமும் கண்டு, அரக்கனை வதம் செய்யும் மார்க்கத்தையும் தேடி முடிக்கப் போகிறேன். உனக்குச் சந்தேகம் வேண்டாம். துக்கப்படாதே. தைரியம் அடையக் கடவாய். முயற்சிக்குத் தைரியம் இன்றியமையாத மனோ நிலை. அரக்கனைக் கண்டு பிடித்து அவனையும் அவன் குலத்தையும் வேரோடு அறுத்து அழிப்போம். உன் வீரம் வீண் போகாது. அரக்கனை வதம் செய்து, உன் பௌருஷத்தை நாட்டிப் புகழடைவாய். மனச் சோர்வு வேண்டாம்.

"என்னைப் பார். நானும் உன்னைப் போல் மனைவியை இழந்தும் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டும் அவமானப்பட்டு வருகிறேன். ஆயினும் துக்கத்தின் வேகத்தை அடக்கிக் கொண்டு தைரியத்தைக் காத்து வருகிறேன். நான் ஒரு



வானரன், என்றால் தைரியமாக இருக்க முடியுமானால் உனக்கு இது ஒரு கஷ்டமா? கண்ணீர் விடாதே. பொங்கும் துக்கத்தைத் தடுத்துக் கொள். உன்னைப் போன்ற ஜிதேந்திரியர்கள் பயம், துக்கம் இவற்றால் உள்ளம் தளர்ந்து போகாமல் மனத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். இல்லாவிட்டால் சோகத்தில் சிக்கிக் கொண்டு சமுத்திரத்து நடுவில் பெருங் காற்றால் அலைக்கடிக்கப்பட்ட ஓடத்தைப்போல் கவிழ்ந்து போவோம். சோகத்துக்கு இரையாகப் போனோமானால் ஒரு காரியமும் சாதிக்க முடியாது. ஆனபடியால், நண்பனே, துக்கத்தை அடக்கி யாள்வாய். உன்னை நான் வருந்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். துக்கம் நம்மை இழுத்துக்கொண்டே போய்த் தோல்விப் பள்ளத்தில் நம்மைத் தள்ளி விடும். உள்ளத்தில் தைரியத்தை நிலை நிறுத்திக் கொள். நான் உனக்கு உபதேசம் செய்யும் தகைமை பெற்றவனல்ல. நண்பன் என்கிற உரிமையில் எனக்கு எது உசிதம் என்று தோன்றுகிறதோ அதைச் சொல்லுகிறேன். உனக்குத் தெரிந்த விஷயத்தையே ஞாபகப் படுத்துகிறேன். அவ்வளவே.''

இப்படிச் சுக்ரீவன் மிகப் பிரியமாகச் சொன்னதெல்லாம் ராமன் உள்ளத்தில் பதிந்தது. கண்ணீர் நிறைந்து பெருகிய கண்களைத் துடைத்துக் கொண்டு சுக்ரீவனை ஆலிங்கனம் செய்து கொண்டான். சீதையின் மேல் வஸ்திரத்தையும் ஆபரணங்களையும் கண்டதினால் உண்டான மனக் கலக்கத்தை நிறுத்திக் கொண்டு தனக்குரிய மனோதிடத்தைத் திரும்ப அடைந்தான்.

"உன்னுடைய சிறந்த நட்பை அடைந்தேன், சுக்ரீவனே! உன் யோசனைப்படி நடப்பேன். சீதையைத் தேடும் காரியத்தைப் பற்றி நன்றாக யோசிப்பாய். உன் காரியத்தை என் காரியமாகவே நான் எண்ணி எல்லாம் செய்வேன். இது உறுதி யென்று நம்புவாய். இதுவரையில் நான் எப்போதும் பொய் சொன்னதில்லை. இனியும் சொல்லப் போவதில்லை. நம்முடைய நட்பு என்றைக்கும் பொய்யாகாது. சத்தியம் செய்கிறேன். உன் கஷ்டத்தைத் தீர்க்கும் வழியைக் கூசாமல் சொல்; நான் செய்து முடிப்பேன்'' என்றான் ராமன்.

ராமனுடைய சொற்களைக் கேட்ட சுக்ரீவனும் அவனுடைய மந்திரிகளும் எல்லைகடந்த மகிழ்ச்சி யடைந்தார்கள். தங்களுடைய கஷ்டங்கள் முடிந்து மறுபடி சுக்ரீவன் வானர ராஜ்யம் பெறுவது நிச்சயம் என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.



'சுதேசமித்திரன்' காரியாலய விசேஷப் பிரதிநிதி ஸ்ரீ பி. ஆர். ஸ்ரீனிவாசனின் குமாரத்தி சௌ. சீதா தேவிக்கும், தெக்ஷிண ரயில்வே மாஜி உத்தியோகஸ்தர் ஸ்ரீ டி. ரெங்கநாத அய்யங்காரின் குமாரன் ஸ்ரீ சௌரிராஜனுக்கும் சென்ற 11—2—55 எழும்பூரில் விவாகம் சிறப்பாக நடைபெற்றது. சென்னை முதலமைச்சர், ஒரிஸ்ஸா கவர்னர், விந்தியபிரதேச கவர்னர், மற்றும் பிரபல அதிகாரிகளும், பத்திரிகை ஆசிரியர்களும், பிரமுகர்களும் மணமக்களுக்கு வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் அனுப்பியிருந்தனர்.

## 56. சுக்ரீவன் கதை

சுக்ரீவன் தன் சகோதரன் வாலிக்கும் தனக்கும் உண்டான விரோதத்தின் கதையை ராமனிடம் விவரமாகச் சொன்னான்.

"என் அண்ணன் வாலி வானர ராஜ்ய பட்டாபிஷேகம் பெற்று, கிஷ்கிந்தையில் அரசு புரிந்து வந்தான். மகா பராக்கிரமசாலி. அவனிடம் அன்பும் பக்தியும் குறைவின்றிச் செலுத்திக் கொண்டு நான் யுவராஜனாக இருந்து வந்தேன். வாலிக்கும் மாயாவி என்கிற அசுரனுக்கும் பழைய விரோதம். ஒரு நாள் ராத்திரி அந்த அசுரன் கிஷ்கிந்தைக்கு வந்து வாலியைப் போருக்கு அழைத்தான்.

"அவன் இரவில் போட்ட கர்ஜனையைக் கேட்டுக் கோபங் கொண்டு தூங்கிக் கொண்டிருந்த வாலி எழுந்து அவனை உடனே எதிர்க்க வெளியேறினான். நானும் அவனுக்கு உதவியாகக் கூடவே சென்றேன். நிலா வெளிச்சத்தில் நாங்களிருவரும் வருவதைப் பார்த்து மாயாவியானவன் ஓடி ஒரு குகைக்குள் நுழைந்

தான். வாலியும் அவனைத் துரத்திக் கொண்டு குகைக்குள் புகுந்தான். நானும் உள்ளே புகப் போனேன். வாலி என்னை வேண்டாம் என்று தடுத்து விட்டான். தான் ஒருவனாகவே அந்தத் துஷ்டனைக் கொல்ல வேண்டும் என்று சொல்லி, என்னை அந்தக் குகையின் வாயிலில் வெளியே நிற்கச் சொன்னான். சொல்லி விட்டு அவன் உள்ளே புகுந்து சென்றான்.

“உள்ளே சென்றவன், பல நாட்களாகியும் திரும்பி வரவில்லை. அண்ணனுக்கு என்ன நேர்ந்ததோ என்று நான் கவலைப் பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் குகைக்குள் அசுரர்களுடைய பெருங் கூக்குரல் கேட்டது. அதன் கூடக் குகையிலிருந்து ரத்த வெள்ளம் பெருகி வந்தது. இதைக் கண்டதும் வாலியை மாயாவியும் பல அசுரர்களும் சூழ்ந்து கொன்று விட்டார்கள் என்று தீர்மானித்துக் கொண்டேன். அசுரர்கள் வந்து என்னையும் தாக்குவார்கள் என்று எண்ணி ஒரு பெரும் பாறாங்கல்லைக் குகை வாயிலில் வைத்து மூடி விட்டேன்.



“கிஷ்கிந்தைக்கு வருத்தத்தோடு திரும்பினேன். வாலி இறந்தான் என்று யாருக்கும் சொல்லாமலே ராஜ காரியங்களைப் பார்த்து வந்தேன். பிறகு வானரப் பிரஜைகள் நிர்ப்பந்தித்தார்கள். ‘அரசனில்லாமல் போனால் ராஜ்யம் பாழாகப் போகும், வெகு நாளாகியும் வாலி திரும்பவில்லை; நீயே பட்டாபிஷேகம் செய்து கொண்டு அரசு புரிவாய்’ என்று வற்புறுத்தினார்கள். நானும் அதற்கு இணங்கினேன்.

“சில காலம் கழித்து மாயாவியையும் அவனுடைய துணையாட்களாக இருந்த அசுரர்களையும் கொன்று ஒழித்து விட்டு வாலி திரும்பினான். குகை அடைபட்டிருப்பதைப் பார்த்து, “சுக்ரீவா! சுக்ரீவா!” என்று உள்ளேயிருந்து கத்திப் பார்த்தான். நான் அவ்விடமில்லையானபடியால் எனக்கு இது ஒன்றும் தெரியாது. அவன் என்மேல் மகா கோபங் கொண்டு கற்பாறையை உதைத்துத் தள்ளி விட்டுக் கிஷ்கிந்தைக்குள் பிரவேசித்தான்.

“நான் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து கொண்டு அரசு புரிவதைப் பார்த்ததும் அடங்கா சினம் மேலிட்டு என்னைப் பல வாறாகத் திட்டினான். நான் நடந்ததை நடந்தது போலச் சொன்னேன். ‘அரக்கன் உன்னைக் கொன்றுவிட்டான் என்று எண்ணி இவ்விதம் செய்தேன். பிரஜைகளுடைய நிர்ப்பந்தத்துக்காக அபிஷேகம் பெற்றேன். இந்த ராஜ்யம் உன்னுடையது, திரும்பப் பெற்றுக் கொள். உன் அடிமையாக நான் முன்போல் இருப்பேன்’ என்றுசொல்லி அவன்காலில்விழுந்தேன். அவனோ நான் சொன்னதை லட்சியமே செய்யவில்லை. நான் துராசைப் பட்டுக் குகை வாயிலை அடைத்து விட்டு அக்கிரமமாகப் பட்டாபிஷேகம் செய்து கொண்டேன் என்றே அவன் நினைத்து, என்னை நகரத்திலிருந்து வெளியே துரத்தி விட்டான். ‘திரும்பி இந்தப் பக்கம் வந்தால் உன்னைக் கொல்வேன்’ என்று சொல்லி என்னைத் துரத்தி விட்டான். அப்போது நான் உடுத்தியிருந்த வஸ்திரத்துடன் வெளியே ஓடினேன். அதுமுதல் காடும் மலையுமாக மறைந்து திரிந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டு வருகிறேன். எல்லாம் இழந்து இந்த நிலையிலிருக்கிறேன். இந்த நான்கு வானரர்களே எனக்குத் துணையாக இருந்து வருகிறார்கள். கோபத்தால் உண்மையையறிய மாட்டாமல் என் அண்ணன் இம்மாதிரி அக்கிரமம் செய்து வருகிறான். மகா பராக்கிரம சாலியான அந்த வாலியை ஹதம் செய்து என்னைக் காப்பாற்றுவாய்” என்றான் சுக்ரீவன்.

சுக்ரீவனுடைய பரிதாப நிலையை ராமன் கண்டு கருணைமேலிட்டு, “உனக்கு நான் தந்த சபதம் உறுதி. பயப்படாதே. என் அம்பு வாலியின் உடலைத் துளைக்கும். உனக்குப் பகையாகி விட்ட சகோதரனைக் கொன்று உன் கவலையை நீக்குவேன்” என்று மறுபடியும் பிரதிக்ஞை செய்தான்.

* * *

இந்த வாலி–சுக்ரீவ நிகழ்ச்சியானது புராணங்களில் செய்யப்படும் உபதேசத்துக்கு நல்ல உதாரணம்.

வாலியின் நடவடிக்கையிலும் பெருங் குற்றமில்லை, சுக்ரீவனுடைய காரியங்




புதுமை பெறுங்கள்! முதலில் ஸ்நானம் செய்ததும் சார்மிஸ் டால்கம் பவுடரை உடல் முழுவதும் தூவுங்கள். எந்தகைய புதுமை உணர்ச்சி அது அளிக்கும் தெரியுமா?

மிருதுத்தன்மை பெறுங்கள்! உடலில் கரணையுள்ள இடங்களிலும் பவுடரை நன்ருக தடவிவிடுங்கள். அது பட்டைப்போல படர்ந்து எரிச்சல் வராமல் பாதுகாக்கிறது.

நீடித்த இனிமையுடன் இருங்கள்! சார்மிஸ் டால்கம் பவுடரை தாராளமாக அடிக்கடி உபயோகியுங்கள். அது செலவில்லாமல் பெருவாழ்வு அளிக்கும் சாதனம் அழகிற்கும் காதல் கவர்ச்சிக்கும் இதுவே சிறந்த ரகசியம்.



# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

பரவசப்படுத்தும் மனே ஹரமான நறுமண முள்ளது.

# உங்கள் நரம்புகள்!

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும் — அதுவும் ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்ட காலமாய் மனே பலமும் தேக திடனும் வியர்த்தமாகியிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக் கூடிய ஒரு உயர்ந்த டானிக்

இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப்போதும் கையிருப்பாக வைத்திருங்கள்




சிறியோர்

•

முதியோர்

•

நோயாளிகள்

யாவருக்கும்

உகந்தது

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

•

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்*

என். தேசாய் கௌண்டர் & கோ.
41, பந்தர் தெரு - சென்னை

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்*

சத்ய நாராயண பார்மஸி
குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்



'கல்கி' ஆசிரியர் திரு சோமு அவர்களின் திருமணம் 1940-ம் ஆண்டு பெப்ருவரி மாதம் 12-ந் தேதி, திருநெல்வேலியைச் சேர்ந்த மீனாட்சிபுரத்தில் நடைபெற்றது. அவ்வமயம் ராஜாஜியும், டி. கே. சி. யும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தார்கள். ராஜாஜிக்கு இடதுபுறம் கம்பீரமும் மகிழ்ச்சியும் தோன்ற நிற்பவரே டி. கே. சி.

களிலும் பெருங் குற்றம் சொல்வதற்கில்லை. கோபத்தால் புத்தி மழுங்கிப் போகும். கோபத்துக்கு வசப்பட்டு விட்டால் உண்மையைக் காணும் சக்தியை இழந்து விடுகிறோம். அதனின்று பிறகு நாசம் அடைவோம் என்பது சாஸ்திரம். இதற்கு வாலியின் கோபாவேசமும் முடிவும் உதாரணம் தருகின்றன. சுக்ரீவன் தான் செய்த காரியங்களை வணக்கமாகவும் உண்மையாகவும் சொல்லிப்பார்த்தான். ஆனாலும் அது வாலியின் புத்தியில் ஏறவில்லை. காரணம், வாலியின் அடங்காக் கோபம்.

சுக்ரீவனும் அவசரப்பட்டுத் தன் தமையன் மாண்டான் என்று தீர்மானித்து விட்டான். அசுரர்கள் வந்து தன்னையும் கொன்று விடுவார்கள் என்று பயந்து குகை வாயிலை அடைத்துப்போட்டு ஊர் திரும்பிவிட்டான். ராஜ்யாதிகாரம் பெற வேண்டும் என்று முதலில் ஆசைப்படவில்லை. ஆயினும் பிரஜைகள் நிர்ப்பந்தித்ததால் பிறகு உடன்பட்டு விட்டான். ஆசை வலையில் சிக்கினான். தீர ஆலோசிக்காமல், நடந்து கொண்டான். அதனால் கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டான். தீர ஆலோசிக்காமல் செய்யும் காரியங்கள் அனர்த்தத்தில் முடியும் என்பது சுக்ரீவனுடைய கதையினின்று அடைய வேண்டிய உபதேசம்.

பிறர் சொத்தை ஆசைப்படலாகாது. ஆசையை அடக்கி யாள்வது மிகக் கடினம். இதில் முழு வெற்றி யடைவதற்கு வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். பரதனையும் பட்டம் கட்டிக் கொள் என்று மந்திரிகளும் பிரஜைகளும் அயோத்தியில் வற்புறுத்தினார்கள். ஆயினும் அவன் ஒப்புக் கொள்ளவில்லை. இது பரதனுடைய சிறப்பு. சுக்ரீவனோ ஒப்புக் கொண்டு விட்டான். அதனால் துன்பம் அடைந்தான். பரதன் வேண்டாம் என்று மறுத்துப் பெருங் கீர்த்தி அடைந்தான்.

இராமாயணத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் நாம் சாதாரண வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய தர்மம் விளக்கப்படுகிறது. விளக்கம் சில இடங்களில் நேரான விளக்கமாக இருக்கும். சில இடங்களில் அப்படி நேராக எடுத்துக் காட்டாமல் குறிப்பாகக் கிடக்கும். பக்தியோடு சிந்தனை செய்தால் விளங்கும்.



பாப்பா மலர்
தொடர் கதை

# தங்க மாம்பழம்

## 23. வெற்றியும் தோல்வியும்

பீமசிம்மன் தன் மனைவி மக்களுடன் குறிப்பிட்ட நேரத்துக்குச் சற்று முன்னதாகவே வந்து உட்கார்ந்திருந்தான். கூடாரத்தில் மாட்டியிருந்த கடிகாரம் டாண் டாண் என்று மணி ஏழு அடித்தது. உடனே அரசனுக்கு முக்கிய அதிகாரி ஒருவர் அரசனுக்குப் பக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த ஒலிபெருக்கிக் கருவியின் அருகில் வந்தார். கையில் இருந்த காகிதத்திலிருந்து கீழ் வருமாறு படித்தார்.

"சீமான்களே, சீமாட்டிகளே, இப்பொழுது வில் போட்டி ஒன்று நடைபெறும். அதில் மாயா மகேந்திரபுரத்து அரசன் வீரசிம்மனும் அவருக்கு எதிராகப் பிரபாகரன் என்ற பெயருள்ள வாலிபனும் கலந்து கொள்ளுவார்கள். இதோ எதிரில் இருக்கும் சவுக்குக் கட்டையின் மேல் ஒரு எலுமிச்சம் பழம் வைக்கப்படும். அந்த எலுமிச்சம் பழத்தைப் போட்டி இடுபவர் அங்கிருக்கும் மண்டபத்திலிருந்து அம்பு எய்து ஒரே குறியில் அடிக்க வேண்டும். அப்படி அவர் அடித்தார் என்றால் அவர் ஜயித்தவராகக் கருதப்படுவார். போட்டி இடுபவர்கள் இரண்டு பேரும் வெற்றி
பெற்றால் பிறகு எலுமி
சம் பழத்துக்குப் ப
லாக ஒரு நெல்லிக்கா
வைக்கப்படும். அந்
நெல்லிக்காயையும் போட்டி இடு
வர்கள் இரண்டு பேரும் குறிவைத்
அடித்து விட்டார்கள் என்றால் ஒ
சுண்டைக்காயை வைத்துப் போட்
யிடச் செய்வோம். அதையு
அவர்கள் இருவரும் குறி பார்த்
அடித்தார்களானால் மற்றொரு நா
வேறு நிபந்தனையின்பேரில் போட்
ஏற்பாடு செய்வோம். இப்பொழு
முதலில் வயதில் மூத்தவராக இரு
க்கும் மாயா மகேந்திரபுர அரச
வீரசிம்மன் முதலில் போட்டி இடுவா
இவர் வில் வித்தையில் மிகவும் தேர்ச்
பெற்றவர். இவரை யாரும் எளிதி
வெற்றிபெற முடியாது என்பது யாவரு
க்கும் தெரிந்த விஷயமே" என்று சொல்
முடித்தார்.

உடனே வீரசிம்மன் மெதுவாக நடந்
மண்டபத்துக்குச் சென்றான். அப்பொழு
ஒரு எலுமிச்சம்பழம் சவுக்குக் கட்டையி
மீது வைக்கப்பட்டது. அந்த எலுமிச்ச
பழத்தை நோக்கிக் குறி வைத்து டா
என்று அம்பை விட்டான். டாண் என்
அம்பை எய்தானே தவிர அது எலுமிச்ச
பழத்தின் அருகில் செல்லவே இல்லை
அதற்குப் பதிலாக வளைந்து வளைந்
அரசன் அருகில் சென்று தொப்பென்
அவன் காலுக்கு அருகில் விழுந்தது.

'இதென்ன, இது? என் ஆயுளில் எட்
முடியாத இடங்களில் எல்லாம் கு
வைத்து அடித்திருக்கிறேன். ஒரு சம
மும் நான் ஏமாந்தது இல்லை. இரு
கட்டும், பிரபாகரன் ஜெயிக்கிறானா என்
பார்ப்போம்!' என்று மனசுக்குள் சொ
லிக் கொண்டே மண்டபத்தில் போ
உட்கார்ந்தான் வீரசிம்மன்.

"அடுத்தாற்போல் போட்டிக்கு வருகிறவர் பெயர் பிரபாகரன். இவர் நமது காட்டில் இருக்கும் மிகவும் பலமுள்ள ஆண் சிங்கம் ஒன்றை ஒரே பாணத்தினால் கொன்றவர்" என்று ஒலி பெருக்கிக் கருவியின் வழியாகச் சொல்லப்பட்டது.

உடனே பிரபாகரன் மண்டபத்துக்கு வந்தான். அவனையும், அவனது தோற்றத்தையும் பார்த்த ஜனங்கள் அவன் மீது அன்பு கொண்டு அவன் ஜயம் அடையட்டும் என்று சொல்லுவதுபோல பலத்த கரகோஷம் செய்தார்கள். அவர்களுக்கு வந்தனம் செலுத்திவிட்டுப் பிரபாகரன் மிகவும் ஜாக்கிரதையாகக் குறி வைத்து அம்பை எலுமிச்சம் பழத்தின் மீது எய்தான். அடுத்த வினாடியில் அம்பு எலுமிச்சம் பழத்தின் மீது பட்டு அதை எடுத்துக்கொண்டு வெகுதூரம் சென்று கீழே விழுந்தது. உடனே சபையில் பலத்த கரகோஷம் ஏற்பட்டது. மண்டபத்தில் உட்கார்ந்திருந்த வீரசிம்மன் கோபம் கொண்டு, "இதில் ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறது. பீமவர்மரே! நான் பிரபாகரன் ஜயித்ததாக ஒப்புக்கொள்ள மாட்டேன். என் மனம் திருப்தி அடையும்படி அவனை நெல்லிக்காயையும், சுண்டைக்காயையும் வைத்துக் குறி பார்த்து அம்பைவிடச் சொல்லுங்கள், பார்க்கலாம். அவன் அதில் ஜயித்தானானால் அவன் உண்மையிலேயே வெற்றி பெற்றவனாவான்" என்றான்.

அதற்குப் பீமவர்மன், "அரசே! நீங்கள் சொல்வது சரி அல்ல. நான் முதலில் செய்த நிபந்தனைப்படி இந்தப் போட்டியில் பிரபாகரன் வெற்றி அடைந்தான். அவன் உண்மையாகவோ, அல்லது தற்செயலாகவோ அல்லது ஏதாவது சூழ்ச்சியின் காரணங்களினாலோ வெற்றி அடைந்திருந்தாலும் வெற்றி வெற்றியேதான்!" என்று கூறினான். உடனே சபையில் மறுபடியும் பலத்த சப்தத்துடன் கரகோஷம் ஏற்பட்டது.

பீமவர்மன் தொடர்ந்து, "இருந்தாலும் உங்கள் வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுத்துப் பிரபாகரனை எலுமிச்சம் பழத்தின் மீது குறிவைத்து அடித்தது போல நெல்லிக்காயையும், சுண்டைக்காயையும் குறிவைத்து அடிக்கச் சொல்லும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். அவன் சம்மதித்து அப்படிச் செய்தால் அவன் ஜயித்தாலும், தோற்றாலும் அவனை ஒன்றும் பாதிக்காது" என்று சொல்லிவிட்டுப் பிரபாகரனைப் பார்த்தார்

## தலையில் என்ன இருக்கு?




"அக்கா, உன் தலையில் யானை இருக்கு!"
"டேய், உன் தலையில் ஆமை இருக்கு!"

தான் எந்தப் போட்டிக்கும் தயார் என்பதுபோலத் தலையை அசைத்தான், பிரபாகரன். அடுத்த வினாடியில் சவுக்குக் கட்டையின்மீது வைத்த நெல்லிக்காயைக் குறி பார்த்து அம்பு எய்தான். நெல்லிக்காய் பல சுக்கல்களாக உதிர்ந்து கீழே விழுந்தது. சபையில் பலத்த கரகோஷம் ஏற்பட்டது. மறுபடியும் பிரபாகரன் சவுக்குக் கட்டையின்மீது வைத்த சுண்டைக் காயைக் குறி பார்த்து அம்பு எய்தான். வேகமாகச் சென்ற அம்பு சுண்டைக்காயின் நடுமத்தியில் பாயவே அந்தச் சுண்டைக்காயின் கதி என்ன ஆயிற்று என்று ஒருவருக்குமே புலப்படவில்லை.

"பிரபாகரன் வெற்றி மாலையுடன் ஜயித்தான்" என்று அறிவிக்கப்பட்டது. உள்ளே கூடி இருந்த ஜனங்கள் வெகு ஆவலுடன் பிரபாகரனைச் சூழ்ந்து கொண்டு அவனுக்கு மாலை போட்டார்கள். பிரபாகரனைச் சூழ்ந்த கூட்டத்தைக் கலைப்பதற்குக் குதிரைச் சேவகர்கள் பலர் முனைந்தார்கள்.




கூட்டம் சற்றுக் கலைந்த பிறகு, "உமா உமா" என்று அவன் உரக்கக் கூப்பிட்டான். அச்சமயத்தில் உமாவும் பிரபாகரனை நோக்கி ஓடி வந்தாள். "அண்ணா! ஆச்சரியம்! நீ இந்தப் போட்டியில் நல்ல புகழுடன் வெற்றி பெற்றாய். எல்லாம் கடவுள் செயல், அண்ணா!" என்றாள். பிரபாகரன் உமாவை அழைத்துக் கொண்டு ராஜா பீமவர்மனிடம் சென்றான்.

பீமவர்மன் பிரபாகரனைத் தழுவிக்கொண்டு, "பிரபாகரா, நீ மிகவும் கெட்டிக்காரன். இந்தா, இந்த வாளை உன் வெற்றியின் பரிசாக வைத்துக் கொள். நான்

டி. கே. வி. மணிமொழி

எப்படியோ "ஸ்காலர்"களுக்குக் கலை உணர்ச்சி வறண்டு போய் விட்டது. பெரிய கொம்பன் யானையைக் கண்டால் தந்தத்தின் முனையில் மண் ஒட்டிக் கொண்டிருக்கிறதே என்று சொல்லுவார்கள். ரோஜா மாலை வாசனை வீசுகிறது என்றால், மாலைக்குள் முள்ளிருக்கிறதே என்பார்கள். மோனகையைப் பார்க்கச் சொன்னால், "ஐயோ, மீசை துளிகூட இல்லையே!" என்று கையை நெரிப்பார்கள். இதெல்லாம் வின்னியாச வார்த்தைகளாக ஒலிக்கலாம். ஆனால் 'ஸ்காலர்'களைச் சுட்டிச் சொல்லும் போது தன்மை நவிற்சிதான்!

துப்பாக்கி வீரர்களைத் துணைக்கு அனுப்புகிறேன். அவர்கள், உங்கள் இருவரையும் காடு தாண்டி மேலே கடக்க வேண்டிய பாலைவனத்தின் எல்லையில் விட்டு விடுவார்கள். பிறகு நீங்கள் உங்கள் வழியே போகலாம். உங்களுக்குச் சகல மங்களமும் உண்டாகட்டும்" என்று ஆசிர்வதித்தான்.

பிரபாகரனும் உமாவும் அரசனை வணங்கி விட்டு அரசன் கொடுத்த கத்தியுடன் தங்கள் அறைக்குச் சென்றார்கள்.

* * *

பீமபுரியின் எல்லையைக் கடந்ததும் ராஜ சேவகர்கள் அவர்கள் இருவரையும் விட்டு விட்டுப் போய் விட்டார்கள். பிரபாகரனும் உமாவும் தாங்கள் வேறு புதிய பட்டணத்துக்கு வந்திருப்பதைப் பார்த்தார்கள். அந்தப் பட்டணத்தை மகேந்திர மன்னன் என்ற பெயருள்ள ஒரு சிற்றரசன் ஆண்டு வந்தான். அந்தப் பட்டணம் மற்றைய பட்டணங்களைப் போலக் காணப்படவில்லை. ஜன நெருக்கடியையும் காணோம். அந்தப் பட்டணத்தில் அதிகமாக வீடுகளும் தென்படவில்லை. இருந்த வீடுகள் யாவும் சிறியவை. மகேந்திர மன்னன் இருக்கும் அரண்மனைதான் சற்றுப் பெரிய கட்டடமாக இருந்தது. பட்டணத்தில் முக்கால் பாகத்துக்கு மேல் மணல் நிறைந்த பாலைவனம். அப்படி இருக்கும் பொழுது எப்படிப் பட்டணத்தில் ஜனநெருக்கடி ஏற்படும்?

ஒரு கையில் பீமவர்மன் கொடுத்த கத்தி, மற்றொரு கையில் துறவி கொடுத்த வில் இவைகளை எடுத்துக் கொண்டு, உமா பின் தொடர மெதுவாக நடந்து சென்றான் பிரபாகரன். வழியிலேயே ஒரு அரசாங்கச் சேவகனைப் பார்த்தான். கத்தியையும் வில்லையும் எடுத்துக் கொண்டு போகும் பிரபாகரன் மீது சந்தேகித்த அந்த அரசாங்கச் சேவகன், "நீங்கள் யார்? எங்கு போகிறீர்கள்?" என்று விசாரித்தான்.

"ஐயா, நாங்கள் இந்த ஊருக்குப் புதிது. என் பெயர் பிரபாகரன், இவள் என் தங்கை. பெயர் உமா. நாங்கள் கல்லறைத் தீவுக்குச் செல்லுகிறோம். அதற்குச் செல்லும் வழியைச் சொல்லுவீர்களா?" என்று கேட்டான் பிரபாகரன். கல்லறைத் தீவு என்றவுடன் 'குப்' பென்று சிரித்து விட்டு, "உங்களைப் பார்த்தால் சிறுவர்களாகத் தோன்றுகிறீர்கள். உங்களுக்கு அங்கு போவதற்கு எப்படித் தைரியம் வந்தது என்று எனக்கே புரியவில்லை! அங்கு போவதற்கு இந்தக் கத்தியும் வில்லும் எதற்கப்பா? அங்கு இந்த வில்லையும் கத்தியையும் உபயோகப்படுத்துவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்காதே! நீங்கள்தான் அங்கு போனவுடன் சிலையாக மாறி விடுவீர்களே! அங்கு எனக்குத் தெரிந்தவரையில் ஒருவரும் போனதில்லையே!" என்றான் சேவகன். (தொடரும்)

## கோமாளியின் தைரியம்!



(சென்ற வாரத் தொடர்ச்சி)

# சந்திரமதி




4

வாழ்க்கையில் நம்முடைய குணத்தைச் சோதிக்கக் கூடிய சில சந்தர்ப்பங்களேற்பட்டுவிடுகின்றன; அந்தச் சந்தர்ப்பங்களில் தீரத்துடன் நடந்து கொள்ள நாம் தவறி விடுகிறோம். பிறகு வாழ்நாள் முழுவதும் "அடாடா! அப்படிச் செய்தோமா! இப்படிச் செய்தோமா!" என்று கவலைப்படுகிறோம்.

கறுப்பு மீசைக்காரன் என்னைப் பயமுறுத்திய போது, "போ! உன்னாலானதைச் செய்து கொள்; நான் வாக்குறுதி ஒன்றும் கொடுக்க மாட்டேன்" என்று சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அப்படிச் சொல்லவில்லை. "எனக்கென்ன, அப்பா, வந்தது! உங்கள் வினை உங்கள் தலையோடே! நான் ஒருவரிடமும் சொல்லவில்லை" என்றேன். கறுப்பு மீசைக்காரன் அது போதாது என்று சொன்னான். அவன் இஷ்டப்படியே "சத்தியமாய்" என்று சொல்லித் தலையில் அடித்துக் கொடுத்தேன்.

பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் சிலர் இம்மாதிரி சத்தியம் செய்து கொடுக்கையில் ஒரு விசித்திர முறையைக் கையாளுவார்கள்.

"இன்றைக்குப் பள்ளிக்கூடம் லீவுடா!" என்பான் ராமன்.

"என்னடா லீவு!" என்பான் குப்பன்.

"வாத்தியாருக்கு வாந்திபேதிடா!" என்பான் ராமன்.

"சத்தியமாய்ச் சொல்லடா!" என்பான் குப்பன்.

"சத்தியமாய்ச் சொல்றேன்" என்பான் ராமன்.

கடைசியில் மணியடித்ததும் வாத்தியார் வந்து வகுப்பில் உட்கார்ந்தவுடன் குப்பன் கோபமாக, "ஏண்டா, சத்தியமாய்ச் சொன்னாயேடா!" என்பான்.

"நான் எங்கேடா சத்தியமாய்ச் சொன்னேன்! மனத்திற்குள் 'அ' சேர்த்துக் கொண்டுதானே சொன்னேன்!" என்பான் ராமன்.

இந்த மாதிரி 'அ' மனத்திற்குள் சேர்த்துக் கொண்டு சொல்லக்கூட அப்போதிருந்த நிலையில் எனக்கு யுக்தி தோன்றவில்லை. ஆகவே, அந்த மதகடி சம்பாஷணையை நான் யாருக்கும் சொல்லவில்லை. கடவுள் மேல் பாரத்தைப் போட்டு, "நடப்பது நடந்தே தீரும்" என்ற ஒரே தீவிரமான உறுதியுடன், என் காரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அந்த சம்பாஷணை இன்னதென்பதை இங்கே நான் எழுதினாலும், சத்தியத்தை மீறியதாகும் என்றே பயப்படுகிறேன். ஆதலின், பின்னால் நடந்த சம்பவங்களை மட்டும் கதையைப் போல் எழுதிச் சொல்கிறேன். அவற்றிலிருந்தே, மேற்படி சம்பாஷணையின் போக்கை நீங்கள் ஊகித்து அறிந்து கொள்ளலாம்.

"நாரதம்" என்னும் நூலில் கந்தர்வ லோகத்தில் நடைபெறும் மதனன் விழாவைப் பற்றிப் படித்திருப்பீர்கள். எங்கள் ஊர் குடியானவத் தெருவிலும் மாசி மாதத்துப் பௌர்ணமியன்று காமன் பண்டிகை கொண்டாடுவார்கள். கந்தர்வலோக விழாவிலுள்ள காவிய ரஸம் இங்கே கிடையாது. 'நுண்வான்' கொண்டமைக்கப்பட்ட பதுமைகள், 'சைத்ரிக' ஜீவன் பெற்ற சித்திரங்கள், மாட நிலத்து மண்டபங்கள், ஸூரியக் காந்தக் கல் மேடைகள், சௌந்தரியமே உருவெடுத்த கந்தர்வ யுவர்கள், யுவதிகள், அவர்கள் இணையிணையாக வட்டங்களிட்டுக் கூத்தாடும் காட்சிகள் முதலியவற்றை எங்கள் ஊர் மதனன் விழாவில் பார்க்க முடியாது. ஆனால் கந்தர்வ லோகத்துக்கும் மண்ணுலகத்துக்கும் பொதுவான அம்சம் ஒன்று மட்டும் உண்டு. அதுதான் பூரணச் சந்திரனின் மோகன நிலவு. குப்பை கூளங்கள் நிறைந்து தரித்திரம் தாண்டவமாடும் எங்கள் கிராமத்திலேகூட மாசி மாதத்துப் பௌர்ணமியன்று இரவு சௌந்தர்ய தேவதை கொலுவீற்றிருப்பாள்.

இன்னொரு விதத்திலும், கந்தர்வலோக மதனன் விழாவுக்கும் எங்கள் ஊர் மன்மதசாமி உற்சவத்துக்கும் ஒற்றுமை உண்டு; அதாவது அவ்விழாவில் கலந்து கொள்வோர் காட்டும் உற்சாகத்தில், தொண்டு கிழவர் முதல் குஞ்சு குழந்தைகள் வரையில் இரவு முழுவதும் மெய்ம் மறந்த களிப்புக் கடலில் மூழ்கியிருப்பார்கள்.

தந்தத்தைத் தோற்கடிக்கும் தாவள்யமான தென்னங் குருத்துக்களைக் கொண்டு சப்பரம் கட்டுவார்கள். அதில் சிவபெருமான் படம் ஒன்றை வைத்து ஊர்வலம் விடுவார்கள். சப்பரத்துக்கு எதிரில் இரண்டு பையன்களுக்கு மன்மத வேஷமும், ரதி வேஷமும் போட்டு நிறுத்தியிருப்பார்கள். மன்மதன் ஒரு கையில் வில் வைத்துக் கொண்டு பாணம் விடுவது போல் சைகை காட்டிக் கொண்டு இருப்பான். ரதி "வேண்டாம், வேண்டாம்" என்று சமிக்ஞை காட்டிக் கொண்டு இருப்பாள். இப்படி ஊர்வலம் விட்டு, இரவு பின் ஜாமத்தில் வெள்ளி முளைக்கும் நேரத்தில் மன்மதசாமி கோவிலுக்கு வந்து சேருவார்கள். பிறகு, மன்மத தகனம் நடக்கும். பின்னர், எல்லாரும் கும்பலாய்க் குளத்துக்குச் சென்று ஸ்நானம் செய்து விட்டு வீடு திரும்புவார்கள்.

யாரோ முன்னர் எழுதியிருந்தார்களே, அது போல் சிவபெருமான் சிறந்த ரசிகர் என்பதில்

'ஆனந்த விகடனி'ல் 8-3-1936 இல் வெளி வந்தது.

சந்தேகமில்லை. பாருங்கள், அவர் மன்மதனுடைய உடலை எரித்து விட்டு, அவனுடைய சக்தியை மட்டும் உலகத்தில் விட்டு வைத்திருக்கிறார்! இதற்குப் பதிலாக, அவர் மன்மதனுடைய உடலைச் சும்மா விட்டு விட்டு, அவனுடைய சக்தியை அழித்திருந்தாரானால், உலகம் எவ்வளவு வெறுமையாய்ப் போயிருக்கும்! வாழ்க்கை எவ்வளவு விரஸமாகியிருக்கும்!

மன்மத தகனம் நடைபெற்ற அன்றிரவிலேயே வேறொரு பக்கம் அவனுடைய சக்தி வேலை செய்து கொண்டிருந்தது. எங்கள் கிராமத்துக்கு மேற்கே அரை மைல் தூரத்தில் பெரிய சாலை போகின்றது. அதற்குக் கிராமத்திலிருந்து கிளைப் பாதை வழியாகப் போக வேண்டும். கிளைப் பாதை பெரிய சாலையுடன் சேரும் இடத்தில் இரு புறமும் மரங்கள் அடர்த்தியாயிருக்கின்றன. அவ்விடத்தில் அன்று இரவு வெள்ளி முளைக்கும் நேரத்தில் ஒரு மோட்டார் வண்டி நின்று கொண்டிருந்தது. அதிலே டிரைவருடைய ஆசனத்தில் துரையப்பன் உட்கார்ந்திருந்தான். கிளைப் பாதையை அவன் அடிக்கடி நோக்கிக் கொண்டிருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் கிளைப் பாதையில் இரண்டு உருவங்கள் தென்பட்டன. அவை அருகில் நெருங்கியபோது, சந்திரமதியும் நாகரத்தினமும் என்று தெரிய வந்தது. மேற்குத் திசையில் அடிவானத்தில் இறங்கிக் கொண்டிருந்த வெளிறிய சந்திரனின் ஒளி சந்திரமதியின் முகத்தில் பட்டபோது, அவளுடைய இதழ்களில் புன்னகையும் கண்களில் நீர்த் துளியும் இருப்பது தெரிய வந்தது. அந் நீர்த் துளிகளில் சில சமயம் நேராகச் சந்திர கிரணங்கள் விழுந்தபோது, அவை ஒளி வீசும் முத்துக்கள் போல் பிரகாசித்தன.

மோட்டாரின் அருகில் அவர்கள் வந்ததும், துரையப்பன் இறங்கிக் கதவைத் திறந்தான். சந்திரமதி பின் ஆசனத்திலும், நாகரத்தினம் துரையப்பனுக்குப் பக்கத்திலும் உட்கார்ந்தார்கள். வண்டி கிளம்பிற்று; அதே சமயத்தில் தூரத்தில் நெருப்பின் ஜுவாலை கிளம்புவது தெரிந்தது; மன்மத தகனத்தின் கோலாகல சப்தமும் வந்து கொண்டிருந்தது.

## 5

மோட்டார் வண்டி கிராமாந்தரங்களையெல்லாம் கடந்து சென்று காலை சுமார் பத்து மணிக்குத் தஞ்சாவூரை நெருங்கிற்று. அப்போதெல்லாம் பட்டணங்களைச் சுற்றிலும் சுங்கச் சாவடிகள் உண்டு. மோட்டார் வண்டிக்காரர்கள் சில சமயம் ஏமாற்றி விடுகிறார்கள் என்பதற்காக, தூரத்தில் வண்டிச் சத்தம் கேட்கும்போதே, ஒரு நீளமான மூங்கிலை எடுத்துச் சாலையின் குறுக்கே மாட்டி விடுவார்கள். வண்டிகள் நின்றுதான் ஆக வேண்டும். துரையப்பன் மோட்டாரும் சுங்கம் கொடுப்பதற்காக நின்றது. அதே நிமிஷத்தில், சுங்கச் சாவடிக்கு அருகிலிருந்த வெற்றிலைப் பாக்குக் கடையிலிருந்து இரண்டு மனிதர்கள் வந்தார்கள். அவர்கள் வேறு யாருமில்லை—கறுப்பு மீசைக்காரனும் நல்லானும்தான்!

துரையப்பன் திகைத்துப் போனான். சுங்க ரசீது கிடைத்தது. மூங்கிலையும் எடுத்தாகி விட்டது. ஆனால் துரையப்பன் வண்டி ஓட்டவில்லை.

அக்கரையான் தன்னுடைய பொடி டப்பியை எடுத்து, ஓர் உறிஞ்சு உறிஞ்சினான். பிறகு, கையை உதறிக்கொண்டே "ஏன் தம்பி, தாமதம்! ஓட்டுங்க; எங்கே போகலாமென்று உத்தேசித்து வந்தீர்களோ, அந்த இடத்துக்கே ஓட்டுங்க" என்றான். இதற்குள் வேடிக்கை பார்க்க ஜனங்கள் வந்து கூடி விட்டார்கள்.

அங்கு நிற்பதில் பயனில்லையெனக் கண்ட துரையப்பன் வண்டியை விட்டுக் கொண்டு சென்றான். பட்டணத்துக்குள் ஒரு சந்தில் நுழைந்து பூட்டியிருந்த ஒரு வீட்டுக்கெதிரில் நிறுத்தினான். நாகரத்தினத்தினிடம் சாவியைக் கொடுத்துத் திறக்கச் சொன்னான்.

எல்லாரும் வண்டியிலிருந்து இறங்கினார்கள். துரையப்பன் மட்டும் தயங்கினான். கறுப்பு மீசைக்காரன் அவனுடைய கையைப் பிடித்து, "வாங்க தம்பி, வாங்க!" என்று கூறி இறக்கினான்.

உள்ளே போய் எல்லாரும் உட்கார்ந்த பிறகு, அக்கரையான், "தம்பி, இப்பொழுது என்ன சொல்றீங்க!" என்று கேட்டான்.

"என்னத்தைச் சொல்கிறது! இந்தப் பெண் பட்டணம் பார்க்க வேண்டுமென்றாள்; அழைத்

டி. கே. சி. மணிமொழி

பாஷா ஞானம் என்பது மிகவும் அபூர்வமான காரியம். இது விஷயமாக மேல் நாட்டாரும் ரொம்ப ரொம்பத் திண்டாடி இருக்கிறார்கள்.

ஆங்கில பாஷை இன்னது என்று தெரிய ஜான்ஸனுக்கு அநேக வருஷங்கள் ஆயிற்று. பல வருஷங்கள் கழித்துத்தான் ஆங்கில பாஷையின் உண்மையான பாவம் அடிசன் எழுதிய கட்டுரைகளில் இருக்கிறது என்று தெரிய வந்தது. தான் எழுதியது எல்லாம் 'கக்கர புக்கர' பாஷைதான் என்றும் தெரிய வந்தது. முன்னாலே போகிறவன் அடி பிசகிக் கீழே விழுந்தால் பின்னால் போகிறவனுக்குத் தீவர்த்தி பிடித்த கணக்கு என்று சொல்லுவார்கள். ஆனால் ஆங்கில பாஷை சம்பந்தமாக அப்படிச் சொல்ல இடமில்லை. ஏனென்றால் பின்னால் வந்த ரஸ்கினும் அடி பிசகி விழுந்தார். செடி, கொடி, கனிமண் எல்லாவற்றையும் வாரிப் போட்டுக் கொண்டு தன்னை இன்னார் என்று காட்ட முன் வந்தார். கடைசியில் இதெல்லாம் தவறு. 'பேசுகிற பாஷையில் தான் எழுத வேண்டும்; பாஷையில் நயம் பாவம் எல்லாம் அப்போதுதான் கை வரும்' என்று அழுத்தமாய்ச் சொல்லி விட்டார்! இப்படியாக ஜான்ஸனும் ரஸ்கினும் வாக்குமூலங்கள் கொடுத்தும் ஆங்கிலேயருக்கு அவ்வளவாகப் பிரயோசனம் இல்லாமல்தான் போயிற்று! பத்து வருஷமாகத்தான் பேச்சு முறையிலே எழுத வேண்டும் என்று எழுத்தாளர் எல்லாரும் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள். இருந்தாலும் யூனிவர்ஸிடிகளில் பழைய சொக்கனே சொக்கன்தான் என்று பெர்னார்ட்ஷா சொல்லுகிறார்.

ஆகவே பாஷையின் நயம் பாவத்தை எல்லாம் சரியான முறையில் பார்த்து அனுபவிப்பவர்கள் ரொம்ப சொற்பம் மேல் நாட்டில்; இங்கே அதைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்!



# குழந்தை அவைகளை விரும்புகிறது

ஜே. பி. மங்காராமின்

# NOURISHING

நரிஷிங் பிஸ்கட்ஸ்




நரிஷிங் பிஸ்கட்டுகளை குழந்தை ருசி பார்க்கட்டும். அவைகளில் அதிகமான மணங்கவர் மணமும் இனிய ருசியும் ஆரோக்கிய மளிக்கும் வைடமின்களும் அடங்கி யிருப்பதால் அவைகளை அவன் மிகவும் விரும்புகிறான்.

வைடமின்கள் மிகுதியானது
தரமேன்மை பெற்றது

**ஜே. பி. மங்காராம் & கோ., குவாலியர்**

சென்னை ஆபீஸ்: 35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

NATIONAL M. 1

---



துக் கொண்டு வந்தேன். உங்களுக்கு இஷ்டமில்லை யென்றால், திரும்பி யழைத்துக் கொண்டு போங்கள்'' என்றான்.

"அப்படி யெல்லாம் கோபிக்க வேண்டாம், தம்பி! அப்புறம் நாட்டாண்மைக்காரர் வீட்டு எருமைக் கன்றுக் குட்டி புல்லுத் தின்னுது'' என்றான் அக்கரையான். அதைக் கேட்ட நல்லான் கொல்லென்று சிரித்தான்.

இப்படிக் கொஞ்ச நேரம் அட்டவிகடப் பேச்சு ஆன பிறகு, "அதெல்லா மிருக்கட்டும், தம்பி! மேற் கொண்டு நடக்கிறதைப் பற்றிப் பேசுங்க'' என்றான் அக்கரையான்.

"மேற் கொண்டு என்ன நடக்கிறது?''

"நீங்க சொல்லாப் போனால், நான் சொல்றேன். எப்படியும் நீங்க சந்திரமதியை இட்டுக் கொண்டு வந்து விட்டீங்க. மறுபடியும் நாங்க அவளை அழைத்துக்கிட்டுப் போகிறது நியாயமில்லை. எப்படியாவது அவள் சுகமா யிருந்தால் நாட்டாண்மைக்காரருக்குச் சந்தோஷந்தான். ஆனால் அந்தப் பெண்ணை வளர்க்கிறதற்கு அவர் ரொம்பப் பாடு பட்டிருக்கிறார். ஒரு மூவாயிரம் ரூபாய் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் பிறகு ஜாம்ஜாமென்று அவளை அழைத்துக் கொண்டு போங்க. அவ்வளவுதான்; நாங்க சொல்றது.''

துரையப்பன் கொஞ்ச நேரம் யோசனை செய்தான். "சரி, மூன்று நாள் எனக்குச் சாவகாசம் கொடுங்கள். பணம் கொண்டு வருகிறேன்'' என்றான். இதற்கு அவர்கள் சம்மதிக்கவே, துரையப்பன் வெளியேறி மோட்டாரைச் செலுத்திக் கொண்டு சென்றான். அவனுடைய பெட்டி மட்டும் இவர்களிட மிருந்தது.

இதெல்லாம் திங்கட்கிழமை நடந்தது. செவ்வாய், புதன், வியாழன் வரையில் அந்த வீட்டிலேயே இருக்கத் தீர்மானித்திருந்தார்கள். அவர்களுடைய உத்தேசம் என்ன வென்பதை வாசகர்களே ஊகித்திருக்கலாம். துரையப்பன் பணங் கொண்டு வருவான், அதை வாங்கிக் கொண்டு அவனை நன்றாய் அடித்துப் போட்டு விட்டு மற்றவர்கள் எல்லாரும் ஊருக்குத் திரும்பி விடலாம் என்று எண்ணி யிருந்தார்கள். ஆனால், சந்திரமதி அதற்குக் குறுக்கே நின்றாள். துரையப்பன் போனதிலிருந்து அவள் கண்ணீர் விடத் தொடங்கி விட்டாள். நாளாக ஆக, அவளுடைய துக்கம் அதிகமாயிற்று. துரையப்பன் திரும்பி வரும் போது தான் அங்கு இருக்க முடியாதென்றும், இருந்தால் கட்டாயம் அவனிடம் உண்மையைக் கூறி ஓடிப் போகச் சொல்வாளென்றும் கூறினாள். கடைசியாகப் புதன் கிழமையன்று அவளை ஊருக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தார்கள். நல்லானுக்குத் தனியாக இருந்து சமாளிக்கத் தைரியமில்லை. அக்கரையானைத் தனியே விட்டுப் போனால் மூவாயிரம் ரூபாயும் தன்னிடம் ரொக்கமாக வரவேண்டுமே யென்ற பயமும் இருந்தது. ஆகவே, நாகரத்தினத்துடன் அவளை ஊருக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தார்கள்.

புதன்கிழமை காலையில் நாகரத்தினமும் சந்திரமதியும் திருநாகேசுவரத்துக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு தஞ்சாவூர் ஸ்டேஷனில் ரயில் ஏறினார்கள். துரையப்பனை அடித்து ஹிம்சிக்கக் கூடாதென்று சந்திரமதி நூறு தடவை மன்றாடி நல்லானிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டாள். ஆனால் அக்கரையான் வாய் திறக்கவில்லை.

வியாழக் கிழமை பொழுது விடிந்ததிலிருந்து, துரையப்பன் வருவான் வருவான் என்று நல்லானும் கறுப்பு மீசைக்காரனும் எதிர்பார்த்தார்கள். அவன் வரவேயில்லை. "ஓகோ! பையன் ஏமாற்றி விட்டான்'' என்று அப்போது தான் அவர்களுக்குத் தோன்றியது. உடனே இரண்டு பேருக்கும் ஒருவித பயம் உண்டாகி விட்டது. ஒரே மூச்சாக அவர்கள் இருவரும் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று ரயிலேறினார்கள்.

## 6

**வா**சகர்களுடைய மனத்தில் நெடு நேரமாயிருந்து வரும் சந்தேகத்தை இப்போது நிவர்த்தி செய்கிறேன். "ஏதோ அருகில் இருந்து பார்த்தது போல் சொல்கிறீர்களே, இவ்வளவு விவரமும் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்பீர்கள். கறுப்பு மீசைக்காரனும் நல்லானும் ஒன்று விடாமல் எனக்குச் சொல்லித்தான் தெரிந்து கொண்டேன். சனிக்கிழமையன்று அவர்கள் என்னைத் தேடி வந்ததற்குக் காரணம், நாகரத்தினமும் சந்திரமதியும் அன்று வரையில் ஊருக்கு வந்து சேராததுதான்!

அதனால் இரண்டு பேரும் எவ்வளவு திடுக்கிட்டுப் போயிருக்க வேண்டும், எவ்வளவு கவலைக்குள்ளாகியிருக்க வேண்டும் என்று நான் சொல்ல வேண்டியதில்லை. அதனால்தான், அதுவரையில் என்னைத் திருணமாக மதித்திருந்த அக்கரையான் என்னைத் தேடிக் கொண்டு வந்தான். "ஸார்! மோசம் போய்விட்டது, ஸார்! நீங்கள்தான் யோசனை சொல்ல வேண்டும், ஸார்!" என்றான். நல்லானோ பேசக்கூட முடியாதவனாகச் சோகக் கடலில் மூழ்கியிருந்தான்.

அவர்கள் எல்லா விவரமும் சொன்ன பின்னர், நாகரத்தினத்துக்கும் சந்திரமதிக்கும் என்னதான் நேர்ந்திருக்குமென்று அவர்கள் நினைக்கிறார்கள் என்பதாய்க் கேட்டேன். துரையப்பன் ஆள் பலத்துடன் வழியில் அவர்களைச் சந்தித்து, நாகரத்தினத்தைக் கொன்று விட்டு, சந்திரமதியைக் கொண்டு போயிருப்பானென்று அவர்கள் நினைத்தார்கள். உண்மையில் சந்திரமதியைப் பற்றி நான் அவ்வளவு கவலைப் படவில்லை. நாகரத்தினத்தைப் பற்றித்தான் வருத்தப் பட்டேன். அந்தப் பையனும் இந்த துஷ்டர்களுடைய சதியாலோசனையில் சேர்ந்ததற்காக எனக்கு என்னதான் வருத்தமிருந்த போதிலும் அவன் மேல் அபிமானமும் இருந்தது.

"ஏதோ என்னாலானதைப் பார்க்கிறேன்; நீங்கள் ஒன்றும் வெளியில் சொல்ல வேண்டாம். சந்திரமதி மாமன் ஊருக்குப் போயிருப்பதாகவே இருக்கட்டும்" என்று கூறி அவர்களை அனுப்பி விட்டு, உடனே பக்கத்து ஊர் மிராசுதார் வீட்டுக்குப் போனேன். அவரிடம் பல விஷயங்களையும் பற்றிப் பேசி விட்டு, "துரையப்பன் இப்போது எங்கே இருக்கிறான்? சௌக்கியமாயிருக்கிறானா?" என்று கேட்டேன்.

அவர், "அதை ஏன் கேட்கிறீர்கள், போங்கள்! அவனால் எங்களுக்கு ரொம்பத் தொல்லையாகி விட்டது. இங்கே காமன் பண்டிகையன்றைக்கு மோட்டாரில் வந்திருந்தான். மறுநாள் காலையில் பார்த்தால் ஆளைக் காணோம். சொல்லாமல் போய் விட்டான். பல இடங்களுக்கும் கடிதம் போட்டதில் இன்றுதான் தகவல் வந்தது. பையன் திருநெல்வேலியில் அவனுடைய மாமனார் வீட்டில் இருக்கிறானாம். உடம்பு கூடக் கொஞ்சம் அசௌக்கியமாம்" என்றார். கடிதத்தை எடுத்து நானே பார்த்தேன். திருநெல்வேலியில் புதன் கிழமை தான் அந்தக் கடிதம் தபாலில் போடப்பட்டிருந்தது.

விஷயம் எனக்கு விளங்கி விட்டது. துரையப்பன் கறுப்பு மீசைக்காரனைக் கண்டு பயந்து போய் விட்டான். "உடம்பு வேண்டாம்; கையை விட்டால் போதும்" என்று எண்ணி இந்தப் பக்கத்திலேயே இல்லாமல் ஓடி விட்டான். இன்னொரு விவரமும் அவனைப் பற்றி எனக்குத் தெரிந்தது; அவனுக்குக் கலியாணம் ஏற்கனவே ஆகியிருக்கிறதென்று. இது தெரியாமலல்லவா, அவன் சந்திரமதியைச் சுற்றி அலைவது பற்றி நான் கோபங் கொள்வதற்குப் பதில் சந்தோஷமடைந்தேன்! என்ன மதியீனம்!

## 7

துரையப்பன் கதை தீர்ந்தது; எப்படியாவது அவன் நாசமற்றுப் போகட்டும். ஆனால் நாகரத்தினமும், சந்திரமதியும் என்னவானார்கள்! அவர்களுக்கு வழியில் வேறு என்ன விபத்து நேர்ந்திருக்கக்கூடும்! நல்ல குழப்பமாயிற்றே!

அப்புறம் சில தினங்கள் வரையில் எனக்கு வேறு எதிலும் புத்தி செல்லவில்லை. வீட்டிலும் வெளியிலும், ஆற்றங்கரையிலும், இலுப்பந் தோப்பிலும், எங்கே எதைப் பார்த்தாலும் சந்திரமதியின் ஞாபகமே வந்து கொண்டிருந்தது. உடன், நாகரத்தினத்தின் ஞாபகமும் சேர்ந்தே வந்தது. சிறிது சிறிதாக என் மனத்தில் ஒரு சந்தேகம் உதிக்கலாயிற்று. ஒரு வேளை...! அப்படியும் இருக்குமா! அவ்வளவு நெஞ்சழுத்தக்காரர்களா அவர்கள்!

எல்லா சந்தேகமும் அடுத்த சனிக்கிழமையன்று நீங்கி விட்டது. அன்று எனக்குப் பின் வரும் கடிதம் வந்தது. என் மாணாக்கனானதால் எழுத்துப் பிழைகளை மட்டும் நீக்கிவிட்டுக் கடிதத்தைப் பிரசுரிக்கிறேன்:—

"ஸார் அவர்களுக்குத் தங்கள் அன்புள்ள மாணாக்கன் நாகரத்தினம் அநேக நமஸ்காரம்.

தங்களுக்கு நான் அதிகமான மனக் கஷ்டத்தைக் கொடுத்தேன். என்னைப் பற்றித் தாங்கள் விபரீதமான எண்ணங் கொள்ளவும் இடங் கொடுத்தேன். மன்னிக்க வேண்டும்.

நான் என்ன செய்யலாம்? சந்தர்ப்பங்கள் அப்படி நேர்ந்தன. என்னிடம் துரையப்பப் பிள்ளையும் உதவி கேட்டார்; கறுப்பு மீசைக்காரரும் உதவி கோரினார். அவர்களுக்கு இணங்கி நடப்பதாகக் காட்டிக்கொள்ள வேண்டியது அவசியமாயிருந்தது. கடைசியில் பகவானுடைய அருளால் என்னுடைய மனோரதமே ஈடேறிற்று.

ஸ்வாமி! எனக்கும் சந்திரமதிக்கும் இன்று நேற்று நேசம் ஏற்படவில்லை. தங்கள் பள்ளிக்கூடத்தில் நாங்கள் படித்த காலத்திலிருந்து ஏற்பட்டு வளர்ந்த நேசம். ஆனால் அது கைகூடுமென்று நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. எப்படியெப்படியோ நடந்து கடைசியில் எங்கள் எண்ணம் நிறைவேறிற்று.

என்னுடைய சித்தப்பன் ரங்கூனில் இருப்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். அவர் என்னை எத்தனையோ நாளாய் வரச் சொல்லிக் கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார். நானோ சந்திரமதியைப் பிரிய மனமின்றிப் போகாமலிருந்தேன். இப்போது இரண்டு பேரும் சேர்ந்து போகிறோம்.

நாட்டாண்மைக்காரருக்கு எங்கள் பேரில் உள்ள கோபம் தணிந்து, கறுப்பு மீசைக்காரரும் ஊரை விட்டுப் போன பிறகு நாங்கள் திரும்பி வருவோமென்று தெரியப்படுத்தவும்.

உங்கள் ஆசீர்வாதத்தினால்தான் எங்களுக்கு இந்தப் பாக்கியம் கிடைத்ததாகச் சந்திரமதி தினம் நூறு தடவை சொல்கிறாள்.

இந்தக் கடிதம் கப்பலில் எழுதுகிறேன். ரங்கூனில் இறங்கியதும் தபாலில் சேர்ப்பேன். பிறகு மறுபடியும் எழுதுவேன்.

தங்கள் ஊழியன்
நாகரத்தினம்"

மேற்படி கடிதம் எனக்கு எவ்வளவு சந்தோஷம் அளித்திருக்க வேண்டுமென்று வாசகர்களுக்கு நான் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் ஒரே ஒரு வருத்தந்தான். என்னிடம் விஷயம் இப்படியென்று அந்தப் பயல் ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதா! சொல்லியிருந்தால், பின் வரும் "சந்திரமதி" பாட்டின் அடியை நான் அவனுக்குக் கற்றுக் கொடுத்திருக்க மாட்டேனா!

"நீலக் கடலினிலே-நின் நீண்டகுழல் தோன்றுதடி
கோல மதியினிலே-நின் குளிர்ந்தமுகம் காணுதடி
ஞால வெளியினிலே-நின் ஞான ஒளி வீசுதடி
கால நடையினிலே-நின் காதல் விளங்குதடி!"

FS. 463

நித்திய உபயோக
ஆடைகள்
அல்லது





ஆடம்பர
உடைகள்

எதுவாயிருப்பினும்

# டாடா 501 ஸ்பெஷல்
# அவைகளை
# சிறப்பாக
# சலவை செய்கிறது




இந்திய மூலதனத்தைக்கொண்டு,
இந்திய நிர்வாகத்தில், இந்தியா
விலேயே தயாரிக்கப்படுவது

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# சத்தியத்தின் உருவம்



தமிழ் நாட்டு மக்கள் எல்லாரும் சந்தோஷமாகக் கலைகளை அநுபவித்துக் கொண்டு வாழ வேண்டும் என்பதில் ரஸிக மணி டி. கே. ஸி. அவர்கள் கொண்டிருந்த ஆர்வமும், வாழ்க்கையில் கலந்துள்ள மூடப் பழக்க வழக்கங்களில் அவர்களுக்கு இருந்த வெறுப்பும் என்னைப் போல் எண்ணற்ற இளைஞர்களை அவர்களிடம் அன்பு கொள்ளச் செய்தன. தாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் வாலிபத் துடிப்புடன் அவர்கள் காட்டி வந்த ஊக்கம் தமிழ் மக்களின் மனத்தைக் கொள்ளை கொண்டது. அவர்களுடைய நடையில் அமைதியும், துறு துறுப்பும் நிறைந்திருக்கும். லகுவாக நடப்பார்கள். அவர்களுடைய கணீர் என்ற பேச்சும், கை ஜாடைகளும் பாவத்தோடு உண்மை உணர்ச்சியை உணர்த்தும். மிகக் குறைந்த வார்த்தைகளில் ஆழ்ந்த கருத்துடன் பேசுவார்கள்.

வாழ்க்கையில் காணுகின்ற பொய்களையும், துயரங்களையும் எதிர்த்துச் சளிப்பில்லாமல் போராடும் அவருடைய மின்னும் விழிகள் கருணை நிறைந்த முகத்திலே பிரகாசித்துக் கொண்டிருந்தன. அடாடா! அந்தக் கண்கள்தான் எப்படி எப்படி எல்லாம் தோற்ற மளிக்கும். கம்பன் கவிகளில் ஒன்றை எடுத்து அவர்கள் விளக்கும் போது அந்தக் கண்களே கவியின் பொருளை நமக்கு விளக்கி விடும். அவை ஒரு சமயம் பிரகாசிக்கும்; ஒரு சமயம் கனன்று கொண்டிருக்கும்; ஒரு சமயம் அங்கும் இங்குமாக உருட்டி விழிக்கும்; படபட வென்று இமைகளைக் கொட்டிக் கொண்டு பார்க்கும். இன்னொரு சமயத்தில் புன்னகை புரியும். வேறொரு சமயத்தில் மின்னல் போல் ஒளி வீசித் துள்ளும். அவர்கள் கண்களின் ஒளி அவர்களுடைய சொற்களுக்கு உயிர் கொடுத்தது. யாருமே மறுக்க முடியாத உண்மை, சத்தியத்தின் உருவமாக வந்து நிற்பது போல அவர்களுடைய சொற்கள் அமைந்திருக்கும்.

திருக்குற்றாலத்தில் உள்ள எட்டறை என்னும் புகழ் பெற்ற வீட்டுக்குள் ரஸிகமணி டி. கே. ஸி. அவர்கள் அமர்ந்திருக்கும் காட்சி சித்திரத்தில் எழுதிப் பார்க்க வேண்டிய அற்புதக் காட்சி. கையிலே ஏதாவது நல்ல கவிதைப் புத்தகங்களை வைத்துக் கொண்டு அதில் இருக்கும் உண்மையை, கவனம் நிறைந்த பார்வையுடன் புன்னகை புரிந்து கொண்டும், வாய் விட்டுப் பாடிக் கொண்டும், சிறு குழந்தைபோல களங்கமற்று அதை அநுபவித்துக் கொண்டும் இருக்கும் காட்சி மனக் கண் முன்னால் தெளிவாகத் தெரிகிறது. தமிழ் நாட்டின் சிறந்த பண்பெல்லாம் ஓர் உருவாய் வந்தது போல், தலையைச் சற்று சாய்த்துக் கொண்டு, அழுத்தந் திருத்தமான சொற்களில் பேசுவது நினைவுக்கு வருகிறது.




சத்தியத்தின் உருவமாகவே ரஸிகமணி டி.கே.ஸி. அவர்கள் எப்பொழுதும் காட்சி தருவார்கள். அந்த மாதிரியான மன உறுதி படைத்தவர்கள். சாதாரணமாக உடைகள் அணிவதில் உள்ள அழகைப் பற்றிச் சொல்வதிலும், கவியின் பாவத்தையும் அதன் உண்மை உருவத்தையும் பற்றிச் சின்னஞ் சிறு குழந்தையிலிருந்து உலகம் போற்றும் அறிஞர்கள் வரையில் எல்லாருக்கும் அவரவர்கள் அறிவுக்குத் தக்கவண்ணம் மணிக் கணக்காக விளக்கிக் கூறுவதிலும், விஞ்ஞானம், பூகோளம், கணிதம் முதலியவைகளை எளிமையாக எடுத்துக் கூறுவதிலும், திருக்குற்றால மலையில் நிதானமாக ஏறி இறங்கி வருவதிலும் ஒரே மாதிரியான உற்சாகத்தைக் காட்டுவார்கள். அதே உற்சாகத்துடன் மலை மீது பூத்துக் குலுங்கும் புதர்களையும், நல்ல தமிழ்க் கவிகளையும், தமிழ் மக்களையும் பார்த்து மகிழ்வார்கள்.

அவர்கள் சிரிக்கும் போது முழு உடம்பாலும் சிரிப்பார்கள். சிரிப்பு வெள்ளத்தில் மூழ்கித் திளைப்பார்கள். அதில்தான் எத்தனை மாறுதல்கள்! வாழ்க்கையின் முட்டாள் தனங்களை அலசிப் பார்க்கும் ஞானி ஒருவருக்கு இருக்கும் நுணுக்கமான நகைச்சுவை உணர்ச்சியை அவர்களுடைய கலகல வென்ற சிரிப்பிலும் புன்முறுவலிலும் காணலாம்.

தமிழ் நாட்டில் உள்ள மற்ற மக்களைவிட எவ்வளவோ உயர்ந்த நிலையில் உள்ள ஒரு மனிதர், கொஞ்சங்கூடச் சொந்த ஆசை இல்லாமல் தமிழ் மொழியிடம் இவ்வளவு அக்கறை காட்டியதை யாரும் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது.

குழந்தைகள் ஓடி ஆடி விளையாடிக் கொண்டே படிக்க வேண்டும். அதற்கு ஏற்றாற்போல் கல்வி முறையை மாற்ற வேண்டும் என்று ஓயாமல் பேசுவார்கள். ஒரு சமயம் இது விஷயமாக உபாத்தியாயர்கள் மத்தியில் பேசிக் கொண்டிருந்தார்கள். சொல்லலங்காரத்துடன் பேசவேண்டும் என்ற பிரயாசை எதுவும் இல்லாமல் மிகத் திருத்தமாகப் பேசினார்கள். முன் பக்கமாகத் தம் கையை நீட்டி, அதைச் சற்று மேல் நோக்கி ஏந்திக் கொண்டு பேசினார்கள். அப்பொழுது ஒவ்வொரு வார்த்தையையும் நிறுத்துப் பார்த்து வெளியிடுவது போலவும், இதை எதிர்ப்பவர்களின் வாதங்களை எல்லாம் முறத்தில் போட்டுப் புடைப்பது போலவும் இருந்தது. பேச்சின் ஒருமைப்பாடு, அதன் முழு உருவம், நேர்முகமான பிரயோகம், ஆற்றல் ஆகியவையுடன் மேடை மீது அவர்கள் நிற்கும் தோற்றம்மகத்தான ஓவியம் போல இருந்தது!

பார்த்தவர்கள் மரியாதையுடன் வணங்கும் தோற்றம். தாடியில்லாத கவி தாகூரைப் போன்ற முகம். அறிவொளி வீசும் கண்கள். எப்போதும் புன்முறுவலுடன் காட்சி யளிப்பார்கள். நல்ல விஷயங்களை அநுபவிக்கும் போது அவர்கள் முகம் சோபை பெற்றுத் திகழும். தீமை நிறைந்த இந்த வஞ்சக உலகில் அவர்கள் ஒரு வயது முதிர்ந்த கபடமற்ற குழந்தை; மிகச் சிறந்த மனிதர்; சத்தியத்தின் உருவம். அவர்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்கள் அதை எண்ணியே தங்கள் வாழ்நாள் முழுவதையும் பெருமையுடன் கழிக்கலாம். இதைவிடப் பெரிய பாக்கியம் வேறு என்ன வேண்டும்!

★ ★ ★



# கோபுர விளக்கு

ஜெகசிற்பியன்

கண்ணில் விழுந்த கரித்தூளைக் கசக்கி விட்டுக் கொண்டு, ஜன்னல் வழியே தலையை நீட்டி வெளியே எட்டிப் பார்த்தான் ராமசிவம். மேற்கு வானச் சரிவில் மிகப் பெரிய நட்சத்திரமொன்று பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. அவ்வளவு பெரிய நட்சத்திரத்தை அவன் இதுவரை பார்த்ததே இல்லை. வியப்புடன் அந்த நட்சத்திரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அதே சமயம், எதிர் பெஞ்சில் உட்கார்ந்திருந்த ஒரு பெரியவர், "பார்த்தீர்களா சார்! விடியற் சாம கருக்கல் நேரத்தில் அந்த விளக்கு எவ்வளவு ரம்யஜோதியாக எரிகிறது!" என்று சொல்லிக் கொண்டே, விளக்கு எரியும் திசைப் பக்கம் திரும்பி விநய பாவத்துடன் கைகளைக் குவித்துக் கும்பிட்டார்! ராமசிவத்துக்கு அந்தப் பெரியவரின் பேச்சும் செயலும் வியப்பை அளித்தன. "விளக்கா! எதைச் சொல்கிறீர்கள்!" என்று நையாண்டிக் குரலில் கேட்டான்.

"இந்தப் பக்கம் பிரயாணம் செய்வது இது தான் முதல் தடவையா!" என்றார் பெரியவர்.

"இல்லை!" என்றான்.

"நன்றாகப் பார் அது விளக்குதான்! நடராஜர் கோயில் கோபுரத்தின் மீது எரியும் விளக்கு!"

ராமசிவத்துக்குத் தன் மீதே ஒருவித சலிப்பு ஏற்பட்டது. இந்த வண்டியில் அவன் பலமுறை பிரயாணம் செய்திருக்கிறான். ஆருத்ரா தரிசனத்துக்காக அவன் தன் மனைவியுடன் இந்த ஊருக்கு வந்து போனது அத்தனை சீக்கிரம் மறந்து விடும் சம்பவமா! கோயில் கோபுரத்தின் மீது எரியும் மின்சார விளக்கைப் பற்றியும் அவன் அறியாதவனல்ல. இருந்தும், இன்று சிறு பிள்ளையைப் போல, அந்த விளக்கைப் பார்த்துப் 'பெரிய நட்சத்திரம்' என்று நினைத்து விட்டான் ராமசிவம்.

இப்படி அவசரப்பட்டு, ஆழ்ந்து யோசியாமல், எதற்கும் ஒரு முடிவைக் கொண்டு விடுவது அவனது இயற்கைக் குணம் போலாகி விட்டது. இதனால், அவன் அனுபவித்த இடைஞ்சல்கள், மனத்துயரங்கள், கேடுபாடுகள் எவ்வளவோ! இதோ, இன்று பிரயாணம் செய்கிறானே; இந்தப் பிரயாணத்துக்குக் காரணமும் அவனுடைய அவசர முடிவு ஒன்றின் விளைவுதான்! எப்படியோ, இன்று காலைதான் அவனுக்கு ஞானோதயம் பிறந்தது. உடனே, பிறந்தகத்திலிருக்கும் தன் மனைவியை அழைத்து வர ஓடுகிறான்!

★

அன்று ஞாயிற்றுக் கிழமை.

காலையில் படுக்கையை விட்டு எழுந்ததும் வெறும் வயிற்றில் ஒரு தம்ளர் காப்பியை ஊற்றிக் கொண்டு வராந்தாவில் கிடந்த சோபாவில் சாய்ந்தவாறு அன்றைய தினப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தான் ராமசிவம். கோமதியும் அவன் தாயாரும் அடுப்படியில் பலகாரம் தயாரிப்பதில் வெகு மும்முரமாக ஈடுபட்டிருந்தனர்.

கோமதியின் தாய் லட்சுமி அம்மாள், மருமகன் வீட்டுக்கு வந்து மூன்று நாட்களாகின்றன. அவளுடன், அவள் தம்பி நாராயணனும் வந்திருந்தான். நாராயணனுக்குப் பம்பாயில் உத்தியோகம். பதினைந்து நாள் லீவில் மாயவரத்துக்கு வந்தவன், இப்போது மீண்டும் பம்பாய்க்குப் புறப்பட்டிருக்கிறான். போகும் வழியில், சென்னையிலிருக்கும் கோமதியையும் பார்த்து விட்டுப் புறப்படலாம் என்ற திட்டத்துடன் இங்கு வந்தவன், கோமதியும் அவள் தாயாரும் மிகவும் வற்புறுத்தவே இரண்டு நாள் அதிகமாகவே தங்கி விட்டான்.

நாராயணன், இயற்கையிலேயே எல்லோருடனும் சகஜமாகப் பழகும் சுபாவமுள்ளவன். சிரிக்கச் சிரிக்கப் பேசிச் சிறு பிள்ளையைப்போல எல்லோருடைய மனத்தையும் கவர்ந்து விடுவான்.

ஒரு காலத்தில், நாராயணனுக்கும் கோமதிக்கும் முடிச்சுப் போட்டுவிட வேண்டுமென்ற

பேச்சு அவர்கள் குடும்பத்தில் நிலவி வந்தது என்னமோ உண்மைதான். ஆனால், அதெல்லாம் இப்போது கனவாகி விட்ட ஒரு பழங்கதை! கோமதியும் நாராயணனும் ஒரே நிறையான வயதுள்ளவர்களா யிருந்ததால், அவர்களை ஒன்றுக்கும் பேச்சுக்குக் குடும்பத்தில் ஆதரவு கிடைக்கவில்லை! அது கனவாக, காற்றாக மறைந்தே விட்டது! கோமதிக்கு ராமசிவம் கணவனாக வாய்த்தான்; நாராயணனுக்குக் காஞ்சனா என்ற பெண் இன்னும் இரண்டொரு மாதத்தில் மனைவியாகப் போகிறாள். அது விஷயமாகத்தான் இப்போது நாராயணன் மாயவரத்துக்கு வந்து போகிறான். கோமதிக்கு ராமசிவம் என்று நிச்சயமானவுடனேயே அவள் மனத்திலிருந்த நாராயணனின் எண்ணம் துப்புரவாகத் துடைத்தெறியப் பட்டு விட்டது. நாராயணனும் அப்படியே செய்து கொண்டான்.

நாராயணனுக்குக் கோமதியைத் திருமணம் செய்துகொடுக்கும் எண்ணம் இருந்த செய்தி, ராமசிவத்துக்குத் தெரியும். கல்யாணமான புதிதில், கோமதியே ஒருநாள் அவனுக்கு இதைச் சொல்லியிருக்கிறாள். இந்தச் செய்தியை அறிந்தது முதல், நாராயணன்மீது ராமசிவத்துக்கு ஒருவித குரோத மனப்பான்மை ஏற்பட்டது.

இப்பேர்ப்பட்ட ஒருவனின் வீட்டில்தான், நாராயணன் சென்ற மூன்று நாட்களாக வந்து தங்கியிருக்கிறான். இந்த மூன்று நாட்களும் ராமசிவம் பட்ட அர்த்தமற்ற மன அவஸ்தைகள் கொஞ்ச நஞ்சமில்லை! ஏதோ ஒரு விவரிக்க முடியாத பயத்தால், சென்ற மூன்று நாட்களாக அவன் காரியாலயத்துக்குக் கூடப் போகாமல், என்னமோ நொண்டிச் சாக்கு சொல்லி லீவு எடுத்துக்கொண்டு, அப்படி இப்படி அசையாமல் வீட்டிலேயே இருக்கிறான்! சமையல் கட்டிலிருந்து கோமதி வெளியே வரும்போதெல்லாம் அவளைக் கண்ணிமைக்காமல் கவனிப்பதிலேயே அவன் தன் முழு நேரத்தையும் செலவிட்டான்!

அவனுடைய இந்தப் பரிதாப நிலையை அறிந்து கொண்டு தானோ என்னவோ, நாராயணன் இன்று இரவே பம்பாய்க்குப் புறப்படுவதற்கு ஆயத்தம் செய்யலானான்.

★

ராமசிவம் தினப் பத்திரிகையைப் பிரித்து வைத்துக் கொண்டிருந்தானே தவிர, அவன் கவனமெல்லாம், சமையல் கட்டில் வேலையாயிருக்கும் கோமதியின் மீதும், கூடத்து அறையில் பெட்டி படுக்கைகளைக் கட்டிக் கொண்டிருந்த நாராயணன் மீதுமே பதிந்திருந்தது!

கோமதி அன்று என்றுமில்லாத சுறுசுறுப்புடன் வேலைகள் செய்து கொண்டிருந்தாள். ஆனால், அவள் முகம் சற்றே வாட்ட முற்றிருப்பது போல் ராமசிவத்துக்குத் தோன்றியது.

சமையல் கட்டிலிருந்து வியர்க்க விறுவிறுக்க வெளியே வந்த கோமதி, நேரே நாராயணனிடம் சென்று "குளிக்கும் அறையில் வென்னீர் வைத்திருக்கிறேன். போய்க் குளித்துவிட்டு வாருங்கள். பலகாரம் தயாராகி விட்டது!" என்று இனிமையான குரலில் மென்முறுவலுடன் சொன்னாள். "அப்படியே ஆகட்டும்" என்று குழந்தைபோல் குழைவாகச் சிரித்துக்கொண்டே கூறிக் குளிக்கும் அறையை நோக்கி நடந்தான் நாராயணன்.

இந்த சம்பாஷணையை வராந்தாவிலிருந்தவாறு கேட்ட ராமசிவத்துக்குத் தேள் கொட்டியது போலாகியது!

கோமதி அங்கிருந்து வராந்தாவுக்கு வந்தாள். "இன்றைக்கு உங்களுக்கு வென்னீர் இல்லை! கிணற்றடிக்குப் போய் சுகமாகக் குளித்துவிட்டுச் சீக்கிரமாக வந்து சேருங்கள்!" என்றாள். அவள் கண்ணிமைகள் ஓர் அன்புச் சிமிட்டல் சிமிட்டின.

ராமசிவம் இதைக் கேட்டுக் கொதித்து விட்டான். அவன் முகம் ஜிவ்வெனச் சிவந்து கன்றி விட்டது. தன்னை வேண்டுமென்றே கோமதி அவமானப்படுத்துகிறாள் என்று அவனுக்குப்பட்டது. மிகுந்த சிரமத்துடன் அடக்கிக் கொண்டு விசுக்கென எழுந்து கிணற்றடிக்குச் சென்று விட்டான்.

அன்று மத்தியானம் வரை, ராமசிவம் வயிற்று வலி கண்ட வேங்கைபோலக் கூடத்து அறைக்கும் வராந்தாவுக்குமாக உலாவிக் கொண்டிருந்தான். பலகாரம் சாப்பிட்டு விட்டு, ஏதோ சாமான்கள் வாங்கி வர வெளியே சென்றிருந்த நாராயணன், சரியாக ஒரு மணிக்கு வீடு வந்து சேர்ந்தான். வந்ததும் வராததுமாக, அவனைச் சாப்பிட அழைக்க வந்து விட்டாள் கோமதி. ராமசிவத்துக்கு நெஞ்செல்லாம் பரபரவெனப் பற்றி எரிந்தது!

நாராயணனும் ராமசிவமும் இலைக்கு எதிரே வந்து அமர்ந்தனர். கோமதி சாதம் பரிமாறினாள்.



ராஜாஜி, டி. கே. சி., சதாசிவம் மூவரும் மக்கள், பேரன், பேத்திகளுடன்!

அந்த எதிர்பாராத சம்பவம் நடந்து விட்டது, அவர்கள் மூன்று பேருடைய துரதிர்ஷ்டம் என்று தான் சொல்ல வேண்டும்! நாராயணன் 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லி இடது கையை உயர்த்தித் தடுத்துக் கொண்டிருக்கும் போதே, அவனுக்கு மிகவும் பிடித்தமான வாழைக்காய்ப் பொரியலை கரண்டி நிறைய அள்ளி வலுக்கட்டாயமாக அவன் இலையில் கொட்டினாள் கோமதி. இந்தச் சமயத்தில் அவளுடைய வலக் கரம் அவனுடைய இடக்கரத்தை நன்றாகத் தீண்டி விட்டது. இதை ராமசிவம் நன்றாக—தன் இரு கண்களாலும்—பார்த்து விட்டான்! அவ்வளவு தான். அவன் கண்கள் கோவைப்பழம் போல் சிவந்து விட்டன. உடல் லேசாக ஆட்டங் கண்டது. கையில் எடுத்து உருட்டிய சாதத்தை அப்படியே இலையில் போட்டுவிட்டு, 'விலுக்'கென எழுந்து தன் அறைக்குச் சென்று விட்டான்!

வாசலில் வாடகைக்கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. மெள்ள எழுந்து உட்கார்ந்தான், ராமசிவம். அதே சமயம், நாராயணன் அவன் அறைக்கு வந்து, "நான் போய் வருகிறேன் அண்ணா!" என்று அன்பு ததும்ப விடை கேட்டான். ராமசிவத்தால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. தட்டுத் தடுமாறி, "பத்திரமாகப் போய் வாருங்கள்" என்றான். அந்தப் பேச்சில் ஏதோ ஒரு வித நிம்மதி இழைந்திருந்தது.

பாதி உடல் மறையக் கதவைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்த கோமதியைப் பார்த்து, "நான் வருகிறேன் கோமதி!" என்று குரல் கம்மச் சொன்னான் நாராயணன். கோமதி அவனை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்து விட்டு, பதிலேதும் சொல்லாமல் மௌனமாகத் தலையைக் குனிந்து கொண்டாள்! நாராயணன் மளமளவென நடந்து போய்க் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டான். கார் கிளம்புவதற்கு அறிகுறியாக உறுமியது.

அறையிலிருந்து வெளியே வந்த ராமசிவம் கோமதியின் கண்கள் கலங்கி நீர் கசிவதைப் பார்த்து விட்டான். அடுத்த கணம், அவன் கண்டத்துக்கு எங்கிருந்துதான் அத்தனை ஓங்காரக் கூச்சலிடும் பலம் வந்ததோ தெரியவில்லை. "ஏய், கோமதி! எதற்காக இப்படி மனமுருகிக் கண்ணீர் வடிக்கிறாய்! உனக்குப் பிரியமானால் இப்போதே அந்தப் பயலுடன் கிளம்பிப் போய் விடு! நான் சந்தோஷமாக முதல் வகுப்பு டிக்கட் வாங்கிக் கொடுக்கிறேன்!" என்று கர்ஜித்தான் ராமசிவம். இந்த கர்ஜனையைக் கேட்ட கோமதியும், அவளுடைய தாய் லட்சுமியம்மாளும் நடு நடுங்கிப் பதறிப் போய் விட்டனர்.

★

கோமதிக்குத் தன் கணவன் இத்தனை முரடனாகவும், முன் கோபக்காரனாகவும் இருப்பான் என்று அன்றுவரை தெரியாது. ராமசிவம் தன் வாய்க்கு வந்தபடியெல்லாம் வசை பாடி விட்டு, நேரே ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று மாயவரத்துக்கு இரண்டு டிக்கட்டுகள் வாங்கி வந்து கோமதியின் கையிலும் அவள் தாயாரின் கையிலும் கொடுத்து அன்றிரவே அவர்களை வண்டியேற்றி ஊருக்கு அனுப்பி விட்டுத்தான் மறு வேலை பார்த்தான்! கோமதி எவ்வளவோ கெஞ்சினாள்; மன்றாடினாள்; தானும் நாராயணனும் நிரபராதிகள் என்று வாதாடிப் பார்த்தாள். ராமசிவம் இதையெல்லாம் கொஞ்சமும் நம்பவோ கேட்கவோ மறுத்தே விட்டான்.

கண்ணீரும் கம்பலையுமாகப் பிறந்தகம் போய்ச் சேர்ந்த கோமதி, தன் நிலைமையை விளக்கித் தன்னை வந்து அழைத்துப் போகும்படி, கல்லும் கரையும் வண்ணமாக வாரத்துக்கொரு கடிதம் தவறாமல் எழுதி வந்தாள். ராமசிவம் அந்தக் கடிதங்களுக்குப் பதிலே எழுதவில்லை.

இப்படியே மூன்று மாதங்கள் ஓடி மறைந்தன. வாழ்க்கையில் சற்றும் பிடிப்பற்றவனாய் ஜடம் போல நாட்களைக் கடத்தி வந்தான் ராமசிவம். தொடர்ந்தாற் போல ஹோட்டலில் சாப்பிட்டு வந்ததால், அடிக்கடி அவன் நோய்ப் படுக்கையில் விழுந்து விழுந்து எழுந்தான்.

சுந்தரம் ராமசிவத்தின் பால்ய நண்பன். அவனுக்கு மனைவியாக வாய்த்தவளின் சொந்த ஊரும் மாயவரம்தான். கோமதியும் அவன் மனைவி நளினியும் நெருங்கிப் பழகியவர்கள். இதனால் தான் சுந்தரமும் நளினியும், ராமசிவத்தின் விஷயத்தில் மிகுந்த அனுதாபம் காட்டினர். சுந்தரம் ராமசிவத்துக்கு எவ்வளவோ புத்திமதி கூறியும் ராமசிவத்தின் மனமோ சிறிதும் மாறவில்லை.

அன்று காலை ராமசிவத்துக்கு நல்ல ஜுரம். தலைவலி வேறு மண்டையை உடைத்தது. இதையறிந்த சுந்தரம் ஓடோடியும் வந்து, அவனை வலுக்கட்டாயமாகத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டான். ராமசிவத்துக்குத் தேவையானதை யெல்லாம் கவனித்துச் செய்யும்

## ரசிகமணி டி. கே. சி.

தேனுக்கு தென்பொதிய
மாமலைமேல் ஏற்றிவைத்த
வானுக்கு தெய்வ
மணிவிளக்கார்—ஞானம்
விளையும் அமிழ்தமாம்
வேண்டாத(து) எல்லாம்
களையும்சி தம்பரநா தன்

வந்தாரை ஏற்று
மகிழும் மனத்தழகன்
செந்தா மரைபோல்
முகத்தழகன்—நந்தாத
மெய்சேர்ந்த சொல்லழகன்
மேலோர் சபைக்கழகன்
ஐயன் சிதம்பரநா தன்

அன்பர் தமைக்கண்டால்
ஆனந்தம் அன்பரிடம்
இன்பத் தமிழ்பாட
எக்காலம்—அன்பரெலாம்
வாரார் எனில்வருத்தம்
வந்திருந்து பின்பிரிந்தால்ச்
சோர்வாம்எம் டி.கே.சிக் கு

வீணையோ மாங்குயிலோ
வெண்சங்கோ மாணிழையார்
பாணி தவறாத
பல்லியமோ—பேணுபெரும்
மோகன வாச்சியமோ
முத்தமிழ்சேர் நற்கவிக்கு
வாகனமாய் வந்த குரல்.

—ல. சண்முகசுந்தரம்

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்

•

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் நீரிழிவு (DIABETES) என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ள வரையில் சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள், சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்தினின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறு நீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறுநீரும் குறைகிறது. 3வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்கு மேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் கிடையாது; இன்ஜக்ஷன் கிடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

•

**50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0**

*(பாக்கிங், தபால் செலவு இனாம்)*

•

**Venus Research Laboratory (K.M.)**

**POST BOX No. 587, CALCUTTA**

# விசேஷ சலுகை

**பாதி விலைக்கும் குறைவானது**

**பிரபல ஸ்விஸ் தொழிற்சாலையில் தயாரான**

**கைக் கடிகாரங்கள்**
**பாக்கெட் கடிகாரங்கள்**
**அலாரம் கடிகாரங்கள்**
**ஒவ்வொன்றும் 5 வருஷ உத்தரவாதம்**



| | | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|---|
| பாக்கெட் கடிகாரம் (ஆங்கிலோ) | ரூ. | 24/- | 12/- |
| வெளிநாட்டு அலாரம் கடிகாரம் | ரூ. | 30/- | 14/- |
| உயர்தர அலாரம் கடிகாரம் | ரூ. | 35/- | 16/- |




| | | | |
|---|---|---|---|
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. | 75/- | 36/- |
| 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோன்ஸ் | ரூ. | 90/- | 40/- |




| | | | |
|---|---|---|---|
| 15 ஜுவல்ஸ் வாட்டர் புரூப் | ரூ. | 80/- | 38/- |
| 17 ஜுவல்ஸ் வாட்டர் புரூப் | ரூ. | 90/- | 44/- |
| 21 ஜுவல்ஸ் வாட்டர் புரூப் | ரூ. | 130/- | 60/- |




| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல்ஸ் க்ரோம் (பீரஜ்) | ரூ. | 42/- | 20/- |
| 5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. | 58/- | 25/- |
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. | 70/- | 32/- |

★

**Pioneer Watch Co.**

**Post Box No. 11428, Calcutta**




அஜீரணம் வாழ்வையே துன்பமயமாக்கி விடுகிறது; வயதுக்கு மிஞ்சிய வயோதிகத் தோற்றமும் உண்டாக்கிவிடுகிறது. மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் துரிதமான நிவாரணம் தருகிறது. ஏனெனில் அது ஒரு அபூர்வச் சிறப்புடைய பௌடர்: சாஸ்திரீகமான தயாரிப்புத் திட்டப்படி பக்குவமான பொருட்சேர்க்கையுள்ள இந்தப் பௌடர் மூன்று வேலைகள் செய்கிறது—மிருதுவான இரைப்பைக்குச் சமனமூட்டுகிறது; வயிற்றுப் புளிப்பை மாற்றுகிறது; வலியையும் நிறுத்துகிறது.

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் என்று பெயரைச் சொல்லிக் கேளுங்கள். ஒவ்வொரு பாக்கெட்டிலும் Alex C. Maclean "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்ற உண்மைக் கையெழுத்தும் தத்ரூபமாக அச்சிடப் பட்டுள்ளதா என்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள்.




# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பவுடர்

எப்பொழுதும் கையில் ஒரு பாட்டில் வைத்திருங்கள்.

## ஒரு டோஸ்

அஜீரணத்தாலேற்படும் வயிற்று வலி, உடற்பருமன், இருதய எரிச்சல், வயிற்று மந்தம், வாந்தி இவற்றை சடுதியில் குணப்படுத்தும்.

MSY. 9-TAM



டி. கே. சி.யும், ராஜாஜியும் அமர்ந்திருக்கிறார்கள். இடது கோடியில் ஸ்ரீ சதாசிவம். வலது ஓரத்தில் பின்னால் நிற்பவர் ஸ்ரீ கல்கி. நால்வருடைய குடும்பத்தையும் நண்பர்களையும் படத்தில் காணலாம்.

---

படி தன் மனைவியிடம் சொல்லி விட்டு, காரியாலயத்துக்குப் போய் விட்டான் சுந்தரம்.

அந்த வீட்டில் நளினியையும் ராமசிவத்தையும் தவிர வேறு யாரும் இல்லை. சமையல் வேலையெல்லாவற்றையும் அப்படியப்படியே போட்டு விட்டு, ராமசிவத்தின் பக்கத்திலேயே இருந்து பரிசுத்த மனத்துடன் அவனுக்கு வேண்டிய சிசுருஷைகளைச் செய்து வந்தாள் நளினி. அவளுடைய இந்த உபசரிப்புகளைக் கண்டு ராமசிவத்தின் மனம் பதைபதைத்தது. தன் நண்பன் சுந்தரமும், அவன் மனைவி நளினியும் தன் ஒழுக்கத்தின் மீது எத்தனை பலமான நம்பிக்கை வைத்திருக்கின்றனர் என்று எண்ணும்போது அவன் நெஞ்சு பனிக்கட்டியாக நின்றுவிட்டது! இந்த எண்ணத்தினூடே, மூதன் முதலாக அவன் மனைவி கோமதியைப் பற்றியும் இப்போது அவன் நினைத்தான்! அன்று அவளும், இந்த நளினியைப்போல அந்த நாராயணனுடன் நடந்து கொண்டிருக்கலாமல்லவா! தன்னை ஒரு பெண் இப்போது முழுதும் நம்பியிருப்பதுபோல, தான் ஏன் ஒரு பெண்ணை நம்பக் கூடாது! நளினிக்கு ராமசிவம் பச்சையான அயலான்; கோமதிக்கு நாராயணன் கூடப் பிறக்காத முறை ஒன்றுதான் குறை!

இப்படியெல்லாம் சிந்திக்கச் சிந்திக்க ராமசிவத்துக்கு நெஞ்சு வலித்தது. இருதயம் அறுந்து போவதுபோல இரைந்தான் அவன். இருமிக் கொண்டேயிருந்தான். பிரக்ஞை தவறி விட்டது.

நீண்ட நேரம் கழித்து மெல்லக் கண் விழித்தான் ராமசிவம். தான் ஏதோ ஒரு மிக மெல்லிய தலையணையில் சாய்ந்திருப்பது போன்று உணர்ந்தான். பரக்கப் பரக்கக் கண்களை அகல விழித்தான். அவன் நளினியின் மடிமீது தலை சாய்த்துப் படுத்திருப்பது அப்போதுதான் அவனுக்கு உணர்வாயிற்று! அவனுக்கு எதிரில் கவலையே உருவாக நின்று கொண்டிருந்தான் சுந்தரம்!

நெருப்பைத் தீண்டியவன் போல சடக்கெனத் துள்ளி யெழ முயன்றான் ராமசிவம். "ராமு! இன்னும் சிறிது நேரம் அப்படியே படுத்துக் கொண்டிரு. உடம்பை அலட்டிக்கொள்ள வேண்டாம் என்று டாக்டர் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்!" என்று சுந்தரம் வாஞ்சையுடன் கூறினான். 'இந்த நிலையில் தன்னைத் தன் மனைவி கோமதி பார்த்தால் என்ன நினைப்பாள்! நிச்சயமாக என்னைப் போல் அவள் சந்தேகப்பட மாட்டாள்! ஏனென்றால், நளினியும் அவளும் ஒரே இனம்! ஆனால், நான்தான் சுந்தரத்தைப் போல இல்லை!' — ராமசிவத்தின் கண்கள் கலங்கின. அவன் வாய் அவனை யறியாமல் "கோமதி!" என்று மெல்ல முனகியது!

அன்றிரவே கோமதியை அழைத்து வர மாயவரத்துக்குப் புறப்பட்டு விட்டான் ராமசிவம்!

✱

பொழுது விடிந்து உலகெங்கும் ஒளி பாயும் நேரத்தில், வண்டி மாயவரம் ஸ்டேஷனில் வந்து நின்றது. இந்நேரம் வரை குத்துக் காலிட்டுக் குந்தியபடி, கடந்தகால எண்ணச் சுழலிலே மிதந்து கொண்டிருந்த ராமசிவம், துடித்துப் பதறி எழுந்து பெட்டி, படுக்கைகளை வாரி எடுத்துக் கொண்டு வண்டியை விட்டுக் கீழே இறங்கினான்.

அன்றிரவு சென்னையை நோக்கிப் பிரயாணம் செய்து கொண்டிருந்தனர் ராமசிவமும், அவன் மனைவி கோமதியும்.

நேற்றுப்போல இன்றும் நல்ல இருள். வண்டி சிதம்பரம் ஸ்டேஷனை நெருங்கிக் கொண்டிருந்தது. ஜன்னலோரம் உட்கார்ந்திருந்த ராமசிவம், கோமதியின் பூங்கரத்தை மிருதுவாகப் பற்றி, "கோமு! அதோ பார்! மேற்கு வானச்சரிவிலே பிரகாசமாக எரிந்து கொண்டிருக்கிறதே ஒரு விளக்கு; அதை நட்சத்திரமென்று நினைத்து விடப் போகிறாய்! அது நடராஜர் கோயிலின் கோபுர விளக்கு!" என்று கூறி முறுவலித்தான்.

தன் கணவனின் இந்த நகைச்சுவைப் பேச்சைப் புரிந்து கொள்ள முடியாமல் விழித்தாள் கோமதி!

# மறக்க முடியுமா!

எஸ். வி. எஸ்.

திருக்குற்றாலத்தில் எப்பொழுதும் தமிழ்ப் பாடல்கள் முழங்கிக் கொண்டிருக்கும். காலையில் சூரியோதமாகி விட்டால் போதும்; இரவு பன்னிரண்டு மணி, இரண்டு மணி வரைகூடத் தமிழ் முழங்கும். அருவியாவது வருஷத்தில் சில மாதங்கள் ஓய்வெடுத்துக் கொள்ளும். டி.கே.ஸி. இருந்தவரை தமிழருவிக்கு ஓய்வே கிடையாது!

டி. கே. ஸி.யின் சன்னிதானத்தில் தமிழ் கேட்க வருபவர்கள் வாழ்க்கையின் பல துறைகளில் ஈடுபட்டவர்களாக இருப்பார்கள். உத்தியோகஸ்தர்கள், நீதிபதிகள், வியாபாரிகள், பண்டிதர்கள் இப்படிப் பலவகைப் பட்டவர்களாக இருப்பார்கள் சிலர் பாமரர்களாக இருப்பார்கள். சிலர் காங்கிரஸ்காரர்களாக இருப்பார்கள். சிலர் எதிர்க் கட்சிக்காரர்களாகவும் இருப்பார்கள். ஆனால் டி. கே. ஸி. அவர்கள் சன்னிதானத்தில், தமிழ்த் தாயின் முன்னிலையில் அவர்கள் யாவரும் சமம்; எல்லோரும் ஒன்று.



ரஸிகமணி, டி. கே. ஸி.

ஒரு நாள் இப்படிப் பல துறைப்பட்டவர்கள் கூடியிருந்த சமயத்தில் பல விஷயங்களைப் பற்றிப் பேசி விட்டுக் கடைசியில், கம்ப ராமாயணப் பாடலுக்கு டி. கே. ஸி. யின் பேச்சுத் திரும்பியது. கைகேயி, தசரதனிடம் ராமனைக் காட்டுக்கு அனுப்பும்படி வரம் கேட்கிறாள். தசரதன், இம் மொழிகளைக் கேட்டு ஆவி துடித்துப் போனான். கைகேயியை இவ் வரம் கேட்காதே என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறான். அவள் பிடிவாதமாக இருக்கிறாள். அப்பொழுது தசரதனுடைய நெஞ்சத் துடிப்பு சொல்லி முடியாது! அதை வர்ணிக்கும் அற்புதமான கம்பர் பாடலை ரஸிகமணி தமக்கே உரிய பாணியில் கூறி அங்கிருந்தவர்களை யெல்லாம் நெஞ்சத் துடிப்புக் கொள்ளச் செய்து விட்டார்கள். அந்தப் பாடல் இதுதான்:

‘ஆ! கொடியாய்!’ எனும் ஆவி
காலும் அந்தோ
‘ஓ கொடிதே அறம்’ என்னும்
‘உண்மைமூற்றும்
சாக’ எனுழும் மெய் தள்—
ளாடி வீழும்
மாகமும் நாகமும் மண்ணும்
வென்றவா னான்!

‘வானுலகையும் பாதாளத்தையும் மண்ணையும் வென்ற வீரன் நிலை இப்படி!’

இந்தப் பாடலைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் தசரதனின் சோகத்தில் மூழ்கி அப்படியே பிரமை பிடித்தாற் போல் ஆகி விட்டார்கள்.

அந்த அமைதியைக் குலைக்க வந்தாற்போல், அங்கிருந்த ஒரு பண்டிதர், “‘ஆ! கொடியாய்: ஆ! என் கொடி போன்றவளே!’ என்று கூடச் சிலர் அர்த்தம் செய்யலாம் தான்” என்றார்.

டி. கே. ஸி. யைக் கேட்டுக் கொண்டிருந்த அங்கிருந்தவர்களின் காதுக்கு அது நாராசமாகி விட்டது! உடனே அவ்விடத்தை விட்டுப் போய் விட வேண்டும்போல் தோன்றி விட்டது! ‘நாங்கள் அருவிக்குப் போகிறோம்!’ ‘நேரமாகி விட்டது’ என்று ஒவ்வொருவரும் டி. கே. ஸி. யிடம் விடை பெற்றுக் கழலத் தொடங்கி விட்டனர்.

பண்டிதரும் புறப்பட்டார். “ஆமாம், ஆமாம்! நீங்கள் சொன்னபடியும் அர்த்தம் செய்யலாந்தான்!” என்று சொல்லி அவருக்கும் விடை கொடுத்து அனுப்பினார் டி. கே. ஸி.

அன்று மாலை, டி. கே. ஸி.யும் நானும் பேசிக் கொண்டிருந்த போது, காலைச் சம்பவத்தை நினைவுறுத்தி, “அந்தப் பண்டிதர் தாமும் படித்தவர் என்பதைக் காட்டிக் கொள்ள இதைவிட வேறு சந்தர்ப்பம் இல்லாமற் போய் விடுமே! அதற்காக முந்திக் கொண்டார். நானும், மற்றவர்களும் ஒன்றும் படிக்காதவர்கள், தமிழ்ப் புலமை இல்லாதவர்கள், அதனால் சும்மா இருந்தோம்!” என்றேன் சிரித்துக் கொண்டே. உடனே டி. கே. ஸி. சொன்னார்கள்:

“குறளாசிரியர் சரியாகத்தான் சொன்னார்:

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்!

“நனி நல்லர்: நல்லவர் என்பதல்ல இதற்குப் பொருள், ரொம்பப் படித்தவர்கள் என்று பொருள். அந்தக் காலத்து வழக்கு அது! ஏதாகிலும் நல்ல விஷயங்கள் சொல்லும்போது சம்பந்த மில்லாத ஒரு விஷயத்தைச் சொல்லி, சூழ்நிலையைக் கெடுப்பது அக் காலத்திலும் இருந்திருக்கும் போலிருக்கிறது. இல்லையெனில், ‘பெறின்’ என்று ஏன் அழுத்தம் கொடுத்துச் சொல்லப் போகிறார்!” என்றார் ரஸிகமணி.

“இலக்கியத்தை வாழ்க்கை யனுபவங்களுடன் ஒட்டி ரஸிக்க வேண்டும். வாழ்க்கை யனுபவம் இல்லாதவர்களுக்குக் கம்பராமாயணமும் திருக்குறளும் புரிந்துகொள்ள முடியாது. அவற்றில் கிடக்கும் உண்மை தெரியவராது!” என்று அடிக்கடி டி. கே. ஸி. அவர்கள் கூறுவார்கள். அப்படியே அவர்கள் இன்றைய அனுபவங்களை வைத்தே பழம் பெரும் உண்மைகளை விளக்குவார்கள். ரஸிகமணி வாழ்க்கையில் நிகழ்ந்த மேற்கண்ட சம்பவமும், அதையொட்டி அவர்கள் உணர்த்திய குறளும் இனி என்றைக் காவது மறப்பது என்பது சாத்தியமா!

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10. Editor: Mi. Pa. Somasundaram.

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

# அதை நிறுத்துங்கள்!

பெர்டுஸின் டெஷ்னரை உட்கொண்டு அந்த இருமலை நிறுத்துங்கள். 60 வருஷகாலமாக பெர்டுஸின் இருமலுக்கு ஓர் கைகண்ட ஔஷதமாக விளங்கிவருகிறது. கக்குவான் இருமல் உள்பட எல்லாவித இருமல்களையும் யாதொரு கொடுதியுமின்றி நொடியில் நிறுத்துகிறது. இன்றே பெர்டுஸின் வாங்குங்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும்
கிடைக்கிறது

இடாபா லிமிடெட், ஷான், லீஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனாமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட். தபால் பெட்டி 1041, பம்பாய்-1, இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY-12-TAM

REGISTERED No. M. 4392
*Registered as newspaper in Ceylon*










# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமிகளி
லிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 250-50 TM